# சிவானந்த யோகம்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா

முத்தமிழ்ப்பண்ணை 30.09/87

# சிவானந்த யோகம்

அருளியது :

சிவ-பாத-ரேணு

**ஸ்ரீ சுவாமி வெங்கடேசானந்தா**

தமிழாக்கம் :

பேராசிரியர், டாக்டர்

**திரு. ப. உருத்திரமணி, *M. A., Ph. D.,***

சிவானந்தா நூற்றாண்டு விழா வெளியீடு




## தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா

விலை] 1987 [



SIVANANDA CENTENARY PUBLICATION

*All Rights Reserved by*

THE DIVINE LIFE TRUST SOCIETY

Sivananda Nagar, (U. P.) India.

  

Translation of

# "SIVANANDA INTEGRAL YOGA"

in Tamil

  

*Printed out of the magnanimous donation of* :

BANGALORE Smt. SARASWATHI AMMAL

&

RISHIKESH Smt. T. K. PAPPAMMAL

Printed at The Literary Press, Salem - 636 001.

# பகவான் சிவானந்தருக்கு வணக்கத்துடன் வழங்கும் படையல்

பெருமானே !

அளவு படாததும், முடிவில்லாததும் ஆகிய உங்களின் சொந்த தெய்வீகப் பெருமை என்னும் நறுமணங்கமழும் இந்த எளிய மலரை அருள்கூர்ந்து ஏற்றுக் கொள்ளுக. கற்றுத் தேர்ந்த நூற்றுக்கணக்கான அறிஞர்களும், புலவர்களும் உங்களின் பெருமையைப் போற்றி நூற்றுக் கணக்கான நூல்களைப் பெரும் தொகுதி, தொகுதிகளாக எழுதக் கூடும்; எனினும் இம்மலர் அவை எல்லாவற்றையும் விஞ்சி நிற்கும்.

நீண்ட காலத்திற்கு முன்பு நீங்கள் தந்த வாக்கு உறுதியின்படி :

*''யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர்பவதி பாரத*
*அப்யுத்தான மதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம் யஹம்*
*பரித்ராணய ஸாதூனும் விநாசாய ச துஷ்க்ருதாம்*
*தர்ம ஸம்ஸ்தாபனர்த்தாய ஸம்பவாமி யுகே யுகே''*

—(கீதை : IV — 7, 8)

பரமாத்மாவாகவும், எல்லாவற்றுள்ளும் வியாபித் துள்ள சச்சிதானந்தப் பரப்பிரம்மமாகவும் உள்ள நீங்கள், மீண்டும் தர்மத்தை (அறத்தை) நிலை நாட்டுவதற்காக மானிடச் சட்டையைச் சாத்திக்கொண்டு இவ்வுலகத்திற்கு வந்துள்ளீர்கள். உலகெங்கும் உள்ள கோடிக்கணக்கான மக்களின் வாழ்வில் நீங்கள் விளைவித்துள்ள அற்புதமான மாற்றம் உங்களின் தெய்வீகத் தன்மைக்கு நிச்சயமான சான்றாகும்.

பரமாத்மாவாகிய பகவான் சிவானந்தரை மானிட நிலைக்குக் கொண்டு வரவும் (வால்மீகி முனிவர் இராமபிரா

னுடைய சரிதையைச் சொல்லும்போது இவ்வாறே செய்துள்ளார் எனினும்) யோகிகள் அனைவருக்கும் இலட்சியமாகவுள்ள யோகேஸ்வரரின் யோகத்தைப்பற்றி விளக்கவும் நான் மேற்கொண்டுள்ள என்னுடைய அசட்டுத் துணிச்சலைப் பற்றி, உண்மையில் எனக்குப் பெரும் வியப்பே ஏற்படுகின்றது. பெருமானே! உங்களின் கமலபாதங்களைப் பற்றிக்கொண்டு உங்களின் கருணைமிகுந்த மன்னிப்பை யாசிக்கின்றேன்.

இந்த நூலின் பக்கங்கள் சிலரையாவது உங்களின் சிலுவையைச் சுமக்கவும், உங்களைப் பின்பற்றவும், ஊக்குவிக்குமானால், குருதேவா! என்னுடைய இத்தகைய முயற்சி மிகவும் சரியானதாகும் என்ற மனநிறைவைப் பெறுவேன்.

சிவானந்தரின் சிலுவை என்பது என்ன?

அது, இதுதான்,




இதுவே இந்த எளிய பணியில் சிவானந்த யோகத்தின் விளக்கமாக வழங்கப்படுகின்றது.

சிவானந்தார்ப்பணமஸ்து.

சிவ-பாத-ரேணு
(சிவானந்தரின் பாததூளி)
**சுவாமி வெங்கடேசானந்தா**

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புக்கள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டுக்கான ஞானயக்ஞத் தொடரில் **'சிவானந்த யோகம்'** என்ற நூலை பேராசிரியர் டாக்டர் திரு. ப. உருத்திரமணி, M. A., Ph. D. அவர்கள் மிக மிக எளிய தமிழில் மொழி பெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda

ॐ

# பொருளடக்கம்

# சிவானந்த யோகம்

## அத்தியாயம் ஒன்று

## எல்லாவற்றுள்ளும் கொஞ்சம்

தன்னை உணர்தல் என்னும் இலக்கை அடைவதற்குரிய வகைகள் ஒன்றையோ பலவற்றையோ போதித்தும் நடைமுறையில் பின்பற்றியும் வந்த தீர்க்கதரிசிகள், முனிவர்கள், ஞானியர்கள் பலரையும் உலக வரலாற்றில் காண்கின்றோம். ஒருங்கிணைந்த யோகத்தின் தீர்க்கதரிசியாகிய குருதேவர் தான், ''எவ்வளவுதான் முயற்சியை மேற்கொண்டாலும் கூட, ஆன்மீகத்தின் ஏதோ ஒரு முறையை மட்டும் பயில்வது போதாது. ஒவ்வொரு சாதகரும் தம்முடைய ஆன்மீகத் திட்டத்தில், இறைவனை அடைவதற்கு உரிய எல்லா வகைகள் அல்லது எல்லா யோகங்களுக்கும் உரிய எல்லா அம்சங்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்'' என்று வற்புறுத்தினார்.

குருதேவர் தமக்கென்று சொந்தமான எந்த ஒரு கொள்கையையும் கொண்டிருக்கவில்லை. அருளாளர்கள் தொடக்க காலத்திலிருந்து வழங்கி வந்துள்ள அதே செய்தியைத்தான் அவர் மீண்டும் வெளியிட்டார். அவர்பால் தெய்வத்தின் உதடுகள் இருந்தன. அவர் தெய்வத்துடன் ஐக்கியமாகியவராக இருந்தார். எனினும் அவருடைய போதனையில் ஒரு கொள்கையை அசட்டுத் துணிச்சலுடன் நாம் படித்தோமானால், யோக சாத்திரத்தை அணுகுவதற்கான அவருக்கே உரிய அணுகு முறையைக் ''கொஞ்சம் என்பதன் யோகம்'' அல்லது ஒருங்கிணைந்த யோகம் என்று அழைக்கலாம். முழுவதும் வளருமாறு அமைந்த சீரான வளர்ச்சியே இலக்கினிடம் நம்மை எளிதில் கொண்டுபோய்ச் சேர்க்கும் என்று அவர் எச்சரிக்கை செய்தார். அமைப்பில் ஏதேனும் ஓர் இடத்தில் உள்ள பலவீனம், முழுவதையும் அழித்துவிடும்.

எளியது ஆனால், அழகான சிறிய பாடலை அவர் புனைந்தார்; தாம் பேசிய ஒவ்வொரு கூட்டத்திலும், குறிப்பாக, 1950-ல் அவர் செய்த அகில இந்திய — இலங்கைப் பயணத்தின்போது, மகா மந்திரத்திற்கு உரிய இராகத்தில் அவரே பாடினார்.

ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே
ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண க்ருஷ்ண க்ருஷ்ண
ஹரே ஹரே

கொஞ்சம் உண், கொஞ்சம் குடி, கொஞ்சம் பேசு,
கொஞ்சம் தூங்கு;
கொஞ்சம் பழகு, கொஞ்சம் நட, கொஞ்சம் சேவை செய்,
கொஞ்சம் கொடு,
கொஞ்சம் வேலை செய், கொஞ்சம் ஓய்வு கொள்,
கொஞ்சம் படி, கொஞ்சம் தொழு,
கொஞ்சம் ஆசனம் செய், கொஞ்சம் பிராணாயாமம் செய்,
கொஞ்சம் சிந்தனை செய், கொஞ்சம் தியானம் செய்,
கொஞ்சம் ஜெபம் செய், கொஞ்சம் கீர்த்தனம் பாடு,
கொஞ்சம் மந்திரம் எழுது, கொஞ்சம் சத்சங்கம் செய்.
இவை எல்லாவற்றையும் கொஞ்சம் கொஞ்சமாகச் செய்.
எல்லாவற்றையும் செய்ய உனக்கு நேரம் இருக்கும்.

ஜெபம், ஆசனம், தியானம் போன்ற அற்புதமான இத்தகைய செயல்களை அதிகமாகச் செய்யக்கூடாது என்பதா குருதேவருடைய நோக்கம்? ''கொஞ்சம் ஏன்? அதிகம் ஏன் கூடாது?'' என்று நீங்கள் வினவலாம். எனவே நாம் இதன் விளக்கத்தைப் பின்வருமாறு தருகிறோம். ''கொஞ்சமாவது செய்க'' என்பதே இதன் பொருள். ஆனால் அவர் கருதிய கருத்து, ''எதிலும் கொஞ்சம் செய். எதற்கும் தனிச் சிறப்பைத் தராதே'' என்பதாம். சாரம் அதுவே — ஏனெனில், தனிச் சிறப்பு வேண்டும் என்று முழங்குவது அகந்தையே; தனிச் சிறப்புள்ளவன் பெருங் கூட்டத்தால் புகழப்படுகின்றான். தனிச் சிறப்பினால் ஒருவ

னுடைய கர்வம் தலைக்கு ஏறுகின்றது; அது பொறுமை யுணர்வையும் புரிந்து கொள்ளும் ஆற்றலையும் தளரச் செய்து, வெறுப்பையும், பகைமையுணர்வையும் உண்டாக்கு கின்றது.

யோகம், இணக்கமாக இருப்பது, ஒருவரின் முழுமை யான சீரான, அழகான வளர்ச்சியாக, யோகம் அமை கின்றது. இதன் பொருள், உங்களின் ஆளுமையின் ஒவ் வொரு பகுதியும் ஒவ்வொரு நாளும் செயல்படுவதாகும். இவ்வாறு இல்லையெனில் ஆளுமை சமநிலை தவறித் தாறு மாறாகிவிடும்; இது யோகம் ஆகாது. ஆதலால், குருதேவர் வகுத்துள்ள வழியில், நாளொன்றுக்கு ஒரு பயிற்சிக்காக, அது எதுவாக இருப்பினும், நீங்கள் நீண்ட நேரம் செல வழிக்க முடியாது. சுவாமி சிவானந்தரை உண்மையாகப் பின்பற்றும் சாதகர் எல்லாவற்றிலும் கொஞ்சம் மட்டுமே செய்ய முடியும். இவ்வாறு உடல் நலம், மனவளம், ஆன்ம பலம் ஆகியவற்றின் சீரான வளர்ச்சி ஏற்படுகின்றது.

குருதேவர், மருத்துவக்கல்லூரியில் மூத்த மாணவராக இருக்கும்போதே, சிகிச்சை நுணுக்கங்களைத் தெரிந்து கொள் வதைவிட மக்கள், உடல் நலத்தைச் செப்பமாகப் பேணி வாழும் கலையைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார். அறியாமை காரணமாக நீங்கள் உடல் நலத்தை இழந்துவிடும் போதுதான் குணம் பெறத்தக்க சிகிச்சையின் அவசியம் ஏற்படுகின்றது. ஏன் அதைத் தடுக்கக் கூடாது? கல்லூரியை விட்டு வெளியே வந்தவுடனே 'தேவாம்ருதம்' என்ற பெயரில் ஒரு செய்தி இதழைத் தொடங்கினார்; அதில் அவர் கண்டு கொண்ட இரகசியம் அல்லது அனைவரும் அறிந்த, ஒவ்வொரு சிறிய குறிப்பையும் வெளியிட்டார். எப்படிக் குணம் பெறுவது என்பதைப் பற்றி அதிகம் தெரிந்து கொள்வதைவிட, உடல் நலம் குன்றாமல் தங்களை எப்படித் தடுத்துக்கொள்ள முடியும் என்பதைப் பற்றி குறிப்பிட்டிருந்தார்.. குணம் பெறுதல் அவசர சிகிச்சை மட்டுமே.

முடிந்த வரையில் எல்லா மக்களும் அறிவையும், சேவையையும் இலவசமாகப் பெற வேண்டும் என்ற நிலையை உருவாக்கவே அவர் தம் வாழ்க்கை முழுவதையும் மிகுந்த ஊக்கத்துடன் ஈடுபடுத்தினர். உடல் நலம், சேவை என்ற இரண்டு மட்டுமே குருதேவரின் தனிப் பெரும் விருப்பங்களாக இருந்தன. இரகசியங்களை அவர் எப்போதுமே பாதுகாத்ததில்லை. (யாருக்கும் கிடைக்காத தனிச் சிறப்புள்ள மருந்து என்பால் உள்ளது; என்னிடம் வருக.) அவர் இரகசியக் கொள்கை எதையேனும் அறிய நேர்ந்தால், அடுத்த நாள் காலையிலேயே அது வெளியிடப்பட்டு விடும். ஒரு சமயம், சுவாமிஜியின் கட்டுரைகளின் அடிப்படையில் அஞ்சலகக் கல்வி முறையை ஆசிரமத்தில் இருந்த யாரோ ஒருவர் தொடங்க விரும்பினர்; மாதம் ஒரு பாடமாக வெளியிட்டு அத்திட்டத்தின் வாயிலாகப் பொருள் ஈட்டலாம் என்று அவர் தெரிவித்தார். சுவாமிஜி இசைந்தார். ஆனல் ஒரு முறை இவ்வாறு நடந்த உடனே, சுவாமிஜி எல்லாப் பாடங்களையும் புத்தக வடிவில் வெளியிட்டுப் பெரும்பாலும் இலவசமாக விநியோகம் ஆகும்படிச் செய்தார்.

கூடிய வரையிலும் உங்களை ஒரு மருத்துவரிடம் செல்ல வேண்டாதவாறு உங்களுக்கு உதவ விரும்பும் ஒரு தொழில் மருத்துவர் அவர். மலேயாவில் இருந்தபோது சில நூல்களின் உதவியால் யோகாசனப் பயிற்சிகளை அவர் தொடங்கிய போதிலும், அப் பயிற்சிகள் உடல் நலத்துக்கு உகந்த முழு அணுகு முறைகளாயின. அவர் 'ஹடயோகம்' பற்றி இயற்றிய நூல், பழங்கால அடிப்படை நூல்களின் முக்கியமான சாரத்தைக் கொண்டிருந்தது. அவருடைய போதனைகளின் முழுமையான திட்டத்தில் ஹடயோகத்தின் முக்கியத்துவம் பெரிய இடத்தைப் பெற்றிருந்தது; அது, உடல் நலத்தை, உண்மையான உடல் நலத்தை எவ்வாறு பேணுவது என்று உங்களுக்குப் போதிக்கின்றது

உடல் நலத்தைப் பேணுவது எவ்வாறு? உடல் நலம் என்பதன் உண்மையான பொருள் யாது? உடல் நலம்

என்பதன் விளக்கம் முழு நிறைவு என்பதாம். மன நலம் குன்றுமாறு செய்துவிட்டு நீங்கள் உடல் நலத்தைப் பெற முடியாது. உடல் நலம் என்ற ஒரு பொருள் இல்லவே இல்லை. முழு நிறைவான நலத்தை உடல் நலம் என்றும், மன வளம் என்றும், ஆன்மீக வலிமை என்றும் தனித் தனியே பிரிக்க முடியாது. உடல் நலம், மன நலம் ஆகிய இரண்டின் சீரான வளர்ச்சி, குருதேவரின் தனிச் சிறப்பாகும். உடல் நலம் பேணும் யோகம் பற்றிய தம் கட்டுரைகளில் அவர் அடிக்கடி, மனவளம், ஆன்மீக பலம் பற்றி வலியுறுத்தியுள்ளார். எவ்வளவு அதிகமான யோகாசனங்களை நீங்கள் எவ்வளவு காலம் செய்தாலும், எவ்வளவு சரியாகச் செய்தாலும்கூட, மனம் முழுமையாகச் சீர் குலைந்து நரம்பு மண்டலம் பாதிக்கப்பட்டால், உடம்பானது நலத்துடன் திகழ முடியாது.

## யோகாசனம்

குருதேவர் தம்முடைய யோகாசனப் பயிற்சியை ஒரு நாள்கூட புறக்கணித்தது கிடையாது. அவரே தம்முடைய முப்பதாவது வயதில்தான் அவற்றைப் பயிலத் தொடங்கினார். ''எப்போது தொடங்கினாலும் அது காலங் கழிந்த தாகாது; ஆசனங்களை விட்டு விடுவதற்கென்று எந்த ஒரு நிபந்தனையும் இல்லை; நோயுற்றிருக்கும்போதுகூட உடம்பின் நிலைமைக்கேற்ப ஆசனங்களைத் திருத்தி அமைத்துக் கொள்ள வேண்டும்'' என்று அவர் வற்புறுத்தினார். குறிப்பிட்ட நேரத்திற்கு முன்பே அவர் ஐந்து அல்லது பத்து நிமிடங்கள் சிரசாசனம் செய்வார். அவர் சர்வாங்காசனத்தையும் செய்தார்; இவற்றுடன் அவர் இன்னும் சிலவற்றைச் சேர்த்துக் கொண்டார்; அவை சிறிது முன்னோக்கி வளைதல், மகாமுத்திரை, பச்சிமோத்தாசனம், ஹலாசனம் முதலியனவாகும்.

இவ்வாறே, சில மென்மையான உடற்பயிற்சிகளும் குருதேவரின் அன்றாட வேலை முறையில் இடம் பெற்றிருந்தன. ''கண் விழித்து எழுந்தவுடனே நீங்கள், உங்கள்

படுக்கையில் அமர்ந்தவாறு இப்பயிற்சிகளை ஐந்து நிமிடத்தில் முடித்து விடலாம்'' என்று அவர் சொல்வது வழக்கம். அவர் பத்மாசனத்தில் அமர்ந்தவாறு உடம்பை முன்னோக்கி வளைப்பார்; பிறகு பின்னோக்கிச் சாய்வார்; முழங்கைகளைப் படுக்கையில் ஊன்றியவாறு உள்ளங்கைகளால் இடுப்பைத் தாங்கியவண்ணம், தம் உடம்பை இடமும், வலமும் திருப்புவார். ஏற்றப் பலகையாகத் தம் இடுப்பை அமைத்துக் கொண்டு, தம் கால்களில் பெரு விரல் நுனிகளைப் பிடித்துக் கொண்டு, உருண்டவாறு முன்னும் பின்னும் ஊஞ்சலாடுவார். படுக்கையிலிருந்து எழுந்த பிறகு அவர் ஒரு சுவரின் முன்னால் சாய்ந்து இடுப்பைத் திருப்பும் சில மென்மையான பயிற்சிகளைச் செய்வார். யாரும் இந்தப் பயிற்சிகளைச் செய்யலாம்; அவை மிகவும் சுலபமானவை; அவற்றில் அடையும் நன்மைகளுக்கோ அளவில்லை.

குருதேவர் எவற்றை நேசித்தாரோ அவற்றைச் செய்யுமாறு அவர் மற்றவர்களை உற்சாகத்துடன் ஊக்குவித்தார். எந்த வகையில் பார்த்தாலும் அவர் யோகாசனங்களில் ஆற்றல்மிகுந்த வல்லுநர் அல்ல; எனினும் அவர் அவற்றைப் பற்றி உங்களிடம் பேசினால், 'இப்போதே நாம் பயிற்சிகளைத் தொடங்க வேண்டும்' என்று நீங்கள் உணரும்படியாக அவருடைய உற்சாகம் உங்களைத் தொற்றிக்கொள்ளும். மலேயாவில் இருந்தபோதே குருதேவருடைய சமையற்காரராகிய ஸ்ரீ நரசிம்ம ஐயர், டாக்டரின் உற்சாகத்தில் மூழ்கியவராய் யோகாசனங்களைப் பயில்வதற்காக ஆர்வத்துடன் சேர்ந்து கொண்டார். (பல ஆண்டுகளுக்குப் பிறகு அவர் குருதேவரின் துறவுச் சீடரானார்). சுவாமி சிவானந்தர் அடிக்கடி இளைஞர்களுக்கு — அவர்களை அவர் எங்கே சந்திக்க நேர்ந்தாலும் — ரயில் நிலையத்தில் பயணிகள் நடமாடும் மேடை வழியில் அல்லது நடை பாதையில் — யோகாசனங்களின் உடல் நிலை பற்றிக் கற்பிக்கத் தொடங்கிவிடுவார். அவர் அதை 'ஆக்கிரமிப்புச் சேவை' என்று கூறுவது வழக்கம். ''யாரும் உங்களைச் சந்தித்துச் சந்தா செலுத்தி உங்கள் வகுப்பில் சேரும் வரையில் காத்திருக்க வேண்டாம்.

நீங்கள் எங்கிருந்தாலும் அவருக்கு அங்கும் இங்குமாகக் கற்றுக்கொடுங்கள்'' ''யோகாசனத்தின் நிறை நிலை இது தான்'' என்று சொல்லும் கொள்கைகள் பற்றி அவருக்கு விருப்பம் இல்லை. அவருடைய போதனை ''இன்று உங்களால் முடிந்ததை, முடிந்த அளவில், ஆனால், நேர்மையாகவும், உண்மையாகவும், மனப்பூர்வமாகவும் செய்யுங்கள். இதுவே நிறை நிலை'' என்பதாகும். இன்று நீங்கள் இதைச் சாதிக்க முடிந்தால், இதையே ஒழுங்காகச் செய்து வந்தால், சிறிது சிறிதாக வளர்ச்சி பெற முடியும். ஆனால் யாரைப் பற்றியும் பொறாமைப்படவோ, அல்லது அப்படியே பின்பற்றவோ வேண்டாம்; அந்த நோக்கத்துடன் யாரையும் எதிர்பார்க்க வேண்டாம்.

தம்மைக் காட்டிலும் யாரேனும் எதையேனும் நன்றாகச் செய்தால் அவர் உண்மையாகவும், நேர்மையாகவும் அவரைப் பாராட்டுவார்; இது சுவாமி சிவானந்தரிடம் காணப்பட்ட ஒரு தனிச் சிறப்பாகும். பொறாமையின் சிறு அடையாளம் கூட அவர்பால் இருக்கவில்லை. இது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். எடுத்துக்காட்டாக, யாரேனும் பெரிய ஹடயோகி ஒருவர் ஆசிரமத்திற்கு வருகை தந்து, (பலர் வந்து சென்றனர்) அதிசயிக்கத்தக்க சில பயிற்சிகளைச் செய்து காட்டினால், சுவாமிஜி பல ஆண்டுகள் வரையில், சிறிதும் ஒளிமறைவின்றி, ''அவர் ஒரு யோகி! உலகத்திலேயே அவர் தனிப் பெருமை பெற்றவராக இருக்க வேண்டும்'' என்று புகழ்ந்து போற்றுவார். அவர் தம் முடைய சீடர்களையும் வெளிப்படையாகப் பெருமை படுத்திப் பாராட்டுவார்.

குருதேவருக்கு மற்போர்களிலும், விளையாட்டுப் போட்டிகளிலும் மிகவும் விருப்பம் இருந்தது. உலாவி வருவதை அவர் மிகவும் நேசித்தார். மாணவராக இருந்த போதே அவர் உடற் பயிற்சிகளில் மிகவும் திறம் வாய்ந்து விளங்கினார்; அதனால் ஆசிரியர் அடிக்கடி அவரையே வகுப்பு மாணவர்களுக்கு பயிற்சிகளைக் கற்றுத்தரச் சொல்லுவார். ஆசிரம வாழ்வின் தொடக்க ஆண்டுகளில் அவர் பிரார்த்தனை

மண்டபத்தைச் சுற்றி ஓடி வருவது அவருடைய வழக்கம். இந்தப் பெரியவர், உலகப் புகழ் பெற்ற சுவாமி சிவானந்தர், இமயம்வாழ் முனிவர், இந்தியாவின் பெரும் யோகி, இன்னுமென்ன பெருமைகள் பலவும் பெற்றவர் — தம்முடைய வேட்டியை (இடுப்பில் கட்டும் ஆடை) இறுகத் தரித்தவாறு பொது மக்கள் கூடும் மண்டபத்தைச் சுற்றி ஓடி வருவதை நீங்கள் கற்பனை செய்து பார்க்க முடியுமா? அவர் சிறிது கூடத் தம்மைப் பற்றிய உணர்வைப் பெற்றிருக்கவில்லை. சுவரின் எதிரே நின்று கொண்டு பழைய டென்னிஸ் மட்டையும் பந்தும் ஏந்தித் தாமே தனித்து விளையாடுவதும் அவருடைய வழக்கம்.

கோடைப் பருவத்தில் குருதேவர் நீந்த விரும்புவார். அவருக்கு வழுக்கைத் தலை இருந்தது. கோவணம் மட்டும் அணிந்தவராய் வெற்றுடம்புடன் கங்கையின் கரையில் அமர்ந்து தம் உடம்பு முழுவதும் அழகாக எண்ணெய் தேய்த்துக் கொண்டிருப்பார். சூரியக் குளியல் பற்றியும் உடல் நலம் பற்றியும் அவர் தமக்கே உரிய சில குறிப்புகளைப் பின்பற்றி வந்தார். சூரிய வெளிச்சம் படுமாறு உங்கள் உடம்பின் மேனி மட்டும் இருந்தால் போதாது; உங்கள் நாக்கும் பற்களும் கூட அவ்வாறு இருக்க வேண்டும். திறந்த வெளியிலேயே, புன்முறுவலுடன், கதிரவனை நோக்கிப் பற்களைக் காட்டியவாறு, நாக்கை வெளியே நீட்டியவாறு சூரிய வெளிச்சத்தில் குளிப்பவராக அவர் அமர்ந்திருப்பார்.

ஆன்மீகப் பயிற்சிக்கு முன்னர் நிறைவேற்ற வேண்டிய ஓர் இன்றியமையாத தேவை, உடல் நலமாகும்; வாழ்க்கையை அனுபவிப்பதற்கும் அல்லது உங்கள் பணியைத் திறமாகச் செய்யவும்கூட, உடல் நலம் மிகவும் தேவை; ஆனால் அவ்வுடல் நலத்தில், உடம்பின் நலம், மனத்தின் வளம், ஆன்மாவின் வலிமை ஆகியவை சேர்ந்திருக்க வேண்டும். உணர்வு பூர்வமான சமநிலை இருக்க வேண்டும். போதிய ஓய்வும், தகுந்த உணவும்கூட முக்கியமானவையாகும்.

9

## உணவு

'இது சரி, இது தவறு' என்று அவர் வெளிப்படையான கட்டளைகளை இடுவதை நான் ஒரு போதும் கேட்டதில்லை. இது போன்ற கட்டளைகளை நீங்கள் அவருடைய நூல்களில் காண்பீர்கள்; ஆனால் அங்கு அவர் மரபான போதனைகளை மட்டுமே மீண்டும் போதிக்கின்றார். உணவைப் பற்றி அவர், ''உங்கள் சமநிலையைச் சீர் குலைக்கின்ற அல்லது சமநிலை குலைவதற்கான, உங்கள் உணர்வுகளைத் தூண்டி விடுகின்ற உணவுகளை நீக்கிச் சாத்வீகமான உணவையே உண்ணுங்கள்'' என்று கூறுவது வழக்கம். நீங்கள் நோக்கத்தையும், போதனையையும் புரிந்து கொண்டு, பிறகு உங்கள் நிலைக்குப் பொருத்தமானதாக உள்ளதா என்று பார்க்க வேண்டும். குருதேவரே மிகவும் சூடான, வாசனைப் பொருள்கள் கலந்த காரமான உணவை உண்டார்; ஆனால் அது அவருக்குப் பொருந்தியதாக இருந்தது. நீங்கள் அவரைப் போலச் செய்ய முடியாது. உங்களுக்குப் பொருத்தமான சாத்வீக உணவு எது என்பதை நீங்களே கண்டு பிடிக்க வேண்டும். ''உங்கள் பகுத்தறிவைப் பயன்படுத்துங்கள்'' என்றும் குருதேவர் கூறுவது வழக்கம். இது கடினம் என்று தோன்றுகின்றது.

ஆசனங்களாலும், உணவுகளாலும் ஏற்படும் மன இயல் விளைவுகளைப் பற்றிக் குருதேவர் வற்புறுத்தினார்; மன இயல் விளைவுகள் என்ற தொடர் மனத்தில் தோன்றும் எண்ணங்களை மட்டும் குறிக்காமல், நரம்பு மண்டலம், உள்ளம், உள் அந்தக்கரணங்கள் ஆகியவற்றின் விளைவுகளையும் குறிக்கும். எனவே ஒருவர் இவை எல்லாவற்றையும் தொகுத்துப்பார்த்து, 'இது' அல்லது 'அது' என்று அல்லாமல், இரண்டுக்கும் நடுவில் உள்ளதைக் காணும் உணர்வை உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

## பிராணாயாமம்

குருதேவர், பிராணாயாமத்தில் மிகப் பெரும் நம்பிக்கை கொண்டிருந்தார்; மிகத் தெளிவாக விளக்கக் கூடியவராக

வும் இருந்தார். அவர் அதை நேசித்தார். உடற் பயிற்சி, மூச்சுப் பயிற்சி (அதன் வாயிலாகப் பிராணன் கட்டுப்பாடு) ஆகியவற்றின் ஒருங்கிணைந்த யோகமே அவருடைய இலட்சியமாக இருந்தது: எனவே பிராணாயாமம் முக்கிய இடம் பெற்றிருந்தது. பிராணாயாமம் உடம்பில் அமைதியும் இன்பமும் பெருக்கெடுக்கச் செய்கின்றது. சுவாமி சிவானந்தர் மிகவும் வேலை நெருக்கடியிருக்கும் நாட்களில் கூடப் பல மணி நேரங்களைத் தம்முடைய பயிற்சிகளுக்காக ஒதுக்கினார் என்பதை அறியும்போது நமக்கு மிகவும் ஆச்சரியமாக இருக்கின்றது.

மிகவும் சுலபமாகவும் வசதியாகவும் இருந்த 'சுலப பிராணாயாமம்' அல்லது 'சுக பூர்வகம்' என்று அவர் பெயரிட்ட பிராணாயாமத்தின் மீது அவர் எல்லையற்ற விருப்பம் கொண்டிருந்தார். குளிர் காலத்தில் அவர் 'பஸ்த்ரிகா' வையும் செய்தார்; இதை அவர் செய்வதைக் காண்பதற்கு மிகவும் அழகாக இருக்கும். எவ்வளவு நேரம் முடியுமோ அவ்வளவு நேரம் வரைக்கும் மூச்சை அடக்கி யிருக்குமாறு (பழைய நூல்கள் அவ்வாறு கருதுகின்றன) அவர் வற்புறுத்தவில்லை; ஆனால் எவ்வளவு நேரம் வசதி யாக இருக்குமோ அவ்வளவு நேரம் இருந்தால் போதும் என்பார். சிக்கல் என்ன என்பதை நீங்கள் உடனே கவனித் தீர்களா? ''எவ்வளவு நேரம் வசதியோ அவ்வளவு நேரம் மூச்சை இழுங்கள். எவ்வளவு நேரம் வசதியோ அவ்வளவு நேரம் மூச்சை அடக்குங்கள். எவ்வளவு நேரம் வசதியோ அவ்வளவு நேரம் மூச்சை வெளியே விடுங்கள்'' இரண்டு சொற்கள் சம முக்கியத்துவம் உள்ளவை; 'எவ்வளவு நேரம்' 'வசதி' என்பவை அவை. 'எவ்வளவு குறைந்த நேரம் வசதியோ அவ்வளவு நேரம்' என்று கூறவில்லை; யாரும் அதைச் செய்யலாம், நேரத்தைக் குறைத்துக் கொள்வதனால் ஒரு பயனும் இல்லை. நேரம் நீடிக்கப்பட வேண்டும். மரபான அணுகு முறையில் ஒரு குறிப்பிட்ட விதியோ அளவோ உங்களுக்கு வழிகாட்டக் கூடியவாறு விதிக்கப் பட்டிருக்கும்; இவ்வாறில்லாத குருதேவரின் யோகம் சிறிது கடினம் ஆகிவிட்டது.

குருதேவரின் பிராணுயாமத்தில் விழிப்புணர்வு அடங்கியுள்ளது. கண்காணிப்பு, மனப்பூர்வம், நேர்மை ஆகியவை நிலவ வேண்டும். உங்கள் எல்லையை நீங்கள் கண்டுகொள்ள வேண்டும்; ஆனுல் அதை மீறக்கூடாது. கட்டாயமோ, பலவந்தமோ, இறுக்கமோ சிறிதும் இருக்கக் கூடாது. இம்முறையில் உள்ளத்தின் சீரான ஒழுங்கு மேம்படுத்தப் படுகின்றது. போட்டியுணர்வோ, கட்டாயமோ இல்லாமல் யோகத்தை மனப்பூர்வமாகப் பயிற்சி செய்ய வேண்டும். அது மிகவும் அழகானது. இதுவே சிவானந்தரின் யோகம்.

ஆன்மீகச் சாதகர்கள் அனைவரும் விழித்தெழவேண்டிய நேரம் என்று அவர் விதித்த நேரத்திற்கு மிகவும் முன்னதாகவே அதிகாலை 3 மணிக்கு அவர் விழித்தெழுவார்; இதில் எப்போதும் மாற்றம் இருந்ததில்லை. இந்த நேரத்தில் பிராணுயாமத்திற்கு மட்டும் அவர் ஒரு மணி நேரத்தை ஒதுக்குவது வழக்கம். வேலைப்பளு மிகவும் அதிகமாக இருக்கும் நாளில் இப்பயிற்சியில் அவர் குறைந்தது மூன்று மணி நேரம் செலவழிப்பார்; நேரம் கிடைக்கும் போதெல்லாம் — பல்வேறு கால கட்டங்களில் அவர் இதை முடித்துக்கொள்வார். தம்முடைய வாழ்வின் இறுதி ஆண்டில் யோகாசனப் பயிற்சிகளை அவரால் அதிகம் செய்ய முடியவில்லை; அவர், "வாய்ப்பு நேர்ந்தபோதெல்லாம் நான் பிராணுயாமம் செய்கின்றேன்; படுத்திருக்கும்போது கூட நான் பிராணுயாமம் செய்கின்றேன். முக்கியமாக, இரவில் எனக்கு உறக்கம் வராதபோதும் செய்கின்றேன்" என்று கூறுவார். முடிந்தால் தலையணைகளைத் தாங்கலாகக் கொண்டு அமர்ந்தவாறும் அவர் செய்வார். பெரும்பாலும் அவரைச் சந்திக்கும் ஒவ்வொருவரிடமும், "யோகாசனங்களைச் சரிவர உங்களால் செய்ய முடியவில்லையென்ருல், உங்களால் முடிந்தவற்றை மட்டும் செய்யுங்கள், ஆனுல் பிராணுயாமத்தை ஏராளமாகச் செய்யுங்கள்" என்று அறிவுரை கூறுவார். பிராணுயாமம் என்பது வெறும் மூச்சுப் பயிற்சிகள் மட்டும் அல்ல, நரம்பு மண்டலம், உள்ளம் ஆகியவற்றின்மீது அவை நேரடியான நல்விளைச்சல்

ஊட்டுபவை என்பதை அவர் உணர்ந்திருந்தார். அது உள்ளத்தின் ஆரோக்கியத்தை மேம்படுத்துகின்றது, இது நாம் வழக்கமாகக் கூறும் உடல் நலத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டதாகும்.

## உடல் நலம் என்பதன் மறு விளக்கம்

கடந்த ஆறு மாதங்கள் வரைக்கும் ஒருவர், மருத்து வரைச் சந்திக்கச் செல்லவில்லையென்றால், அவர் உடல் நலத்துடன் இருப்பதாக நாம் கருதுகின்றோம். குருதேவருடைய கருத்தின்படி உடல் நலம் என்பது இத்துடன் இன்னும் அதிகமாக அமைந்ததாகும். அவருக்கு முப்பத்தைந்தாம் வயதிலிருந்தே நீரிழிவு நோயும், இடுப்பில் வாயுப் பிடிப்பும் இருந்து வந்தன; நாளடைவில் வேறு சங்கடங்களும் சேர்ந்து கொண்டன. ஆனால் அவருடைய முகம் பொலிவும் ஒளியும் பெற்றிருந்தது; அவருடைய கண் களில் மின்னும் சக்தியும் நகைச்சுவையும் காணப்பட்டன; அவருடைய ஒவ்வொரு செயலும் அன்பும் ஞானமும் நிறைந் திருந்தது. அவருடைய உடம்பு பலவீனம் அடைந்த நேரத்தில் கூட அவருடைய மனமும், மூளையும் எல்லை கடந்த விழிப்புணர்வுடன் விளங்கின. அவருடைய உடற்தோற்றம் மிகவும் கவர்ச்சியுடன் தென்பட்டது. வேறு யாருக்காவது உரியதாக இருந்திருந்தால் அழகற்றும், விகார மாகவும் காட்சியளித்திருக்கக் கூடிய அவருடைய திடமான உருவம், அவருடைய வசீகரத்தையும், கம்பீரத்தையும் அதிகரிப்பதாக இருந்தது. உடம்பின் தோல் கூடத் தெளி வும் தூய்மையும் பொலிவும் பெற்றிருக்குமாறு பேணிவரப் பட்டது. அவருடைய உடைகள் எப்போதும் கறை படியாதனவாகவும் தூய்மையாகவும் இருந்தன. அவர் உடல் நலம் குன்றிய போதும்கூட அசாதாரணமான பொலிவும் காந்தியும் காணப்பட்டன.

ஒரு முறை அவர் டைபாய்டு காய்ச்சலில் உடல் நலம் தளர்ந்து வாட்டமடைந்த போது, அவர் காலமாகி விடு

வார் என்று ஓரிரு சமயங்களில் நாங்கள் நினைக்கின்ற அளவுக்கு அவருடைய உடல் பலவீனமடைந்தது. அப்போதுகூட அவருடைய கண்கள் ஒளியுடனும், முகம் பொலிவுடனும் காணப்பட்டன. அவர் மூன்று வாரங்கள் வரைக்கும் தம் அறையிலேயே தங்கியிருக்க நேர்ந்த பின் அவர் கதிரொளியையும் கங்கையையும் காண விரும்பினார். நாங்கள் மெதுவாக அவரை வெளியே கொண்டு வந்தோம். அவருக்கு விருப்பமாக இருந்த நாற்காலியில் அவரை அமரச் செய்தோம். அப்போது நீங்கள் அவரை ஏறெடுத்துப் பார்த்திருந்தால் அவருக்கு எந்தக் குறை பாடும் இல்லை என்று சொல்லியிருப்பீர்கள். காண்பதற்கு அவர் அழகாக இருந்தார்; சுற்றியுள்ள மக்களுடன் மகிழ்ச்சியாகவும் சிரித்துக் கொண்டும், கேலி செய்து கொண்டும் அவர் பேசிக் கொண்டிருந்தார். ஏறத்தாழ ஒரு மணி நேரத்திற்குப் பிறகு அவர், ''சரி, நான் படுக்கைக்குத் திரும்பிச் செல்லுகிறேன். இருங்கள், நானே எழுந்திருக்க முயற்சி செய்கிறேன்'' என்று கூறினார். அவர் தம்முடைய கால்களைத் தரையில் ஊன்றி நாற்காலியின் கைகளைப் பிடித்துக் கொண்டு எழுந்து நிற்க முயன்றார். ஆனால் உடனே தொப்பென்று விழுந்தார். அதிர்ஷ்டவசமாக அவர் நாற்காலியிலேயே திரும்பவும் அமர்ந்தவரானார். அநேகமாக நீங்கள் இக் காட்சியை முழுவதுமாக மனக் கண்ணால் காண முடியும். இந்நிலையில் நீங்களும் நானும் இருந்திருந்தால் நாம் நிச்சயம் நிறைந்த வருத்தமும், துயரமும் அடைந்திருப்போம். விழப் போகையில் அவர் சிரிக்கத் தொடங்கி, ''ஹூம், என் கால்கள் தம் வலிமையை இழந்துவிட்டன'' என்று கூறினார். 'நான்' என்று சொல்லாமல் 'என் கால்கள்' என்பதே அப்போது அவர் கூறிய சரியான சொற்கள்.

தம் உடம்பை மிகவும் பலவீனப்படுத்திய பல்வேறு வருத்தங்களும் நோய்களும் ஏற்பட்ட காலங்களில் எல்லாம் அவர் அவற்றைச் சமாளித்து எதிர் கொண்ட முறை, உடல் நலம் என்ற முழுக் கொள்கைக்கும் புரட்சிகரமான மறு

விளக்கமாக இருந்ததென்று நாம் கொள்ளலாம். உடல் நலம் என்பது மனத்தின் ஒரு நிலை; உள்ளத்தின் வளமான நிலை; அது உங்களை முணு முணுக்காமல், கண்ணீர் சிந்தாமல் உங்களை உழைக்கச் செய்கிறது; உங்கள் பணியைச் செய்ய உதவுகின்றது; உங்களுக்கு ஒதுக்கப்பட்ட எந்த ஒரு தனி வேலையையும் நிறைவேற்றச் செய்கின்றது. உடல் நலம் என்பது நோயிலிருந்து உடம்பு விடுபட்டுள்ளது என்று மருத்துவச் சான்றிதழ் தரப்படுவதல்ல. மருந்துகள் உட்கொள்வது பற்றிக் குருதேவர் பொருட்படுத்தவில்லை; உணவின் பிறகு ஒரு தட்டு நிறைய மருந்துகள் வைக்கப்பட்டிருக்கும். உடம்பின் பொருட்டு நீங்கள் உணவை உட்கொள்ள முடிந்தால், அப்போது நீங்கள் சில மருந்துகளையும் உண்ணலாம் என்பதே அவருடைய தத்துவம்.

அவர் நோயுற்றிருந்த காலங்களில் எல்லாம் ஒரு முறை கூட அவர் புலம்பியதில்லை; முணு முணுத்ததுமில்லை; மருத்துவர் அவருடைய அறைக்கு வந்தால், அவர் உடல் நலம் குன்றியுள்ளார் என்று அவரை நம்பச் செய்வது எங்களுக்கு மிகவும் கடினமாக இருந்தது. சுவாமிஜி எங்களைப் பார்த்து, ''நீங்கள் உடல் நலமாக இருக்கின்றீர்களா?'' என்று கேட்பார். இது போலவே ஆசிரமத்தில் உள்ள சாதுக்கள் சிலர் அவரைக் காணச் சென்றால், அவர்களுடைய உடல் நலத்தைப் பற்றித்தான் அவர் கவலையுடன் விசாரிப்பார்; உடல் நலத்தை நன்கு கவனித்துக் கொள்ளுமாறு அவர்களை அவர் வேண்டுவார். நோயாளி யார்? மருத்துவர் யார்? படுக்கையில் இருந்தவாறே அவர் தம்முடைய பணியை மிகவும் ஆச்சரியப்படத்தக்க வகையில் நன்றாகத் தொடர்ந்து செய்து வந்தார். அவர் மிகப் பெரும் அளவில் விழிப்புணர்வுடன் இருந்தார்; அவருடைய உள்ளத்தின் வலிமையும் நலமும் இதே நிலையில் எக்காலத்தும் காணப்பட்டன. அவருடைய உடல் சில நேரங்களில் 100 சத வீதமும், சில நேரங்களில் 80 சத வீதம் அல்லது 70 சத வீதம் மட்டும் உழைத்து வந்தது; தம்முடைய உடம்பால் முடிந்த அளவு மட்டுமே உழைத்து அதனுடன் ஒத்துப்

போக அவர் எப்போதும் தயாராக இருந்தார். சில நோய்களை அவர் தம் உடம்பில் குடி கொண்டிருக்கக் கருணை யுடன் அனுமதித்தது போல இருந்தது.

ஒரு முறை அவர், 'எனக்கு இரண்டு அல்லது மூன்று தேவைகள் உள்ளன. எனவே நான் அவற்றைப் பற்றி மிகவும் கவனமாக இருக்கின்றேன்' என்று குறிப்பிட்டார். அவர் தம் கண் பார்வையைப் பற்றி மிகவும் கவனமாக இருந்தார். குரலும் கூட அவருக்கு மிகவும் முக்கியம் உள்ள தாகும். வாழ்நாள் முழுவதும் அவருக்கு வெண்கல மணி யோசை போன்ற குரல் இருந்தது; இதற்காக அவர் தமக்கே உரிய சில சிறப்புப் பயிற்சிகளைச் செய்து வந்தார் தம் பற்களைப் பற்றி அவர் மிகவும் கவனமாக இருந்தார். அவர் ''உங்கள் பற்கள் ஒழுங்காக இல்லை என்றால், உங்களால் செம்மையாகப் பேசவும் முடியாது; நன்றாக உண்ணவும் முடியாது'' என்று கூறுவார். அவற்றைத் தூய்மையுடன் பேணிக் காப்பதற்கு எந்த ஒரு மருத்துவரும் எந்த ஒரு முறையைப் பரிந்துரைத்தாலும் அவர் அதைக் கடைப் பிடிப்பார். காலை நேரத்தில் பற்களைத் துலக்குவது அவருக்கு மிகவும் பெரிய ஒரு சடங்காக இருந்தது.

இவ்வாறு அவர், குறிப்பிட்ட உடல் உறுப்புக்களைப் பாது காத்து வந்தார். முற்றிலும், முழுவதுமாக அவர் பிறரைச் சார்ந்திருக்க விரும்பவில்லை. மேலும், சமுதாயத்திற்குச் சேவை செய்ய உதவும் கருவிகளை இழந்துவிட அவர் விரும்ப வில்லை. பிற்காலத்தில் அவரால் எளிதாக இங்கும் அங்கும் திரிந்து வர முடியாமற் போனபோது ஓர் ஊன்று கோலைப் பயன்படுத்தி வந்தார். தேவைப்படும்போது அதைப் பயன் படுத்துவதாகச் சொல்லி அவர் வேறுயாரையாவது அதைக் கையில் ஏந்தி வருமாறு கேட்டுக் கொள்வார். ''உங்களிடமே வைத்திருங்கள், தடுமாறுவது போன்ற உணர்வு எனக்கு ஏற்பட்டால் அதை உங்களிடமிருந்து வாங்கிக் கொள்ளுகின்றேன்'' என்று அவர் கூறுவார். உடம்புக்கு நாம் மிகவும் உதவி செய்தால் அது பலவீனத்தை

அடைந்து விடும். பின் நாட்களில் உடல் இன்னும் தளர்ச்சி அடைந்த போது அவர் ஊன்று கோலைத் தாமே கையில் பிடித்து வரலானார்; பின்னால் இது கூடப் போதாமல் அவர் யாராவது ஒருவருடைய கையைப் பற்றிக் கொள்ளலானார். அதனால் அவர் தம் உடம்பைக் கடமையிலிருந்து விடுவிக்க மாட்டார்; எது செய்யப்பட வேண்டுமோ, அது செய்யப் பட்டாக வேண்டும். குருதேவரின் உள்ளம் எச்சரிக்கையும், விழிப்பும், உற்சாகமும், வலிமையும் வாய்ந்தது. உடம்பின் சபலங்களுக்கு இடம் கொடுக்க அவர் மறுத்தார். வாயுப் பிடிப்பாலும், கீல் வாதத்தினாலும் பீடிக்கப்பட்ட காரணத் தினால் அவருடைய கால்கள் நகர முடியாத நிலைமை ஏற் பட்ட போதும் கூட, அவர் ''நான் வெளியே வருகின்றேன், அலுவலக அறையில் நான் பணி செய்வேன்'' என்று வற்புறுத்துவார்.

உடம்பின் நோய்களை வெற்றி கொள்ளும் வல்லமை வாய்ந்த மனத்தின் நிலைமை என்பது யாது? உடம்பு பலவீனப்பட்டிருந்தாலும் அது சில பணிகளை நிறைவேற்றக் கூடியதாக இருப்பதைக் கண்டு அவற்றை மகிழ்ச்சியாகவும், மனதாரவும், திறமையாகவும் நிறைவேற்றச் செய்கின்ற அந்த மனத்தின் நிலைமை என்பது யாது? அதுவே உடல் நலம் என்பதாம்.

ஒரு கால கட்டத்தில் அவர் அலுவலகத்திற்குச் செல் வதன் முன்பு சுமார் அரை மணி நேரம் என் அறையில் தங்குவது வழக்கமாக இருந்தது. அறைக்கு அருகில் இருந்த மாடிப்படிகள் மிகவும் உயரமாக இருந்தன; அலுவலகத் திற்குச் செல்வதற்காக அவர் அவற்றின் மேல் ஏறிச் செல்ல வேண்டியிருந்தது. உடல் நலம் நன்றாக இருந்த சிறிது காலம் வரைக்கும் எல்லாம் சரியாக இருந்தது. கீல் வாதத்தினால் பீடிக்கப்பட்ட பிறகு அவரால் அவ்வளவு சுலபமாக நடக்க முடியவில்லை; ஒரு நீண்ட ஊன்று கோலைக் கேட்டுப் பெற்று அதன் உதவியினால் அவர் மாடிக்கு ஏறிச் செல்வது வழக்கமாயிற்று. அவர் ஏன் அவ்வாறு

செய்ய வேண்டும்? யாருக்கும் தெரியாது. ஒரு நாள் அவரால் ஊன்று கோலையும் பயன்படுத்த முடியாது போயிற்று; எனவே உண்மையில் வளைந்து கைகளை ஊன்றிக் கொண்டு தவழ்ந்து ஏறினர். 'எனக்கு உடல் நல மில்லை; என் அறைக்கு வாருங்கள்' என்று அவர் மிக எளிதில் சொல்லியிருக்க முடியும். அவர் சிறிதுகூட வருந்தவில்லை; கடமையிலிருந்து சிறிதுகூட நழுவவில்லை; சிறிதுகூட முணுமுணுக்கவும் இல்லை; தம்மைப்பற்றிய உணர்வுகூட அவருக்கு இருக்கவில்லை.

மூப்படைந்த உடம்பைக் கூட ஒரு கணமும் உள்ளத்தின் உற்சாகத்தைக் குறைக்காத அல்லது பலவீனப்படுத்தாத அந்த உணர்வே, அந்த மன நிலையே உடல் நலம் என்று அழைக்கப்படுகின்றது. வாழ்நாள் முழுவதும் இந்த ஆன்மீக வலிமையுணர்வு அவர்பால் எல்லாச் சமயங்களிலும் நிலவி வந்தது.

இத்தகைய ஆற்றல்கள் சிலவற்றிற்குக் காரணம் அனைவரும் அறிந்துள்ளவாறு, விழித்தெழுந்த குண்டலினி சக்தி என்று ஒருவர் கற்பிக்கலாம். இதைப் பற்றிய தர்க்கம் ஒரு போதும் நிகழவில்லை. அவருடைய உள்ளத்தின் உள்ளிருந்து ஏராளமான சக்தி வெளிப்பட்டது. அது அவர்பால் நிரந்தரமாக நிரம்பித் ததும்பி வழிந்து கொண்டிருந்தது.

1953-ல் அனைத்து மதங்களின் பேரவை ஆசிரமத்தில் நடைபெற்றது. நூற்றுக்கணக்கான பார்வையாளர்கள் வந்திருந்தனர்; மூன்று நாட்கள் வரையில் ஆசிரமம் சுறுசுறுப்பாகக் காரியங்கள் நடைபெறும் இடமாக இருந்தது. இறுதி நாளின் நிகழ்ச்சிகள் சுவாமி சிவானந்தரால் நீட்டிக்கப்பட்டு நள்ளிரவுக்குப் பிறகு முடிவுற்றன. அதன் பிறகு சுவாமிஜி ஓய்வு கொண்டார். பார்வையாளர்களில் ஒருவராகிய, இந்தியப் பாராளுமன்றத்தின் சபா நாயகர் அடுத்த நாள் விடியற்காலைக்கு முன்பே புறப்பட்டுச் செல்ல விரும்பிக் குருதேவரிடம், "நான் புறப்படுவதற்கு

முன்னுல் தங்களைத் தரிசிக்க முடியுமா?'' என்று கேட்டார். குருதேவரும் இசைவு தெரிவித்தார். அன்று காலை ஐந்து மணிக்கு அவர் குருதேவரைச் சந்திக்கச் சென்ருர். நாங்கள் கண்களைக் கூடத் திறக்க முடியாத நிலையில் இருந்தோம்; ஆனுல் சுவாமி சிவானந்தரின் முகத்தில் களைப்பின் அடையாளம் சிறிதுகூடக் காணப்படவில்லை. இரண்டு அல்லது மூன்று மணிகளுக்கு முன்புதான் அவர் படுக்கச் சென்ருரோ, என்னவோ, இப்போது அவர் உல்லாசமாக உரையாடிக் கொண்டிருக்கின்ருர், இது மிகவும் அசாதாரணமான ஓர் அம்சமாகும். அவர் எவ்வளவு கடினமாக உழைத்திருந்தாலும் சரி, அல்லது எந்த அளவுக்கு அவர் பணிகளைச் செய்திருந்தாலும் சரி, (நாங்கள் எங்கள் வயதுகள் இருபதுகளாக இருந்த காலத்தில் அவர் தம் வயதில் அறுபதுகளில் இருந்தார் என்பதை நாம் ஒரு போதும் மறக்கக்கூடாது) அவற்ருல் அவர் சிறிதும் பாதிக்கப்படாமல், அவர்பால் நிரம்பித் ததும்பி வழிந்த, இன்னும் அதிகமான உடல் நலத்தோடும், மனவலிமையோடும் காணப்பட்டார்; அப்படித் ததும்பி வழிந்த அச்சக்திகள் மற்றவர்களையும் உற்சாகத்தால் நிரப்பின; நீங்கள் அவற்றை உங்கள் விருப்பத்திற்கேற்றவாறு விழித்தெழுந்த குண்டலினி சக்தி என்ருே அல்லது மெய்யுணர்வு என்ருே அல்லது வேறு எந்தப் பெயராலோ குறிப்பிடலாம்.

1950-ல் அவருக்கு அறுபத்தி மூன்று வயது நிரம்பியது; அப்போது அவர் இந்தியா முழுவதும் சுற்றி வருகின்ற, கடுமையான இரண்டு மாதகாலப் பயணத்தை மேற்கொண்டார். இக்காலத்தில் அவர் ஒவ்வொரு நாளும் ஐந்து அல்லது ஆறு பொதுக்கூட்டங்களில் பேச வேண்டியிருந்தது. இத்தகைய ஒவ்வொரு கூட்டத்திலும் அவர் தம் உரையைக் கேட்கும் மக்களுக்காகத் தம் உயிரையே வழங்கவும் தயாரானதுபோல் பேசினுர்; பாடினுர்; ஆனந்தக் கூத்தாடினுர். சிறிய அளவில் தனிக் கூட்டங்களும் நடைபெற்றன; முன் கூட்டி அறிவிக்கப்படாமல் சில கல்வி நிலையங்களைப் பார்வையிடவும் அவரை அழைத்தனர்; அங்கும் கூட அவர் பெருங்

கூட்டங்களில் வெளிப்படுத்திய அதே உற்சாகத்தோடும், ஊக்கத்தோடும் குருதேவர் பேசுவார்; பாடுவார்; நால்வர் மட்டுமே அமைந்த ஒரு குடும்பத்தின் கூட்டமாக இருந்தாலும்கூட அவர், தெய்வீக வாழ்க்கையின் நற்செய்திகளையும், தெய்வீகத் திருநாமங்களின் பெருமைகளையும், ஆன்மீகப் போதனைகள் எல்லாவற்றினுடைய சாரத்தையும் பரப்புவதற்கு ஒரு வாய்ப்பாகப் பயன்படுத்தினர். ஐம்பது லட்சம் மக்கள் கூடியுள்ள பெருங்கூட்டத்தில் பேசுவது எவ்வளவு பெருமையோ அதே அளவு பெருமையுள்ள வாய்ப்பாக அவர் அதனைக் கருதினர்.

வர இருக்கின்ற பல ஆண்டுகளைக் காட்டிலும் வாய்த்துள்ள ஒரு கணத்தையே அவர் ஒரு பொருட்டாக மதித்தார். ஒரு கணத்திற்குரிய பணிக்கும்கூட அவர் சிறிதும் குறையாதபடி தம் உள்ளத்தையும், ஊக்கத்தையும் தந்து பணி செய்தார். மலேயாவில் இருந்தபோது பத்தாண்டுகளாகச் சிறிதும் களைப்பின்றி இடையருமல் மருத்துவராக மக்களுக்குச் சேவை செய்து வந்தார்; அக்காலத்தில் தம்முடன் பணி செய்த கூட்டாளிகள் பலருடைய பணிகளின் பொறுப்புக்களையும் அவர் தாமே மேற்கொண்டு நிறைவேற்றி வந்தார். தம் சக்தியின் ஒவ்வொரு துளியையும் பயன்படுத்தினர். அவரே உற்சாகத்தின் உருவமாக இருந்தமையால் அவர் எதையும் நிறுத்தி வைக்கமாட்டார். வேறு யாராவது இத்தகைய நிலையில் இருந்திருந்தால், முப்பத்தெட்டு வயதிலேயே மூப்படைந்திருப்பார்; ஆனல் குருதேவரோ அவ்வயதில் உலக பந்தங்கள் எல்லாவற்றையும் துறந்து ஒரு புதிய வாழ்வைத் தொடங்கினர்.

ரிஷிகேசத்தில் அவருக்காகக் காத்திருந்த வாழ்க்கை, மலேயாவில் அவர் செலவழித்த சக்தியைப் புதுப்பித்துக் கொள்ள, எவ்வகையிலும் உதவக்கூடியதாக இருக்கவில்லை. அங்கு, ஒரு துறவிக்குரிய உணவு மிகவும் அற்பமானதாக இருந்தது; அவருக்குப் பழக்கமான உணவாகவும் அது இருக்கவில்லை; அங்கு நிலவிய வாழ்க்கைச் சூழ்நிலைகளோ

அவர் இழந்திருந்த சக்தியை மீண்டும் நிறைவு செய்யும் நிலைக்கு நேர்மாறாக அமைந்து, அவருடைய உடம்பில் எஞ்சியிருந்த சக்தியையும் விரைவில் மடியச்செய்து, வெகு சீக்கிரம் மூப்புப் பருவத்தை உருவாக்கக்கூடியதாக இருந்தன.

ஆனால் அப்படி நிகழவில்லை. 1930-ல், ஏழாண்டுகள் கடுமையான விரதங்களைக் கடைப் பிடித்து முடிந்த நிலையில், ஐக்கிய மாநிலத்திலும், பீகாரிலும் குருதேவர் தம்முடைய முதல் சொற்பொழிவை நிகழ்த்தியபோது, மக்கள் அவர், நிறைநிலை அடைந்த யோகியாகவும், உணர்ச்சி ததும்பும் இளைஞராகவும், இருப்பதைக் கண்டார்கள்; பலவீனமும் மூப்புப் பருவமும் நாணும்படியாக அவற்றை வெற்றி கொண்ட ஆன்மீகச் சக்தியுடன் ஆற்றல் மிகுந்து, ஒலிக்கின்ற மணியோசை போன்ற அவருடைய குரலை அவர்கள் கேட்டனர். குருதேவருடைய சொற்களுக்கு என்ன சக்தி இருந்தது? அவை அவருடைய உள்ளத்திலிருந்து, ஆன்மாவிலிருந்து வெளிப்பட்டன.

ஒருமுறை 1930-ல், ஒரு பயணத்தை முடித்துக் கொண்டு திரும்புகையில், சீதாபுரியில் தாம் உரை நிகழ்த்திய ஓர் உயர் நிலைப்பள்ளி மாணவரின் தந்தையாரிடமிருந்து சுவாமிஜிக்கு ஒரு கடிதம் வந்திருந்தது. அக்கடிதம் தெரிவித்த செய்தியாவது; குருதேவரின் உரையைக் கேட்ட பிறகு அவருடைய மகன் பின் வரும் ஒரு குறிப்பை எழுதி வைத்து விட்டு, வீட்டை விட்டு ஓடி விட்டான்; அக் குறிப்பாவது, ''என் உண்மையான தந்தை, சுவாமி சிவானந்தரைச் சந்திப்பதற்காக நான் செல்லுகின்றேன்,'' என்பதாகும். இவ்வாறே 1950ல் அனைத்திந்தியச் சுற்றுப் பயணத்தை முடித்த போது சிதம்பரத்தில் குருதேவருடைய சொற்பொழிவைக் கேட்ட டாக்டர் K. C. ராய், ஆசிரமத்தின் மருத்துவ அதிகாரியாக வந்து சேர்ந்து கொண்டார். இவ்வாறு, விழிப்புணர்ச்சியையும் மனமாற்றத்தையும் உண்டாக்கக் கூடிய சக்தி குருதேவரின் சொற்களுக்கு இருந்தது.

தொடர்ந்து பொங்கி எழும் உள்ளுணர்வுச் சக்தியின் ஊற்றுக்குக் குருதேவர் சுட்டிக் காட்டிய காரணங்கள், ஆசனம், பிராணுயாமம், தியானம் ஆகியவற்றைப் பயிலும் ஒழுங்கான பயிற்சியும், தெய்வீகத் திருப்பெயர்களை உச்சரிப்பதும் ஆகும்; முக்கியமாகப் பிராணுயாமப் பயிற்சி. இவற்ருல் குருதேவருக்கு (ஒரே நேரத்தில் எட்டு வகையான செயல்களைச் செய்யும்) அஷ்டாவதானம் செய்யக் கூடிய அபூர்வமான ஞாபகசக்தியும் ஆச்சரியமான வல்லமையும் வாய்ந்த மனேசக்தியும் ஏற்பட்டன. பிராணுயாமம் நாடிகளை (நுண்ணிய சக்திக் குழாய்களையும், நரம்பு மண்டலத்தையும்) தூய்மை பெறச் செய்கிறது; உள்ளத் திற்கும் வலிமையை ஊட்டுகின்றது. குருதேவருடைய மூளை, ஒரே நேரத்தில் நூறு பேருக்குப் பணி செய்யுமாறு கட்டளைகள் பிறப்பிக்கும் சக்தி பெற்றிருந்தது. (தற்போது உலகப் புகழ் பெற்று விளங்கும் சிவானந்த ஆசிரமத்தின் மையமாக அமைந்தது குருதேவரின் அறை; இதன் பெயர் 'பேரின்ப வீடு' இதன் வாசகப் பொருளாக அமைந்த) ''ஆனந்த குடிலுக்கு'' வரும் ஒவ்வொரு பார்வையாளரும் குருதேவரின் உள்ளத்தில் தாம் பதிவு செய்யப்பட்டுள்ளதை அறிவார்; பத்து ஆண்டுகள் சென்ற பின்னும் கூட, அவர் மீண்டும் சந்தித்தால் குருதேவர் அவரை நன்கு அடையாளம் கண்டு கொள்ளுவார். ஒருவருடைய முகம், மாறுதல் அடைந்திருந்தால் கூட, 30 அல்லது 40 ஆண்டுகளுக்குப் பிறகும் குருதேவர் நினைவு கூர்ந்தறிவார். சின்னஞ் சிறுமி யாக இருந்த ஒரு பெண்ணை முப்பது ஆண்டுகளுக்குப் பிறகு காண நேர்ந்தால் அவர், ''நான் அப்போது பார்த்த சின்னஞ் சிறுமிபோலவே நீ தென்படுகிருய்....'' என்று அவர் குறிப்பிடுவார்; அந்தப் பெண்ணும். ''ஆம், சுவாமிஜி! அது நான் தான்'' என்று கூறுவாள்.

இதற்கு ஏராளமான உதாரணங்கள் இருக்கின்றன. அனைத்திந்தியப் பயணத்தின் போது அவர் அந்நாளைய மைசூரின் முதலமைச்சர் திரு. கே. சி. ரெட்டியை, பெங்களூர் விமான நிலையத்தில் சந்தித்துச் சில நிமிடங்கள் உரையாடிக்

கொண்டிருந்தார். இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு திரு. ரெட்டி ரிஷிகேசத்திற்கு வந்தார்; அப்போது அவர் வேறுபட்ட வகை உடைகளை உடுத்தி இருந்தார்; எனினும் சுவாமிஜி அவரை உடனே அடையாளம் கண்டு கொண்டார். சாது முருகதாசர் 1940ல் ஆசிரமத்திற்கு வருகை தந்து அழகான பஜனைகள் (இறைவனுடைய புகழ்ப் பாடல்கள்) பாடினார். அவர் மீண்டும் 1948ல் வருகை தந்து மற்றொரு அற்புதமான நிகழ்ச்சியை வழங்கினார். அவர் முடிக்கும் தறுவாயில், குருதேவர் அவரிடம், ''அஸ்தோ மா ஸத் கமய'' என்று நீங்கள் முன்பு இங்கு வந்த போது அழகான பிரார்த்தனைப் பாடல் பாடி முடிவு செய்தீர்களே, அதைப் பாடலாகாதா?'' என்று நினைவூட்டினார், முருகதாசர் குருதேவரின் எல்லை மீறிய ஞாபக சக்தியைக் கண்டு மிகவும் ஆச்சரியமடைந்தார்.

குருதேவரின் இயல்புகள் அசாதாரணமான தனிச் சிறப்புடன் விளங்கின; அந்த இயல்புகளில் சில, வசீகரிக்குந் தன்மை, பொலிவும், ஒளியும் மிகுந்த உற்சாகம், பொங்கி எழும் சக்தி முதலியனவாகும். சுவாமி பரமானந்தர் ஒருமுறை, ''குருதேவர் தற்செயலாக ஏதாவது ஒரு சாலையின் பக்கம் நடந்து சென்றால் கூடத் தம்மைச் சுற்றியும் ஒரு கூட்டத்தைச் சேர்த்து விடுவார்; முன் கூட்டியே விளம்பரம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை. இலண்டன் மாநகரில் ஒரு தெருவில் அவர் சும்மா நடந்து போகட்டும்; அங்கு ஒரு பெருங் கூட்டத்தை அவர் கவர்ந்து விடுவார்'' என்று கூறினார். ஒரு முறை அவர் ஆசிரமத்திலிருந்து வெகு தொலைவில் இல்லாத, டேராடூனுக்குச் சென்றார். அப்போது குளிர்காலமாக இருந்தது; சுவாமிஜி நீண்ட மேல் சட்டை (கோட்டு) அணிந்திருந்தார். அத்தோற்றத்தைப் பார்க்கும் யாரும் அவரை ஒரு துறவி என்று கூடச் சொல்ல முடியாது. அவர் கடைத் தெரு பக்கம் நடந்து சென்றபோது ஒரு காரணமும் இல்லாமலே ஒரு பெருங்கூட்டம் அவரைப் புடை சூழ்ந்து கொண்டது. அவர்கள் சும்மா அவருடன் நடந்து செல்ல விரும்பினார்கள்.

இப்படி எல்லாம் இருக்கின்ற உடல் நலத்தை நாம் ஏன் விரும்புகிறேம் ? நம் உடம்பு உயிருடன் இருக்க வேண்டும் என்பதைக் கூட நாம் ஏன் விரும்புகின்றேம் ? உடல் நலம் என்பது அவ்வளவு முக்கியமானதா, என்ன? குருதேவர் ஒரு மருத்துவராக இருந்தார் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது; எனவே உடம்புக்கு மிகை உணவு வழங்குவதன் பயனின்மையை அவர் நன்கு பார்த்திருப்பார் என்பது நிச்சயம். உடம்பின் சக்தியைப் பற்றிய மாயைகளோ, மனித வாழ்வு பற்றிய மாயைகளோ அவர்பால் இருக்க வில்லை. உடம்பின் சக்தி வினியோகத்திற்கு வரையறை உண்டு என்பதையும், உடம்பு மூப்படையும் காலம் வரும் என்பதையும், அப்போது உடம்பின் சக்தி தளர்ந்துவிடும் என்பதையும் அவர் அறிந்திருந்தார்.

ஒரு முறை சுவாமி சிவானந்தர் ஒரு கோயிலுக்குச் செல் வதற்காகப் படிகளின்மீது ஏறி நடந்து கொண்டிருந்தார்; பாதி வழியில் ஒரு படியில் அவர் அமர்ந்துவிட்டார். அதே சமயம் ஆசிரமத்தில் வாழ்ந்து கொண்டிருந்த ஓர் இளம் சிறுவன் ஓடி வந்து படிகளில் உருண்டு விழுந்தான். அவனைப் பார்த்து மிகவும் புகழும் வகையில், ''ஹா! அவன் சக்தி நிரம்பிக் காணப்படுகின்றன். ஒரு காலத்தில் நான் கூட அப்படித்தான் இருந்தேன். ஆனல் இப்போதோ இந்த உடம்பினல் அப்படி இருக்க முடியவில்லை'' என்று சுவாமிஜி கூறினர். அவர் அதை அறிந்திருந்தார்.

மலேயா வாழ்க்கையைப்பற்றி வருத்தங் கலந்த குரலில் அவர் ஒரே ஒரு முறை மட்டும் குறிப்பிட்டதைக் கேட்டிருக் கின்றேன். ''பிற்காலத்தில் இவ்வாறு ஒரு நோயாளி அல்லது ஓர் ஊர் என்று மட்டும் அல்லாமல் உலகில் உள்ள ஒவ்வொருவரும் பயனடையுமாறு செய்யும் இத்தகைய பணியில் ஈடுபடுவேன் என்று எனக்கு முன்னமே தெரிந்திருந் தால், என் இளமைக் காலத்தில் நான் இன்னும் அதிகமான சக்தியை வீணுகாமல் தேக்கி வைத்திருப்பேன். என்னுடைய நலத்தில் இன்னும் அதிகமான கவனம் செலுத்தியிருப்பேன்;

மலேயாவில் அவ்வளவு சக்தியை நான் செலவிட்டிருக்க மாட்டேன்'' என்று அவர் கூறினார். சக்தியின் வினியோகம் வரையறைக்கு உட்பட்டது; ஆகையால் அதைப் பயன் மிக்க வகையிலும், புத்தி நுட்பத்துடனும், விவேகத்துடனும் செலவு செய்ய வேண்டும் என்பதை அவர் அறிந்திருந்தார். எவ்வளவு நீண்ட காலம் நாம் வாழ்ந்தாலும், இறுதியில் இறப்பு நேர்வதைத் தவிர்க்க முடியாது என்பதை அவர் தெளிவாக அறிந்திருந்தார். எனவே உடம்புக்காகவே உடல் நலம் என்பதில் அவருக்கு விருப்பம் இருந்ததில்லை. மற்றவர்களுக்குச் சேவை செய்யாத உடம்பில் வாழ அவர் ஒருபோதும் விரும்பியதில்லை. எனவே அவர் ஒரு முறை, ''நான் சேவை செய்யவே வாழ்கின்றேன்; நான் அனை வருக்கும் சேவை செய்யவே வாழ்கின்றேன்'' என்று எல்லோரும் அறியும்படி உறுதியாகக் கூறினார். வாழ்வின் ஒவ்வொரு கணமும் அந்த உடம்பு சேவை செய்யுமாறு கட்டளை இடப்பட்டது; மகிழ்விக்கப்படவில்லை; ஆனால் சேவையில் ஈடுபடக் கட்டளை இடப்பட்டது. உடம்பு நன்றாகக் கவனிக்கப்பட்டது; அவ்வாறே அதனிடம் நன்றாக வேலையும் வாங்கப்பட்டது.

---

## அத்தியாயம் இரண்டு

## தன்னலமற்ற சேவையின் இரகசியம்

குருதேவர் சிவானந்தரின் ஒளிமிகுந்த உருவத்தை ஒருமுறை கண்டாலும் காண்பவர் ஏற்கனவே ஊக்கம் பெற்றவராக விளங்குவார். அவர் செய்த மிகப்பெரிய சேவை என்று நான் கருதுவேன். அவர் யாருக்கும் அணுகு வதற்கு மிகவும் எளியவராகவும், பெரும்பாலும் ஒவ்வொரு வரும் சுலபமாகச் சந்திக்கக் கூடியவராகவும் இருந்தார். இதுவே அவருடைய தனிச்சிறப்புள்ள குணம். ஆசிரமத்தில் அவரே மிகவும் எளிதில் அணுகப்படக்கூடியவர். நாள் தோறும் குறைந்தது மூன்று முறைகளாவது அவர் வெளியில்

இருந்தார். காலை நேர வகுப்புக்களிலும், கோயில் வழி பாட்டிலும் அவர் கலந்து கொண்டார்; காலை பத்து மணி அளவிலிருந்து அவர் அலுவலகத்தில் பணி செய்தார். அதன் கதவு திறந்தே இருக்கும்; யாரும் எளிதாக உள்ளே வரலாம். குழந்தைகள் கூட உள்ளே ஓடி வந்து, ''சுவாமிஜி! இப்போது நேரம் என்ன?'' என்று கேட்பார்கள்; அவரும் விடை கூறுவார். சாலையில் நடந்து செல்லும் மக்கள், அவரைக் கண்ணுறக் கண்டு 'ஆ! இதோ சுவாமி சிவானந்தர்' என்று கூறி மகிழ்ந்தார்கள். கர்மயோகம் என்று சிறப்பித்துக் கூறப்படும் சேவையே அங்கு நடைபெற்றது.

கர்மயோகம் என்பது யாது? 1947-ல் ஓர் அமெரிக்க வணிகர் ஆசிரமத்திற்கு வருகை தந்து சில நாட்கள் தங்கி இருந்தார். விருந்தினராக வருவோர் தாங்கள் விடை பெறும் இறுதி நாளன்று மாலை சத்சங்கக் கூட்டத்தில் பேசுவது, ஆசிரமத்தில் வழக்கமாக இருந்தது. அமெரிக்கர், ஆசிரமத்தைச் சுற்றிலும் உலாவித் திரிந்து நாங்கள் செய்யும் பல்வேறு பணிகளை கவனித்தார். அவர், ''உங்களில் சிலர் பக்தி யோகத்தையும், சிலர் ஹட யோகத்தையும் இவ்வாறே அவரவர் விரும்பியவாறு பயின்று வருகிறீர்கள். அமெரிக்காவில் நாங்கள் கர்மயோகத்தைப் பயில்கின்றோம். நாங்கள் அனைவரும் அல்லும் பகலுமாக மிகவும் கடுமையாக உழைத்து ஏராளமான செல்வத்தைக் சம்பாதிக்கிறோம்'' என்று கூறினர். சுவாமிஜி, பின்னர், ''உண்மையான கர்மயோகம் இதுவல்ல. கர்மயோகம் என்பது இதிலிருந்து முற்றிலும் வேறுபட்டது. ஈசா வாஸ்யம் இதம் சர்வம் — இறைவன் மட்டுமே அனைத்துள்ளும் ஊடுருவி வசிக்கின்றான். இறைவன் மட்டுமே உண்மை. அவர் எங்கும் நிறைந்தவர்; எல்லாம் வல்லவர்; எல்லாம் அறிந்தவர். இக்காட்சியைப் பெறுபவர் யாரோ, அவர் மட்டுமே கர்மயோகியாவார்,'' என்று அவரிடம் தெரிவித்தார். ஏதோ ஒரு வகையில் நாம் சேவை செய்வதாகப் பாசாங்கு செய்கின்றோம்; அது தன்னலம் உள்ளது; அதுவல்ல, கர்மயோகம். மெய்யுணர்ந்த ஒருவருடைய கண்கள், அகத்தும் புறத்தும், இறைவன்

நிலவுவதை மட்டும் காண்கின்றன: அவருடைய செயல் இயற்கையானது; இச்சையற்றது; ஆணவமற்றது; முற்றிலும் தன்னலமற்றது; இதுவே கர்மயோகம்.

கர்மயோகம் என்பது நிச்சயம் யோக மாணவர் செய்யும் பயிற்சியன்று; ஆனால் நிறைநிலை பெற்ற ஒரு ஞானியின் வாழ்க்கையே அது. நோக்கத்துடன் — அது எதுவாக இருப்பினும் — செய்யும் செயல் கர்மயோகம் அன்று. தன்னலம், அகந்தை, தற்பெருமை ஆகியவற்றால் தூண்டப்பட்டுச் செய்யப்படும் செயல் அது அல்ல என்பது மட்டும் அன்று; மனம் முற்றிலும் நிபந்தனையற்று விளங்கினால் மட்டுமே உண்மையான, இயற்கையான செயல் செய்வது சாத்தியமாகும். 'நான் இதைச் செய்கின்றேன்' என்ற எண்ணம் எவ்வளவு காலம் நிலைத்திருக்கின்றதோ, அதுவரைக்கும் அச்செயல் தன்னல எல்லைக்கு உட்பட்டதாகத்தான் இருக்கும்; எவ்வளவு புனிதமாக இருப்பினும் அங்கு ஏதோ ஒரு நோக்கம் இருக்கின்றது.

எப்படி இருப்பினும், நம் அன்றாட வாழ்வில் ஒவ்வொரு நாளும் யோகத்தின் எல்லாப் பகுதிகளும் இணைந்தே செல்ல வேண்டும் என்று குருதேவர் விரும்பினார் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். நம்மைப் பொறுத்தவரை கர்மயோகம் என்பது தன்னலம் மிகக்குறைந்த அளவில் கலந்த ஏதேனும் ஒருவகை சேவையாகும். கர்மயோகம் ஆன்மீகப் பயிற்சியாகும்போது தன்னல இதயத்தைத் தூய்மைப்படுத்துகின்றது. தியானம் என்னும் உள்ளறையில் நுழைவதற்கு முன்பு, முன்னதாக மேற்கொள்ள வேண்டிய தூய்மைப் பயிற்சியாகக் கர்மயோகம் விதிக்கப்பட்டுள்ளது; குருதேவர் மலேயாவிலும், சுவர்க்காஸ்ரமத்திலும் வாழ்ந்த காலங்களில் இதை மிகவும் விரிவாகக் செய்து காட்டியுள்ளார்.

கர்மயோகத்தின் கருத்தைப் புரிந்து கொள்ள வேண்டுமென்றால், இதில் எடுத்துக்காட்டாக உள்ள ஒருவருடன் சிறிது காலம் வசிப்பது அவசியம். இல்லையென்றால் அதைப் பற்றித் தவறாகப் புரிந்து கொள்வதே நடைபெறுகின்றது.

உதாரணமாக, சுவாமி சிவானந்தர் தம் 'கர்ம யோகி' பற்றிய பாடலில் கூறப்பட்டுள்ள மிகவும் அழகான ஒரு கருத்து, ''உங்கள் உள் நோக்கம் என்ன என்பதைப் பற்றி எப்போதும் விசாரணை செய்யுங்கள்'' என்பது. 'நான் என் உள்நோக்கங்களைப்பற்றி விசாரம் செய்து கொண்டிருக்கின்றேன்'' என்று நாம் அடிக்கடி பாசாங்கு செய்து கொள்ளுகின்றோம், ஆனால் ''நான் ஏன் அப்படிச் செய்கின்றேன்?'' என்று நாம் நம்மைக் கேட்டுக் கொள்வதில்லை: ஏனெனில் அவ்வாறு கேட்டால், ''அடுத்த மனிதரைக் காட்டிலும் நான் ஆன்மீகத்தில் உயர்ந்தவன் என்று நிறுவுவதற்காகவே'' என்ற விடை கிடைக்கும். உள்நோக்கத்தை விசாரணை செய்வதன் உள்நோக்கம் என்ன? இதைச் செய்ய நீங்கள் இறைவனை நெருங்குவதற்கு இன்னும் சிறிதே தூரத்தில் இருக்கின்றீர்களா? நோக்கம் எதுவும் இல்லாமல், உங்கள் உள்நோக்கத்தை நீங்கள் ஆராய்ந்தால், நீங்கள் அவ்வாறு இருப்பீர்கள். குருதேவரிடம் நாங்கள் இதைத் தான் கண்டோம். இத்தகைய உதாரணம் இல்லை எனில், சொற்களுக்கு உயிர் இல்லை. ஆனால், வேறு யாரேனும் ஏதேனும் ஒரு செயலைச் செய்தபோது அதைப் பார்த்த நீங்கள், ''கடவுளே! அந்தச் சூழ்நிலையில் அவர் செய்தது போல நான் செயல்பட்டிருப்பேனா?'' என்று உங்களையே நீங்கள், — உங்கள் குறைகள் சரி என்று காரணங் கற்பிக்காமலும், இலட்சியத்தைத் தெய்வமாகக் கொண்டாடாமலும் — கேட்டுக் கொள்ள முடியுமா? (தவறாகக் கருத வேண்டாம் — குருதேவரிடத்தில் எனக்கு மிகுந்த பக்தி உண்டு. எல்லா வகைகளிலும் நான் அவரை வழிப்படுகின்றேன். ஆசிரமத்தில் நாள்தோறும் நாங்கள் அவருடைய திருவடிகளை நீராட்டி அத் தண்ணீரைப் பருகிக் கொண்டிருக்கும்போது, யாரேனும் ஒருவர் அவருக்குப் பாதபூஜை செய்வார்கள். அதெல்லாம் நல்லதுதான்; செய்ய வேண்டியது தான். ஆனால் நீங்கள் அவரை வெறும் தெய்வமாக மட்டும் ஆக்குவது கூடாது) இலட்சியம் இருக்கின்றது; அதை நீங்கள் பார்த்திருக்கிறீர்கள்: கூர்ந்து கவனித்திருக்கின்றீர்கள்; அதில் கவனம் செலுத்தியிருக்கிறீர்கள். பெரும்பாலும் அது உங்களால் எட்டமுடியாத

அளவுக்கு மிக மிகச் சேய்மையில் இருக்கிறது. நாம் மேகத்தைப் பார்ப்பதுபோல, நீங்கள் அதைப் பார்க்கக் கூடாது; மேகத்தின் பலனைப்போல் (மழைநீர்) அது நம்முள் கலந்துவிட வேண்டும். நாம் இத்தகைய நிறைநிலையை அடைய வேண்டும். அப்படி இல்லையென்றால் சுவாமி சிவானந்தர் நம்மிடையே வாழ்ந்திருக்க வேண்டிய அவசியம் எதுவும் இல்லை..

டாக்டர். குப்புசாமி, துறவியான பிறகு தான் கர்ம யோக ஆர்வம் அவருக்குத் தோன்றியது என்பதன்று. குழந்தைப் பருவத்திலேயே அவர்பால் அஃது இருந்தது. குருதேவரின் தாயார் மறைந்த பிறகு அவரைப் பேணிக் காத்து வளர்த்து வந்த அவருடைய மூத்த அண்ணியார், "அவன் ஒரு சாதாரணப் பையன். அவனிடம் அசாதாரண மாக எதுவும் இருக்கவில்லை. அவனிடம் குறும்புத்தனம் இருந்தது. அவன் வலிமையுள்ளவன்; மிகவும் வலிமை யுள்ளவன்; அவன் மற்றவர்களைக் கொடுமையாக நடத்தவும், அவர்களோடு சண்டை போடவும் வல்லவன். ஆனால் அவனிடம் இருந்த ஒரு நல்ல குணம் — தன்னிடம் இருக்கும் எதையும் மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்வதை நேசித்தான்," என்று என்னிடம் கூறினார். பிற்கால வாழ்க்கையில் அவரிடம் இது ஏறக்குறைய ஒரு மந்திரம் ஆகிவிட்டது, "உன்பால் உள்ள எதையும் மற்றவர்களோடு பகிர்ந்துகொள்." (அந்த அம்மையார் குறிப்பிட்ட மற்றொரு குணம் — அவன் சுவையுள்ள நல்ல உணவை விரும்புவான்; அது மிகவும் சரியான பக்குவமான முறையில் சமைக்கப்பட்டிருக்க வேண்டும்; சிறிதேனும் பக்குவக் குறைவு இருந்தால் அவன் அதை உட்கொள்ள மாட்டான். இந்தக் குணமும் அவருடைய வாழ்க்கை முழுவதும் நீடித் திருந்தது.) பலகாரங்கள் வைக்கும் பீரோவுக்குப் பின்னால் மறைந்துகொண்டு உண்ண அவரால் எப்போதும் முடியாது. அவர் எப்போதும் சில நண்பர்களை அழைத்து விருந்து வைப்பார். விருந்தோம்பும் பண்பு அவரிடம் எப்போதும் காணப்பட்டது. அவரால் தனியாக எதையும் செய்யவும்

இயலாது. தனியே தாம்மட்டும் எதையும் அனுபவித்து மகிழவும் இயலாது; பேரின்பமாகிய மெய்யுணர்தல், உட்பட இப்பண்பு நீடித்தது, அவர் ஒரு கட்டாயக் கொடையாளர். அவருடைய இரத்தத்தில் இப்பண்பு ஊறியிருந்தது.

இளம் டாக்டராக அவர் இருந்தபோது வெளியிட்ட 'அமிழ்தம்' என்ற மருத்துவ சஞ்சிகை முதலான நூல்களை இலவசமாக வழங்கும் நிகழ்ச்சி தொடங்கியது. மருத்துவ அறிவை — சிறப்பாக நோய்த் தடுப்பு முறைகளைப் பற்றிய அறிவை குருதேவர் மலேயாவில் மற்றவர்களுடன் பகிர்ந்து கொண்டார். உணவு, உடை, பணம் ஆகியவற்றைக் கூட அவர் வழங்குவார். நோயாளிகளை, நோயாளிகளாக நடத்தாமல், தம் நண்பர்களாகவே அவர் நடத்தினார். தேவைப்பட்டால் அவர்களைத் தம் இல்லத்துக்கும் அழைத்து வருவார்; அவர்களுடைய உடல் குணமடைவதற்காக நல்ல உணவை அவர்கள் பெறுமாறு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வார்; அவர்கள் தங்கள் இல்லங்கட்குத் திரும்பிச் செல்ல ரயில் கட்டணம் தருவார்; தகுந்த வேலைகளில் சேரவும் அவர்களுக்கு உதவி செய்வார்; அவர்களுடைய நலத்தைத் தனியாகவும், சமுதாய முறையிலும் தொடர்ந்து கவனித்து வருவார். துன்புற்று வருந்தும் நோயாளிகளுக்குச் சேவை செய்வதில் எந்த ஒரு தியாகமும் அவருக்குப் பெரிதன்று. செல்வந்தர்களைக் காட்டிலும் ஏழைகளின் நலம் பற்றியே அவர் மிகுதியும் கவலைப் பட்டார்; ஏழைகள் கட்டணம் செலுத்தச் சக்தியற்றவர்கள் என்பதை அவர் சிறிதும் பொருட்படுத்தவில்லை.

குருதேவர், தருமமாகவே — பாரபட்சமற்ற, கட்டுப் பாடற்ற தருமமாகவே இருந்தார். (சிரார்த்தம் என்பது ஒருவர், மறைந்த தம் பெற்றோரின் நினைவாக ஆண்டு தோறும் செய்யும் சடங்கு). குருதேவருடைய இல்லத்தில் நடைபெறும் சிரார்த்தச் சடங்குக்குச் செல்பவர்கள் விலையுயர்ந்த ஆடைகளையும், வெள்ளிப்பாத்திரங்களையும் அன்பளிப்பாகப் பெறுவதுடன் நூறு ரூபாயும் பெறுவது

வழக்கம். மற்றவர்களின் இல்லங்களில் பெரும்பாலும் இருபது ரூபாய் பெறுவார்கள். ஜோஹூர்பாராவில் இருந்த குருதேவரின் இல்லத்துக்கு ஒருமுறை வருகை தந்த துறவி ஒருவர் மிகுந்த அன்புடன் வரவேற்கப்பட்டு ஓர் இளவரசர்போல் பெருமையுடன் நடத்தப் பட்டார். அவர் விடைபெற்றபோது, குருதேவர், அவர் செல்ல வேண்டிய இடத்துக்குரிய முதல் வகுப்பு ரயில் டிக்கட்டைத் தந்து மனதார விடைகொடுத்து அனுப்பினார்.

குருதேவர் எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தார் என்பது சொல்லாமலே விளங்கும். ஈகை செய்யவும், எத்தகைய தியாகத்தையும் செய்யவும் முன் கூட்டியே வேண்டப்படும் தேவைகளில் ஒன்று, எளிய வாழ்க்கையாகும். நீங்கள் ஆடம்பரத்தை நேசித்தால், இவற்றுள் எதையும் உங்களால் செய்ய இயலாது. குருதேவர் கொடுத்தார், கொடுத்தார், கொடுத்துக்கொண்டே இருந்தார்; அவர் பெறவும் செய்தார்; பணம் பெட்டியில் எவ்வளவு இருக்கின்றதோ அவ்வளவுதான் நீங்கள் வழங்க முடியும்; அதைக்காட்டிலும் அதிகமாக வழங்க முடியாது, என்பது தெளிவு. அவர் எப்போதும் வற்புறுத்தி வந்த விளக்கம்: ''தன்னிச்சையாக, எல்லைமீறித் ததும்பும் இரக்கம்'' — இச் சொற்கள் என் செவியில் இன்னும் ஒலித்துக்கொண்டிருப்பதை நான் கேட்கின்றேன். அவர் வழங்கினார், பெறவும் செய்தார்; அவரைப் பொறுத்தவரையில் இரு வாய்ப்புக்களின்போதும் அவர் மற்றவருக்கு நன்றி தெரிவித்தார். நீங்கள் அவருக்கு ஏதேனும் தந்தால் அவர் மகிழ்ச்சியடைவார்; மீண்டும், அவர் உங்களுக்கு ஏதேனும் தந்தால் மகிழ்வுடன் உள்ளம் நிறைந்த நன்றியைத் தெரிவிப்பார்; நீங்கள் பெற்றுக் கொண்டமையாலும், உங்களுக்குச் சேவை செய்ய ஒரு சந்தர்ப்பத்தை நீங்கள் தந்தமையாலும் அவர் அவ்வாறு செய்வார். நான் அவருடைய உதடுகளில் இருந்து வெளிப் படும் பின்வரும் சொற்களைப் பல கோடிக்கணக்கான முறை கள் கேட்டிருக்கின்றேன். ''ஓர் ஏழை அல்லது நோயாளி உங்கள் வீட்டைத் தேடிவந்து அவருக்கு உதவி செய்யும்

வாய்ப்பை நீங்கள் பெறும்போது, இந்த வடிவில் வந்து சேவை செய்யும் வாய்ப்பைத் தந்துள்ளவர் கடவுள் என்றே தெரிந்துகொள்ளுங்கள். இங்கு வந்தமைக்காக நீங்கள் ஆண்டவனுக்கு நன்றி செலுத்துங்கள்''.

திரு. நரசிம்ம ஐயர், * டாக்டரிடம் சமையல்காரராகச் சேர்ந்தபோது குறிப்பிட்ட சம்பளம்பற்றி – அதாவது 300 – 400 ரூபாய், உணவு, உடை, தங்குமிடம் செலவுகள் என்று உடன்பாடு செய்து கொண்டனர். முதல் மாதம் முடிந்த முதல் நாள் குருதேவர் தம் கைகளில் ஒரு தட்டுடன் சமையல் அறைக்குள் ஓடிவந்தார். தட்டில் பழங்கள், மலர்கள், புத்தாடைகள், 500 ரூபாய் முதலியன இருந்தன. இந்திய இல்லங்களில் ஒரு விருந்தினர், ஒரு மகான் அல்லது ஓர் அந்தணர் இவ்வாறு தான், கடவுள்போல் வரவேற்கப் படுகின்றார். சமையல்காரர் தம் ஊதியத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்; அவர் ஏதோ விரும்புவதுபோல டாக்டரைப் பார்த்தார்; குருதேவர் அவர் முன்னால் அடிபணிந்து, 'ஐயரே! இது உங்கள் சம்பாவனை..........அது போதிய அளவில் உள்ளதா?'' என்று வினவினார். 'சம்பாவனை' என்ற சொல்லில் புனிதமான ஓர் உட்பொருள் உண்டு. அதில், ''பக்தியோடும் பணிவோடும் வழங்கும் படையல்'' என்ற பொருள் பொதிந்துள்ளது. 'சம்பளம்', 'ஊதியம்', 'கூலி' போன்ற சொற்களைக் குருதேவர் ஒருபோதும் பயன் படுத்த மாட்டார். இறைவனின் வெளிப்படும் தோற்றங் களாகவே அவர் பணியாட்களைப் பார்த்தார். வாழ்நாள் முழுவதும் அவரிடம் இதே மனப்பான்மை இருந்தது. தம் சேவை உள்பட, அவர் எதை வழங்கினாலும் அது இறை வனுக்குச் செலுத்தப்படும் காணிக்கையாகவே இருந்தது.

---

* திரு. ஐயர், குருதேவரால் முறையான சீடராக ஏற்றுக் கொள்ளப்பட்டு மீண்டும் சுவாமி சிவானந்தரிடம் வந்து சேர்ந்தார். குருதேவருடைய மலேயா வாழ்க்கைப்பற்றிய செய்திகள் பெரும் அளவில் அவரிடம் தொகுத்துச் சேர்க்கப்பட்டவையாகும்.

## கட்டாயக் கொடை

குருதேவரிடம் உள்ள பொருள் எதுவாயினும், அது தேவைப்படும் யாருக்கும் கிடைக்கும். ஒரு பிச்சைக்காரர் வந்து இல்லத்தில் முன்னல் நின்றால், அழுகிப்போன பொருளைக் கழித்துக்கட்டுவது நம் வழக்கம் (இது நமக்கு மிகவும் வெட்ககரமானது). உங்களிடம் ஒரு குலை வாழைப்பழங்கள் இருக்கும்; நல்லவற்றை நீங்கள் உண்டிருப்பீர்கள். மிகவும் பழுத்ததையும், அழுகிப்போன வையும் ஆக உள்ள பழங்களே எஞ்சியிருக்கும். உங்கள் வீட்டைத் தேடி ஒரு பிச்சைக்காரர் வந்தால் அவை அவருக்குக் கிடைக்கும். குருதேவரை இப்படிச் செய்யுமாறு நீங்கள் ஒருபோதும் தூண்ட முடியாது. குறைந்தது ஒரு முறையாவது நான் அதைப் பார்த்தேன், அவர் உண்ணப் போகும்போது, அவ்வளவு சிறிது பழையதாகி இருந்ததை அவர் கண்டார்; அப்போது ஒருவர் அவரிடம், ''சுவாமிஜி! அதை எடுத்து வைத்துக் கொள்ளுங்கள்; அதை நாம் பசுவுக்கோ அல்லது குரங்குகளுக்கோ கொடுத்து விடலாம்,'' என்று யோசனை கூறினர். அவர், ''வேண்டாம். அதை எறிந்துவிடுங்கள், நான் உண்பதற்குத் தகுதியில்லாத உணவு வேறு யார் உண்பதற்கும் தகுதியில்லாததேயாகும்'' என்று விடை தந்தார்.

அடிக்கடி நிகழ்கின்ற, எடுத்துக்காட்டாக விளங்கக்கூடிய ஒரு நிகழ்ச்சி, இதோ; மலேயாவில் உள்ள டாக்டரின் (குருதேவரின்) வீட்டுக் கதவருகே ஒரு பிச்சைக்காரர் வருகின்றார். அவர் என்ன எதிர்பார்க்கின்றார்? ஒரு சில காசுகள் அல்லது பயனற்ற பழைய உணவு கொஞ்சம்? ஒருவருக்கு மட்டுமே போதியதாக உள்ள உணவு உள்ளது; டாக்டர் அமர்ந்து அதை உண்ணப் போகையில், கதவருகே பிச்சைக்காரரின் குரல் கேட்கின்றது. சமையல்காரர், ''நான் போய் அவருக்கு ஏதாவது தருகின்றேன்'' என்று கூறுகின்றார்; ஆனல் டாக்டர் சென்று அவரை உள்ளே அழைத்துக் கொண்டு வருகின்றார்; ஆச்சரியமடைந்த அப் பிச்சைக்காரரைச் சமையலறையில் அமரச் செய்கின்றார்;

முதலில் அவருக்கு உணவைப் பரிமாறுகின்ருர், மூவருக்கு வேண்டிய அளவு உணவு அங்கே இல்லே, எஞ்சிய உணவை டாக்டரும், சமையல்காரரும் பகிர்ந்து கொள்கின்றனர். டாக்டர், சமையல்காரரிடம், ''வாருங்கள், பசித்த ஒரு மனிதரைத் திருப்தி அடையச் செய்தீர்கள். எஞ்சிய உணவை அது எதுவாக இருப்பினும், நாம் பகிர்ந்து கொள்வோம். அவருடைய மனநிறைவு நம்முடைய பசியையும் ஆற்றிவிடும்'' என்று கூறினர். கர்மயோகத்தின் உட் கருத்து இதுவேயாகும்.

எல்லாவற்றுக்கும் மேலாக, மக்களுக்கு உணவை வழங்குவதே அவருக்கு மிகப் பெரும் மகிழ்ச்சியை அளித்தது. மக்களே இன்னும் அதிகமாக உண்ணச் செய்யுமாறு அவரால் தூண்டிவிட முடிந்தபோது அவர் பேரானந்தம் அடைவார்; ஆதலால் அவர் வழங்கிய இருபது ஆன்மீகக் கட்டளேகளில் ஒன்று, ஆசிரமத்தில் நீங்கள் நுழைந்தவுடனே அவரால் அசட்டை செய்யப்படும். ''சிறிதே உண். சிறிதே பருகு...'' என்ற பாடலே அவர் வழக்கமாகப் பாடுவார்; ஆனல் நீங்கள் உங்கள் இல்லத்துக்குத் திரும்பிச் சென்ற பிறகு தான் அவ்வாறு செய்ய முடியும். அவர் சில பழங்கள் அல்லது தின்பண்டங்களேப் பிரசாதமாக வழங்கும்போது அவர் தம்முடைய பெரிய கைகளால் அள்ளி எடுத்து உங்களுக்கு வழங்குவார். நீங்கள் உடனே அதை அவருடைய முன்னலேயே உண்டுவிட வேண்டும். அவர் உங்களேக் கண் காணிக்கும்போது அது அவருக்கு எல்லேயற்ற மகிழ்ச்சியைத் தரும். நூறு அல்லது இரு நூறு பேர் அமர்ந்து அவர்கள் தங்கள் மனதார உண்பதைக் காணும்போது அவர் மெய் சிலிர்த்து, மெய்சிலிர்த்து மகிழ்ச்சியடைவார். தம்முடைய போதனேக்கு இது நேர் முரணுக இருக்கிறதே என்பதை அவர் எப்போதாவது உணர்ந்தார் என்று நான் நினேக்கவில்லே. ஏகாதசி (அமாவாசைக்குப் பிறகு வரும் பதினேராவது நாள்) பட்டினி விரதம் இருப்பதுபோன்ற சில கட்டளேகளேப் பற்றி அவர் தொடக்க காலத்தில் மிகவும் கண்டிப்பாக இருப்பது வழக்கம்; ஆனல் பிற்காலத்தில் இத்தகைய விதிகளும்

தளர்த்தப்பட்டன. பழங்களேயும், தின்பண்டங்களேயும் மக்கள் அவருடைய அலுவலகத்திற்குக் கொண்டு வருவார்கள்; ஒரு கணம்கூடக் காத்திராமல் அவற்றையெல்லாம் சுற்றிலும் உள்ளவர்களுக்கு அவர் பரிமாறி விடுவார்.

ஒரு முறை இது ஏறத்தாழ ஒரு தந்திர நிகழ்ச்சியாகவும் மாறியது. பம்பாயிலிருந்து ஒரு தென்னிந்திய மாது வந்தார்; அவர் மிகுந்த பக்தியுள்ளவர்; குருதேவருக்கு மிகவும் பிரியமாக இருக்கும் என்று அவர் அறிந்த சில தின்பண்டங்களேச் சிறப்பாகத் தயாரித்து அவற்றை ஆசிரமத்துக்குக் கொண்டு வந்தார். அந்த அம்மையார் இத்தகைய தின்பண்டங்களேச் செய்வதில் தனித் திறமையுள்ளவர்; எனவே சிரமத்துடன் உழைத்தார் என்பது தெளிவு. எல்லோருக்கும் பரிமாறும் குருதேவரின் வழக்கத்தை அவர் அறிந்திருந்தமையால் அதையும் கணக்கில் கொண்டு அதற்கேற்றவாறு அவர் கொண்டு வந்திருந்தார். ஆனுல் குருதேவர் தாம் எதுவும் எடுத்துக் கொள்ளாமல் தட்டில் இருந்த எல்லாவற்றையும் மற்றவர்கள் எடுத்துக் கொள்ளுமாறு தட்டு அனைவரிடமும் சுற்றிவருமாறு வினியோகம் செய்யப்படுவதைக் கண்டு அம்மையாருக்கு அநேகமாக, அழுகையே வந்து கண்ணீர் சிந்தும் நிலேயில் இருந்தார். குருதேவர், பரிமாறிக் கொண்டிருந்தவரைத் திருப்பிப் பார்த்து, ''அந்த அம்மையாருக்கும் நீங்கள் சிறிது தர வேண்டும்,'' என்று கூறியவர், திடீரென்று அம்மையாரின் முகக் கவலேயைக் கவனித்தார். பரிமாறும் சுவாமியைப் பார்த்து உடனே கட்டளேயிட்டு, ''சுவாமிஜி! இருங்கள், அதை இங்கே கொண்டு வாருங்கள், எஞ்சியுள்ளது எனக்கு வேண்டும். நான் அதை உண்ணப் போகின்றேன். அதை யாருக்கும் கொடுக்க வேண்டாம்'' என்று கூறினுர். அம்மையாரின் முகம் மலர்ச்சி பெறுவதைக் கண்டார்; அம்மையாரின் கன்னங்களில் மகிழ்ச்சி நிரம்பியது. 'அதைக் கொண்டு வாருங்கள். நான் அதை உண்ணப்போகின்றேன்' என்று கூறிய அவர் சிறிதளவு தம் வாயில் போட்டுக் கொண்டார். பிறகு எப்படியோ தட்டு மீண்டும்

வினியோகத்துக்காக அனுப்பப்பட்டது. மற்றவர்களுடன் எதையும், சிறப்பாக உணவுகள், பழங்கள், அல்லது புத்தகங்கள் ஆகியவற்றைப் பகிர்ந்து கொள்ளும் போது அவர் அடையும் களிப்பைச் சொற்களால் விவரிக்க இயலாது.

இன்னொரு சமயம் நடந்த நிகழ்ச்சி — இன்னும் பரிதாப மானது. இது 1948 அல்லது 1949-ல் நடைபெற்றது. அப்போது ஆசிரமம் மிகவும் வசதிக் குறைவுடன் இருந்தது. பழங்கள் கிடைப்பது அருமை; அவற்றின் விலையோ மிகமிக அதிகம். குருதேவருடைய குடிசையில் யார் நுழைந்தாலும் ஏதாவது ஒன்றை அவர் பெற்றுக் கொள்ளவேண்டும். நான் அவருக்காகப் சில பணிகளைச் செய்து முடித்தேன். ஆரஞ்சுப் பழங்கள் இருந்தால் கொண்டு வருமாறு குரு தேவர் சமையல்காரரிடம் கூறினார். அவர் குருதேவர் மட்டுமே பயன்படுத்துவதற்காக என்று சில ஆரஞ்சுப் பழங்களை வாங்கிப் பத்திரமாக வைத்திருந்தார். அவர் குருதேவரிடம் மிகப் பெரும் பக்தி பூண்டிருந்தார்; அவர் சிறிதும் அசைவதாகக் காணப்படவில்லை. இடையே, குரு தேவர் சமையலறைக்குள் நுழைந்தார். பழங்கள் இருந்த இடத்தை அவர் கண்டு கொள்ள முடிந்தது; எனவே ஒன்றை எடுத்து என்கையில் தந்தார். அதன் பின் சிறிது நேரங்கூட ஆகவில்லை; அதற்குள் அவர் சில பழங்களைக் குரங்குகளுக்கும் மீன்களுக்கும் உண்பித்தார்; ஒவ்வொன்றாக எல்லாப் பழங் களும் தீர்ந்து விட்டன. கட்டாயமாகக் கொடுக்கும் அவருடைய இயல்பு இத்தகையது. ஆரஞ்சுப் பழங்கள் கிடைப்பது அரிதாக இருப்பினும், மீன்களும் குரங்குகளும் கூடத் தங்கள் பங்கைப்பெற்று அனுபவித்து மகிழ வேண்டும்!

1944—45ல் பத்து அல்லது பன்னிரண்டு பேர்கள்தாம் ஆசிரமத்தில் இருந்தோம்; சாதாரணமாக நாங்கள் அனை வரும் வழக்கமாகச் சமையலறைக்கு வந்து உணவை உட் கொள்ளுவோம். உணவு உண்ணும் கூடமாக இருந்ததைக்

காட்டிலும், நாளடைவில், அலுவலகமாக அவ்விடம் பயன் படுத்தப்பட்டது. சில சமயங்களில் குருதேவர் அங்கு வந்து, அங்கிருந்த சிமெண்டு பெஞ்சுகளில் ஒன்றில் அமர்ந்து, ''இதை ஒரு சிறிய இடம் என்று நீங்கள் கருதுகின்றீர்கள்; ஆனால் இங்கிருந்து லக்ஷ்மண ஜூலா வரையில் மக்கள் அமர்ந்து உண்பதை, நீங்கள் ஒரு நாள் காண்பீர்கள்'' என்று கூறுவார். அது அப்படியே நிகழ்ந்தது. உண்மையாக நாங்கள் சாலையோரமாக இருந்த எல்லா மக்களுக்கும் பரி மாற முடியவில்லை, 1958—59ல், ஆசிரமத்தில் உண்ட அனைவரையும் நீங்கள் வரிசையாக நிறுத்திப் பார்த்தால், குறைந்தது ஒரு மைல் நீளம் இருக்கும்; நாநூறு முதல் ஐநூறு வரையில் மக்கள், மிக எளிதில், இருந்தார்கள். அத்தகைய வருங்காலக் காட்சியைக் காணும் திறம் அவருக்கு இருந்தது.

ஒருமுறை அவருக்கு டைபாயிடு காய்ச்சல் வந்தது; அவரால் நிற்கவும் முடியவில்லை, அவர் மிகவும் பலவீனமாக வும் மயக்கமாகவும் இருந்தார். கொல்லைக்குச் செல்வ தாயின் அவர் உண்மையில் இரண்டுபேரின் உதவி வேண்டி இருந்தது. ஒருநாள் அவர் கொல்லைப்புற அறையி லிருந்த ஒரு ஜன்னல் வழியாகக் கங்கையைப் பார்த்துக் கொண்டிருந்தார். 'அங்கே யார் இருக்கிறீர்கள்' என்று வினவினர். எங்களில் ஒருவர் விடை கூறினோம். அவர் ''அங்கே மிகவும் வெப்பமாக இருக்கின்றது. அவர் அங்கே அமரக்கூடாது என்று நீங்கள் போய் அவரிடம் கூறுங்கள். எவ்வளவு நேரமாக அவர் அங்கே அமர்ந்திருக்கின்றார். அநேகமாக, அவர் இன்னும் மதிய உணவை உண்ண வில்லை,'' என்று தெரிவித்தார். அவர் தம் சமையல்கார ரிடம், ''அவர் சாப்பிட்டாரா இல்லையா என்று நீங்கள் போய்க் கேளுங்கள். சாப்பிடவில்லை என்றால், இங்கே வந்து ஏதேனும் உணவை உண்ணுமாறு கூறுங்கள்'' என்று அறிவித்தார்.

அவருடைய ஒரே விருப்பம் அதுதான்! நீங்கள் நன்றாக உண்பிக்கப்பட வேண்டும்: நீங்கள் துன்புறக் கூடாது;

எதுவுமில்லாமல் நீங்கள் போகக் கூடாது, இவ்வாறு நடந்து கொண்டவர் வேறு யாரையும் எப்போதும் நான் கண்ட தில்லை. முதலில் உங்கள் உடம்புக்கு உணவு; அதன் பிறகு உங்கள் உள்ளத்துக்கு உணவு. இக்கொடை முற்றிலும் பாரபட்சமற்றது. அது நடைபெற்றாக வேண்டியதாக இருந்தது. உணவும் நூல்களும் முற்றிலும், பாரபட்ச மில்லாமல் பகிர்ந்தளிக்கப்பட்டன. தருமம் — கொடை, கொடை, கொடை — எல்லா நேரங்களிலும் நடைபெற்றாக வேண்டும்; நாம் சிறிதும் சிந்தித்துப் பார்க்க முடியாத ஒரு மனச்சாட்சி அவருக்கு இருந்தது. அறிவு பூர்வமாக நாம் அதைப் புரிந்து கொள்ள முயன்றால் அது ஒரு சில சொற்களில் அடங்குமாறு சுருங்கிவிடுகின்றது.

## தானாகச் சுரக்கும், வரம்பு மீறித் ததும்பும் இரக்கம்

பல இடங்களுக்கும் சுற்றித் திரியும் பிச்சைக்காரர் ஒருவர், ஒரு முறை ஆசிரமத்திற்கு வந்தார். அவரைப் பார்த்தால் களைப்படைந்தவராகக் காணப்படவில்லை; எனவே அவர் எவ்வாறு பயணம் செய்தார் என்று சுவாமிஜி கேட்டார். ரயிலில் முதல் வகுப்புப் பெட்டிகள் காலியாக இருந்தமையால், அவர் அவற்றில் பயணம் செய்து, அந்த வகையில் தாம் கூட்டம் மிகுந்த மூன்றாம் வகுப்புப் பயணி களுக்குத் தொந்தரவு விளைவிக்கவில்லை என்று அவர் பதில் கூறினார். அவருக்கு மிகவும் நல்ல குரலும், அதிசயிக்கத்தக்க இசைத்திறமும் இயல்பாக உடன் பிறந்தனவாக அமைந் திருந்தன. பாட முடியுமா? என்று குருதேவர் அவரை வினவவும் அவர், ''சுவாமிஜி! ஒவ்வொரு பிச்சைக்காரரும் எப்படிப் பாடுவதென்று சிறிதளவாவது தெரிந்திருப்பார், என்பது என் ஊகம்'' என்று விடை தந்தார். குருதேவர், 'அற்புதம்! இன்று சத்சங்கத்தின்போது நாங்கள் உங்கள் இன்னிசை நிகழ்ச்சியைக் கேட்போம்' என்று கூறினார். ஆசிரமவாசிகளும், விருந்தினர்களும் ஆக அனைவரும் பஜனை மண்டபத்தில் கூடினார்கள். நிச்சயம் அப்பிச்சைக்காரர்

தொல்லையில் மாட்டிக் கொண்டார். அச்சத்தால் வெளிறிய அவருடைய முகத்தைக் காட்டிலும் அஞ்சிய ஒரு முகத்தை நீங்கள் கண்டிருக்கவே முடியாது. சத்சங்கம் என்றால் என்ன என்பதை அவர் அறியார்; தம் வாழ்நாளில் அவர் ஒரு முறை கூட மேடையில் இன்னிசை நிகழ்ச்சியை நடத்திய தில்லை. மேடையில் அவரை அமரச் செய்த பின் ஒரு துறவி கையில் மலர் மாலையுடன் தம்மை நோக்கி வருவதைக் கண்ட அவர் உறைந்து போனார். அவருக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை; அங்கிருந்து எப்படி ஓடிப் போவதென்பதையும் அவர் அறியார். இவை எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற் போலக் குருதேவர், 'சங்கீத ரத்தினம்' என்ற விருது வழங்கினார்; இசையில் வல்லவர் என்பது அதன் பொருள், அவராலோ அல்லது இக்காட்சியை நேரில் பார்த்த வேறு எவராலோ முழு நிகழ்ச்சிகளையும் ஒரு நாளும் மறக்க முடியாது.

இரண்டு காசை எதிர்பார்க்கும் ஒருவருக்குச் சில ரூபாய் களைத் தந்து உங்கள் இரக்கத்தினால் அவரை மூழ்கடித்து என்ன நடைபெறுகின்றதென்று, ஒரொரு சமயம், நீங்கள் பாருங்கள். அவருடைய முகத்தில் மலரும் ஒளியைப் பார்த்து அவருடைய உள்ளத்தில் ஏற்பட்ட மகிழ்ச்சியை நீங்கள் உணருங்கள். அநேகமாக அதுதான் தெய்வீக ஒளியாக இருக்கும்.

வரம்பு மீறித் ததும்பும் இரக்கத்தை நாங்கள் ஏன் பயிற்சி செய்யவில்லை? இதற்கு இரண்டு காரணங்கள் தென்படுகின்றன. முதலாவது காரணம், ''நான் ஒரு முறை இவ்வாறு செய்தால் உதவி பெற்றவர், ஒவ்வொரு முறையும், மீண்டும், மீண்டும் என்னிடம் அவ்வாறே எதிர் பார்ப்பார்; நான் பத்து நாளில் திவாலாகிவிடுவேன். இது உங்களுக்குத் தெளிவாகத் தெரியும். இது முற்றிலும் உண்மை. சுவாமி சிவானந்தரும் நாள்தோறும் இவ்வாறு செய்யவில்லை. இது தெளிவு. அப்படிச் செய்திருந்தால் அவரால் ஓர் ஆசிரமத்தை மட்டும் அல்ல, ஒரு சிறிய

குடிசையைக் கூடக் கட்டியிருக்க முடியாது. ஆனால் ஒரொரு சமயம் நீங்களாகவே ஓர் உபசாரத்தைச் செய்து பாருங்கள்; இருபது ரூபாய் என்பது உங்களுக்கு அதிகம் அல்ல; ஆனால் ஓர் ஏழைக்கு, இந்தப் பிச்சைக்காரருக்குத் தரப்படும்போது, ஒரு சில காசுகளை மட்டுமே எதிர்பார்த்த அவரிடம் உடனே, ஒரே கணத்தில், மிகப் பெரிய எதிர்விளைச்சலைத் தோற்றுவிக்கின்றது. ''ஹா! என்று வியந்து அவர் உங்களைப் பார்த்து'' என் ஆண்டவனே! உண்மையாகவே எனக்குக் கொடுத்துவிட்டீர்களா!'' என்று பெருமகிழ்ச்சி அடைவார். ஒரொரு சமயம் நீங்களாகவே இத்தகைய பேரின்பமயமான, அழகிய உணர்வாகிய விண்ணுலக மகிழ்ச்சியைத் தாருங்கள்.

இரண்டாவது காரணம், ''அவர் அதற்குத் தகுதியுள்ளவர் என்று எனக்கு எப்படித் தெரியும்?'' என்பது (இறைவன் இந்த வினாவைக் கேட்கத் தொடங்கிவிட்டால், அவர் தம்மையே ''நல்ல காற்றைச் சுவாசிக்க இம்மக்கள் தகுதி உள்ளவர்கள் என்று எனக்கு எப்படித் தெரியும்? என்று கேட்டால் விடை எதுவாக இருக்கும்? நாம் அனைவரும் உயிருடன்கூட இருக்க மாட்டோம்.) சில தருமங்களைச் செய்ய நினைக்கும்போது மாத்திரம் இத்தகைய வினாக்கள் உதிக்கின்றன! நேற்று நீங்கள் வாங்கிய புத்தாடைகளைப் பற்றி நீங்கள் என்ன சொல்ல முடியும்?

'பாரபட்சம் காட்டும் தருமம்' என்று கூறப்படும் அறம் குருதேவருக்குச் சிறிதும் பயன் தருவதன்று. கும்பமேளா (ஒரு பண்டிகை) 1950ல் நடைபெற்றபோது, ஆசிரமத்தின் வழியாகச் சென்ற சாலையில் யாத்திரிகர்களின் கூட்டமாகிய பெருவெள்ளம் தொடர்ந்து சென்றுகொண்டிருந்தது. சாலையோரத்தில் ஒருவகைத் தனி அலுவலகத்தை நாங்கள் அமைத்தோம். அங்கு குருதேவர் ஒரு மணி நேரம் அல்லது இரண்டு மணி நேரம் அமர்ந்திருந்து யாத்திரிகர்களுக்குத் தரிசனம் தருவது வழக்கம். இளைஞர்கள் அடங்கிய ஒரு சிறிய குழு, சில இசைக் கருவிகளுடன் பாடிக்கொண்டிருந்தனர். குருதேவர் அதைக்

கேட்டார். அவர்களை அழைக்குமாறு கூறினார். சுவாமி பரமானந்தர் அக் குழுவில் இருந்த அனைவரையும் அழைத்தார். குருதேவர் பெரு மகிழ்ச்சியடைந்தார். அவர்களைப் பார்த்து, ''வாருங்கள், இங்கே அமர்ந்து ஒருமணி நேரமாவது பாடுங்கள்' என்று கூறினார். அவர்கள் அவ்வாறே அமர்ந்து மிகவும் நன்றாகப் பாடினார்கள். குருதேவர் சிறிது பணத்தை மலர்களோடும் பழங்களோடும் ஒரு தட்டில் வைத்து அக்குழுவின் தலைவரிடம் தந்தார். இதை யாரோ ஒருவர் கவனித்து, ''அவர்கள் தெருவில் விற்பனை செய்பவர்கள். சுவாமிஜி! அவர்கள் சிகரெட்டுகளை விற்கிறார்கள். இறைவனுடைய புகழ் நாமங்களைப் பாடும் பக்தர்கள் அல்ல அவர்கள். அநேகமாகக், கூட்டத்தைக் கவரவே அவர்கள், 'ஹரே ராம ஹரே கிருஷ்ண' என்று பாடுகின்றார்கள்'' என்று குறிப்பிட்டார். அப்போது குருதேவரின் முகத்தில் தோன்றிய குறும்புப் பார்வையை நான் இன்னும் நினைவில் வைத்திருக்கின்றேன். ''அப்படியா? அப்படியென்றால் இன்னும் சில ரூபாய்களைச் சேர்த்துவிடுங்கள். அவர்களுக்கு இன்னும் பத்து ரூபாய்கள் கொடுங்கள். அவர்கள் இறைவனுடைய புகழ் நாமமாகிய மகா மந்திரத்தை மிகவும் அழகாகப் பாடினார்கள். தருமம் தருமம் தான். நீங்கள் தந்தாக வேண்டும். பெறுபவர் அதை வைத்துக் கொண்டு என்ன செய்கிறார் என்பதைக் கவனிப்பது நம் வேலை அல்ல. அது இறைவனுடைய வேலை'' என்று அவர் கூறினார்.

தன்னிச்சையாகப், பொங்கி வழிகின்ற, கேள்விக்கு இடம் இராத இரக்கம் இதுதான். அதற்கு எந்த வகையான உள்நோக்கங்களும் சிறிதும் இல்லை. தேவைப்படுவோரைக் காணும்போது கொடுங்கள். குருதேவர் தம் கொடையைப் பற்றித் திரும்பவும் குறிப்பிட்டதை நான் ஒரு போதும் கேட்டதில்லை. குருதேவர் கொடைப் பணியைச் செய்வதைக் கவனிக்கும்போது ஒருவர் பெறும் உணர்வு — நீங்கள் இறக்கும்போது எப்படி உங்கள் உடம்பு தானாக விழுந்து விடுகின்றதோ அதுபோலவே உங்கள் தருமமும் தானாக நிகழட்டும்.

## சோதனைகள் ஏற்பட்ட சூழ்நிலைகள்

சுவாமி சிவானந்தரைப் போன்ற ஒருவரைத் தலைவராகப் பெற்றுள்ள ஆசிரமத்தில் — இயக்கத்தில் பணி செய்யும் செயலாளருக்கும், நிதிக்காப்பாளருக்கும், இவ்வாறே ஒவ்வொருவருக்கும், அவரால் ஏற்படும் தலைவலியை நீங்கள் நன்கு கற்பனை செய்து பார்த்துக் கொள்ள முடியும். அவர் அன்புடன் கொடுத்தார், கொடுத்தார், கொடுத்துக் கொண்டே இருந்தார்; பணம் எங்கிருந்து வருகின்றது என்பதைப் பற்றியோ அல்லது அது எங்கே போகின்றது என்பதைப் பற்றியோ எந்த எண்ணமும் இருப்பவரைப்போல அவர் காணப்படவில்லை. ஆனால், மற்றவர்கள் அப்படி நினைத்தாலும் அவர் யாவும் அறிந்திருந்தார். ''அது இறைவனிடமிருந்து வருகின்றது; இறைவனிடமே திரும்பவும் போகின்றது. நாம் வழிகளாக மட்டுமே இருக்கின்றோம். ஆசிரமமாகிய இந்த நிறுவனத்தை நாம் நடத்திக்கொண்டிருப்பதாக நினைத்துக்கொண்டிருக்கின்றோம்; ஆனால் நாம் பொறுப்பாளர்களாக மட்டுமே இருக்கின்றோம்'' என்பது அவருடைய கூற்று.

குறைந்தது ஆண்டுக்கு ஒரு முறையாவது ஆசிரமம் நிதி நெருக்கடியை அனுபவித்து வந்தது. குருதேவர் நிலைமையை மனப்பூர்வமாகச் சிந்தித்துப் பார்த்து, ''நாம் மிகவும் கவனத்தோடு இருக்க வேண்டும். புதிய சாதகர் யாரையும் நாம் ஆசிரமத்தில் சேர்க்கக்கூடாது'' என்று கூறுவார். வழக்கமாக இது சில நாட்களுக்குத்தான் நீடிக்கும். மாற்றுடை கூட இல்லாத ஏழை மனிதர் யாரேனும் ஒருவர் ஆசிரமத்தில் தங்கியிருக்க அனுமதி கேட்டு வந்தால் உடனே, சுவாமிஜி, சரி சரி . . அவரைத் தங்க விடுவதே நல்லது. அவர் வேறு எங்கே செல்வார்? செலவுகள் பற்றிக் கவலைப்பட வேண்டாம். ஒவ்வொரு மனிதரும் தமக்குரிய உணவுப் பங்கையும் கொண்டு வருகின்றார். கடவுள் அவரை இங்கு அனுப்புவதற்கு முன்னால் அவருக்குத் தேவையான உணவு வினியோகப் பங்கைச் சமையலறைக்கு ஏற்கனவே பட்டுவாடா செய்துவிடுகின்றார்.

இவை வெறும் சொற்களல்ல; நீங்கள் அவருடைய முகத்தையும் கண்களையும் பார்த்தால் அவர் உண்மையைத் தான் பேசுகின்றார் என்று நீங்கள் அறிந்து கொள்வீர்கள். அவருக்கு நிச்சயம் சந்தேகம் இல்லை; கேள்விக்கும் இடம் இல்லை, அவரிடம் இந்த உண்மை வாழ்ந்து வந்தது. நானும் நீங்களும் சொல்லுகின்ற இறைவனின் விருப்பம் என்பது மட்டுமே நிலவி வருகின்றதென்று அவர் அறிவார். நாம் திவாலாகிவிடுவதாக இருந்தால், எந்த நிலைமையிலும் நாம் திவாலாகிவிடுவோம். அதைப் பற்றி நாம் சிறிதும் கவலைப்பட வேண்டியதில்லை. எனவே செயலாளரும் 'சுவாமிஜி! சரி' என்று இணங்குகின்றார்; மதகுகள் (தண்ணீரின் அதிகப் போக்கைக் கட்டுப்படுத்தும் கதவுகள்) மீண்டும் திறக்கப்படுகின்றன; இல்லை எனில் நிதி நெருக்கடி அவ்வளவு விரைவில் வந்திராது.

மற்றொரு சமயம் எங்களுக்கு ஒரு முதல் தரமான அவலம் ஏற்பட்டது. ஓர் இளைஞர் ஆசிரமத்தில் சேர்ந்தார். அவர் ஒவ்வொரு வகையிலும் ஒளிவிட்டு விளங்குகின்ற, ஓயாத, களைப்படையாத உழைப்பாளி. அவர் குருதேவரின் உள்ளத்தைக் கவர்ந்து விட்டார். குருதேவர் அவரை நேசித்தார்; பாராட்டினார்; தம்முடைய நம்பிக்கைக்கு உகந்தவராகக் கொண்டார். அநேகமாக எல்லாவற்றுக்கும் அவரையே, குருதேவர் பொறுப்பேற்று நடத்துபவராக ஆக்கினார். அவரே அஞ்சல் அதிகாரி; அவரே நிதிக் காப்பாளர்; அநேகமாக, அதிகாரபூர்வமற்ற, செயலாளரும் கூட. அவரே பொருளாளர்; இவை எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற் போல அவர் குருதேவருக்காகச் சில இலக்கியப் பணிகளையும் செய்து வந்தார். அவர் இத்தகைய சக்தி வாய்ந்த குணசீலர். ஒரு நாள் அவர் ஆசிரமத்தை விட்டுச் சென்ற அரை மணி நேரத்திற்குள் அவர் பெரும் தொகையைக் கையாடல் செய்தார் என்று கண்டு பிடிக்கப்பட்டது; எவ்வளவு தொகையை கையாடினார் என்பது ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்.

ஆகவே நாங்கள் இருப்புத் தொகை சிறிதும் இல்லாமல் ஆசிரமத்தை மீண்டும் தொடங்கினேம்; இச்செய்தி ரிஷிகேசத்தில் பரவியது. மீண்டும் மளிகை வியாபாரிகள் செயலாளரிடம், ''சிறிது காலம் வரையில் நீங்கள் வாங்கும் பொருள்களுக்கு உரிய தொகையைச் செலுத்தி அவற்றைப் பெற்றுக்கொண்டால் நல்லது'' என்று அமைதியாகக் கூறினர்கள். ஏனெனில் ஏற்கனவே ஆசிரமம் அவர்களுக்கு ஏராளமான பணத்தைத் தரவேண்டி இருந்தது. ஆசிரமத்தின் வாழ்வில் நான் எப்போதும் கண்டிருந்த விபத்துக்களில் இதுவே மிகமிகக் கேவலமானது. இதற்காகக் குருதேவர் என்ன செய்தார்? ஒன்றும் இல்லை. முற்றிலும் ஒன்றும் இல்லை. அவர் எல்லாவற்றையும் ஒரு பெரிய கேலி விளையாட்டாகக் கருதி அனுபவித்து மகிழ்ந்தார். ''இவ்வாறு நம்மை வஞ்சிக்க அவரால் எப்படி முடிந்தது? அவர் அத்தகைய நல்ல மனிதர்! அவர் ஒரு மேதையாக இருக்க வேண்டும்!'' என்று அவர் குறிப்பிட்டார். அவர் மீண்டும் மீண்டும் கூறிவந்த இரண்டு கருத்துரைகள்:— 'இதைச் செய்வதற்கு அவர் ஒரு மேதையாக இருக்க வேண்டும்!' மேலும், ''ஆனல், அவர் ஏராளமான பணிகளைச் செய்தார்''. ''நாம் அவருக்குச் சிறிது பணம் தரவேண்டி இருந்திருக்கும்; ஆனல் அவர் அதைக் கேட்டிருந்தால், நான் அவருக்குத் தந்திருப்பேன்''. இதைச் சொல்லக்கூடிய ஒருவர் நிலைபெற்றிருந்த மனச்சாட்சி எத்தகையது? மெய்யுணர்தல் எத்தகையது? இதுவே தெய்வீக காட்சி.

இதற்கு இன்னும் ஒரு சான்று காண்போம். 1946-ல் தென்னிந்தியாவில் இருந்து ஒரு வணிகர் ஆசிரமத்திற்கு வந்தார். குருதேவர் ஆன்மீக அறிவைப் பரப்புவதில் பெரு விருப்பம் கொண்டுள்ளார் என்பதை அவர் அறிந்தார். ஆசிரமம் அச்சிட்டு வெளியிட்ட ஏராளமான நூல்கள் அலமாரிகளில் அடுக்கிவைக்கப்பட்டிருந்தன. எனவே அவர் சுவாமிஜியிடம், ''உங்களுடைய நூல்கள் எல்லாவற்றையும் நான் தென்னிந்தியாவில் விலைக்கு விற்றுத்தரமுடியும்''

என்று கூறினார். அவர் நூல்களின் மிகப்பெரும் பங்கை எடுத்துச் சென்றார். ஆறு திங்கள் கழிந்த பின்னர் அவ்வணிகர் தந்திருந்த முகவரிக்கு நம் செயலாளர் ஒரு கடிதம் எழுதினார். 'இத்தகைய முகவரி இல்லை' என்ற குறிப்புடன் கடிதம் திருப்பி அனுப்பப்பட்டது. குருதேவர், ''உங்களை வஞ்சித்த மனிதருடைய 'ஆன்மா' என்று உங்களை நீங்கள் கருதினால், நீங்கள் ஏமாற்றம் அடைய மாட்டீர்கள்'' என்று தெரிவித்தார். எங்கும் உள்ளவர் கடவுளாகிய ஒருவரே என்று இருக்கும்போது யார் யாரைத் திருட முடியும்? திருட்டு என்பது வலது கையில் உள்ள பொருளை இடது கைக்கு மாற்றுவது மாத்திரமே. நீங்கள் உங்களை சுவாமி.. ...,இன்னார் என்றும், உங்களுக்கு ஓர் ஆசிரமம் உள்ளது என்றும், ஆசிரமத்தில் உள்ள நூல்கள் ஆசிரமத்துக்குச் சொந்தம் என்றும் யாரோ ஒருவர் நூல்களை எடுத்துக்கொண்டு சென்றார் என்றும், அவர் இலாபம் அடித்தார் என்றும் இவ்வாறெல்லாம் நீங்கள் நினைக்கின்றீர்கள். இது உங்களுக்குச் சினத்தை மூட்டுகின்றது. ''அந்த மனிதருக்குள் உள்ள ஆன்மாவாக நீங்களே இருக்கிறீர்கள் என்று நீங்கள் உணர்ந்தால் நீங்கள் வருத்தப்பட மாட்டீர்கள் என்பது மட்டுமன்று; நீங்கள் பெருமகிழ்ச்சியும் அடைவீர்கள்'' என்று கூறினார். இதற்குமேல் முழுநிகழ்ச்சி பற்றி வேறு எதுவும் கூறப்படவில்லை.

''சாந்தமாக இருங்கள்; சமநிலை மனப்பான்மையுடன் இருங்கள்; வெற்றி தோல்விகளைப் பற்றியும் இலாப நஷ்டங்களைப் பற்றியும் சமநோக்குடன் இருங்கள்'' என்பது குருதேவரின் அறிவுரை. அசட்டுச் சிரிப்போ, சகித்துக் கொள்வதோ என்று கருத வேண்டாம்; முற்றிலும் அப்படி அன்று. ''என்னை வஞ்சித்தவரும், என்னை 'நான்' என்பவரும் எங்கும் உள்ள இறைவனின் இரண்டு கரங்களே; வேறு யாரும் அன்று; அந்த இறைவன் ஒருவர்தான் உண்மையில் நிலவி இருக்கின்றார்'' என்பது அவருடைய கூற்று.

ஆனால் சில சமயங்களில் ஆசிரமத்தின் அதிகாரிகளுக்கு முட்டுக்கட்டையாகக் குருதேவர் முழு நிகழ்ச்சியையும் ஒரு பெரிய கேலிக்கூத்தாக ஆக்கிவிடுவார். ஒரு நாள் இரவு ஆசிரமத்தில் இருந்த திருக்கோயிலின் நாலா புறங்களிலும் உள்ள வராந்தாக்களில் கணக்கற்ற மக்கள் உறங்கிக் கொண்டிருந்தார்கள்; கதவுகள் தாளிடப்பட்டிருந்தன; எனினும் கோயிலில் திருட்டுப் போயிற்று. வெள்ளிக் குடமும், பிற வெள்ளிப் பாத்திரங்களும் காணப்படவில்லை. களவு போனதைக் கண்டு பிடித்த அர்ச்சகர் குருதேவரிடம் திருட்டைப்பற்றி முறையிட்டார். இதைப்பற்றிக் கவலைப் படுவதற்குப் பதிலாகக் குருதேவர் வேடிக்கையாக, ''திருட்டு நடைபெற்ற போது மக்கள் நன்றாக உறங்கிக் கொண்டிருந்தார்களா?'' என்று கேட்டு விட்டு உரக்கச் சிரித்தவராய், ''அவன் மிகவும் விவேகமுள்ள திருடன். அவன் கண்டு பிடிக்கப்பட்டால் நான் அவனுக்குச், ''சோர சிகாமணி'' என்ற ஒரு பட்டத்தைக் கொடுப்பேன்'' என்று கூறினார். (திருடுவதில் மிகப் பெரிய திறமைசாலி என்று பொருள்),

அத்துடன் சரி, திருட்டே நடைபெறவில்லை என்பது போலக் குருதேவர் நிகழ்ச்சியைக் கருதச் செய்தார். யாருக்கு அவை தேவையோ அவர் எடுத்துக் கொண்டுபோய் விட்டார். அவர் மிகவும் அழகான ஒரு கருத்தைக் குறிப் பிடுவது வழக்கம். அவர் அதைக் 'குப்த தானம்' — இரகசியக் கொடை என்று குறிப்பிடுவது வழக்கம்; இதில், பொருள் பெறுபவர் உங்களைக் 'கொடுக்கும் சிரமத்திலிருந்து' காப்பாற்றி விடுகின்றார். அவருக்குத் தேவைப்பட்டது; அதை அவர் எடுத்துக் கொண்டு போய்விட்டார்.

சுவாமி சிவானந்தர் என்று அழைப்பதற்குப் பதிலாகச் சுவாமி கொடையானந்தர் (Swami Givananda) — வழங்கு வதில் மகிழ்ச்சி காண்பவர் என்ற பொருள்படும் பெயரால் அழைக்கலாம் என்று நாங்கள் முடிவு செய்தோம். பட்டு வாடா, மூலத்திலிருந்து வருகின்றது என்றும் மீண்டும் அது மூலத்தையே சென்று அடைகின்றது என்றும் அவர்

அறிவார். கணக்கு வைக்கும் உலகியல் எண்ணங்களைப் பற்றி அவர் சிறிதும் கவலைப்படவில்லை. இத்தகைய கருணை பாராட்டுவதனால் திவாலாகிவிடும் நிலை ஏற்படுவதில்லை என்று அவர் தம் சொந்த வாழ்வில் நிரூபித்துக் காட்டினார். அடிக்கடி அவர், ''கொடை ஒருபோதும் ஒருவரை வறியவ ராக ஆக்கியதில்லை; தருமம் ஒருபோதும் ஒருவரை ஏழை யாக ஆக்கியதில்லை'' என்று கூறுவது வழக்கம். 1924-ல் குருதேவர் ரிஷிகேசத்துக்குத் தம் உடம்பின் மீதிருந்த உடையுடன் மாத்திரம் வந்து சேர்ந்தார். 1973-ல் ஐம்ப தாண்டுகள் கூட நிறைவு பெறுவதற்கு முன்பே, அவர் நிறுவிய ஆசிரமத்தின் மதிப்பு, சில கோடி ரூபாய்கள் ஆகும்; ஆனால் அவர் எப்போதும் போலவே கொடுத்தார், கொடுத் தார், கொடுத்துக் கொண்டே இருந்தார். அவரே, இத்த கைய மனப்பான்மை உங்களை எல்லாச் செல்வங்களுக்கும் வற்றாத மூலமாக இருக்கும் பரம்பொருளுடன் நேரடியான தொடர்பு கொள்ளச் செய்கிறது'' என்று கூறுவது வழக்கம்.

குருதேவருடைய சேவை என்னும் சூரியன் முன்னால், இன வேறுபாடு, நிற வேறுபாடு, சமய வேறுபாடு, பால் வேறுபாடு என்னும் பல்வேறு வேறுபாடுகளாகிய பனி மூட்டம் மறைந்து போய்விட்டன. மலேயாவில் டாக்டராக அவர் அனைத்து நாட்டவர், அனைத்து மதத்தவர் — ஒவ் வொருவருக்கும் — சிறப்பாக ஏழைகளுக்குச் சேவை செய் தார். அதுபோலவே, சுவர்க்காசிரமத்தில் துறவியாக அவர் வாழ்ந்த போது, அவர் சேவை செய்தார்; சிறப்பாக நோயுற்றவர்க்குச் சேவை செய்வதே அவருடைய முதல் கவலையாக இருந்தது சிவானந்த ஆசிரமத்தின் கதவுகள் எப்போதும் (இப்போதும்) எல்லாச் சமயத்தவர்க் கும், எல்லா நாட்டவர்க்கும், தென்னிந்திய அந்தணர்க்கும், அந்தணரல்லாதவர்க்கும், கிறிஸ்தவர், ஐரோப்பியர், அமெரிக்கர், யூதர், முகம்மதியர், பாரசீகர், பௌத்தர் ஆகிய அனைவர்க்கும் திறந்து வைக்கப்பட்டுக் குருதேவரால் நன்கு வரவேற்கப்பட்டுச் சம மரியாதை தரப்பட்டு ஒரே வகையான அன்புடன் விருந்து ஓம்பப்பட்டுப் பாராட்டப் பட்டனர்.

உங்களுடைய சமய நம்பிக்கை அல்லது கொள்கையைப் பற்றிச் சுவாமி சிவானந்தர் ஒரு போதும் கவலைப்பட்டதில்லை; அவற்றில் அவர் குறுக்கிட்டதும் கிடையாது. ஒரு மதம் உண்மை என்றோ, மற்றொரு மதம் பொய்யானது என்றோ, ஒரு மதம் பிறிதொரு மதத்தைக் காட்டிலும் உயர்ந்தது என்றோ அவர் ஒரு போதும் கருத்துரை கூறியது கிடையாது. ஒரு முறை குருதேவர் பல கோடிகளுக்கு அதிபதியாக இருந்த ஒருவரைச் சந்திக்க ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது; அவர் ஓர் இந்து மத வெறியர். அவர் கேட்க விரும்பியதெல்லாம், ''சனாதன தர்மம் (இந்து மதம்) மட்டுமே உண்மையானது'' என்ற சில சொற்களே. குருதேவரை இச் சந்திப்பின் பொருட்டு அழைத்துக் கொண்டு போகின்றபோது அக்கோடீஸ்வரரின் செயலாளர், குருதேவரின் இயக்கத்துக்கு அச் செல்வந்தர் மிகப்பெரும் உதவி செய்யக் கூடும் என்று ஒரு சில குறிப்புக்களை குருதேவரின் செவியில் போட்டு வைத்தார்; குருதேவர் அவற்றைக் கேட்டுக் கொண்டார். அந்த தனவந்தர் குருதேவரை மிகவும் பெருமையுடன் வரவேற்றார். எதிர் பார்த்தவாறே அவர், சுவாமிஜி! இஸ்லாம் மதத்தைப் பற்றி என்ன நினைக்கின்றீர்கள்? அதுகூட ஒரு மதமா?''. என்று தாம் திட்டமிட்டிருந்த வினாவைக் கேட்டார். ''ஆம்! ஆம்! ஆம்'' என்றார் குருதேவர், 'குரானும் இறைவன் பேசிய வாக்கா?' என்று வினவினார் அந்த நீதிபதி. ''ஆம்! ஆம்! ஆம்'' என்று விடை தந்தார் குருதேவர். குருதேவருக்கு ஒரு தட்டு நிறையப் பழங்கள் தரப்பட்டன; அவர் அவற்றை எல்லாம் அங்கேயே விநியோகம் செய்து விட்டார். சுவாமி சிவானந்தரை விலைக்கு வாங்க முடியாது. எது உங்களுக்குப் பிடிக்கிறதோ அது உங்கள் மதம். முடிவில், மதம் என்பது உங்களுக்கும் இறைவனுக்கும் இடையே நடைபெறும் சிறப்பு நிகழ்ச்சியாகும். தம்முடைய கோட்பாடுகளையும், நம்பிக்கையும், மதத்தையும், தம் மெய்யுணர்வையும் கூடக் குருதேவர் யார் மீதும் திணிக்க விரும்பியது கிடையாது.

# கத்தியின் கூர் முனை

சேவையைப்பற்றிக் கவனிக்கும்போது பால் வேறுபாடு கூட மறைந்து விடுகின்றது. ரிஷிகேசத்தில் ஆரம்ப நாட்களில் ஒரு முறை, காளிகம்பளி வாலா என்ற இடத்தில் தங்கும் விடுதியில் இருந்த ஒரு தென்னிந்திய இள மங்கை, உடல் நலம் பாதிக்கப்பட்டிருந்தாள். குருதேவரைச் சந்திக்குமாறு அப்பெண்ணுக்கு நிர்வாகி யோசனை கூறினர். அப்பெண் அவ்வாறே செய்தாள். சுவாமிஜி அவளுக்குச் சில மருந்துகள் தந்தார். மருந்தைக் காட்டிலும் இறைவன் நாமத்தை உச்சரித்துக் கொண்டு பாதங்களைத்தடவி விடுதல் மிகுந்த நன்மை தரும் என்று அவர் கருதினர்; ஆனால் அப் பெண் அடக்கமும் நாணமும் உள்ளவளாய் இருந்தமையால் அவர் அந்த எண்ணத்தைக் கைவிட்டார். தம் குடிசைக்குத் திரும்பியதும் அவர் அதைப்பற்றிச் சிந்தித்துப் பார்த்து, அவளுடைய நன்மைக்கு எது தேவையோ அதைத் தவிர்த்திருக்கக் கூடாது என்ற முடிவுக்கு வந்தார். ''பார்க்கப் போனால் என்னுள் உறையும் அதே ஆத்மா (சுயம்) அவளுள்ளும் உறைகின்றது. இப்பணிவிடையிலிருந்து நான் பின் வாங்கி இருக்கக் கூடாது'' என்று அவர் கருதினர். அடுத்த நாள் காலை நேரத்தில் குருதேவர் தம் சீடருடன் அந்தப் பெண்ணைப் போய்ப் பார்த்து மீண்டும் மருந்தைத் தந்த பிறகு, அகிலாண்டத்துக்கு உரிய தெய்வீக அன்னையையே அவளிடம் தாம் காண்பதாகவும் அவளுடைய குழந்தையாகிய தம்மை அவளுடைய பாதங்களை தடவி விடுவதற்கு அனுமதிக்குமாறும் விளக்கிச் சொன்னர். அப்பெண் மிக விரைவில் குணமடைந்தாள்.

பெண்பாலரோடு நெருங்கிப் 'பழகக் கூடாது என்று துறவிகளை எச்சரிப்பது பற்றிக் குருதேவர் சலிப்படைவதே இல்லை; ஒரு பெண் தனியே உறங்கும் அறைக்குப் பக்கத்தில் உள்ள அறையில் இரவு நேரத்தைக் கழிக்கக் கூடாது என்று அவர் அவர்களை மிகவும் கண்டிப்பாகக் கடிந்துரைப்பார்; இது நல்லொழுக்க விதியாகும். ஆனல் இதைக்காட்டிலும்

உயர்ந்த விதியாகிய சேவை விதி இருக்கின்றது. ஒரு சமயம் லக்னோவில் குருதேவர் இருந்தபோது, வயதான மகாராணியார் (அவரை விருந்தினராக ஏற்றவர்) தம் மூக்கில் ஏற்பட்ட கடுமையான புண் காரணமாக எரிச்சல் மிகுந்த வேதனையால் வருந்திக் கொண்டிருப்பதைக் கண்டறிந்து, அந்த அம்மையார் தங்கியிருந்த அறையில் ஒரு மூலையில் குருதேவர் உறங்கினார். தம்மைக் கவனிக்க யாராவது தேவை என்று அந்த அன்னையார் உணர்ந்தால் தயாராக உடனே அருகில் இருக்கவேண்டும் என்று குரு தேவர் கருதினார். அம்மையாருடைய சொந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் கூட இத்தகைய அக்கறை யுடன் பணிவிடை செய்ய மாட்டார்கள்.

தேவை ஏற்பட்டால் எந்த வகையான பணி விடையும் செய்யக் குருதேவர் தயாராக இருந்தார்.

பொது மக்கள் குறை கூறுவார்களே என்ற அச்சம் குரு தேவரிடம் அறவே இருக்கவில்லை என்பது தெளிவு. ''நாம் நம்மைப்பற்றி உயர்வாகக் கருதக்கூடாது; சமூகத்தின் விதிகளை மீறக்கூடாது; ஆனால் எது சரி என்று நமக்குத் தெரிந்ததோ அதைச் செய்ய நாம் துணிச்சல் கொள்ள வேண்டும். நீங்கள் ஒரு மேலங்கியை அணிந்து கொண் டால் தொந்தரவின்றி ஆன்மீகப் பயிற்சியைத் தொடர்ந்து செய்ய முடியும் என்றும், சமுதாயத்திற்கு மிக நல்ல சேவை செய்ய முடியும் என்றும், உங்கள் மனத்தில் நம்பிக்கை ஏற் பட்டால் அவ்வாறே செய்யுங்கள்; பொதுமக்கள் குறை கூறுவார்களோ என்ற எண்ணம் உங்கள் மனத்தில் நுழைந் தால் உடனே மேலங்கியை அணிந்து கொள்ளுங்கள்! பொது மக்கள் குறை கூறுவது பற்றிய அச்சத்தை வெற்றி கொள்வதற்கு இதுவே வழியாகும். மக்கள் உங்களைக் குறை கூறலாம்; ஆனால் விரைவில் அவர்கள் உங்களைப் புரிந்து கொள்ளுவார்கள்'' என்பது குருதேவரின் அறிவுரை.

அவர் எப்போதும் தம்மையே கேட்டுக் கொண்ட கேள்வி, ''இத்தகைய சூழ்நிலையில் செய்யப்பட வேண்டிய

பொருத்தமான சரியான பணி யாது?'' என்பதே தவிர, ''மக்கள் என்ன நினைப்பார்கள்?'' என்பது ஒருபோதும் இல்லை. வயதான சிங்கை மகாராணியார் ரிஷிகேசத்துக்கு அடிக்கடி வருவது வழக்கம். அந்த அம்மையார் கடுமையான வெய்யிலில் சாலையில் நடந்தால், துறவிக்குரிய காவியாடைகளை அணிந்த குருதேவர், அந்த அம்மையாரின் தலைக்கு நேரே இருக்கும்படியாக ஒரு குடையை ஏந்துவார்; அம்மையாரை வெறும் இல்லறவாசியாகக் கருதி அவ்வாறே நடத்தித் தம் காலடிகளில் பணியச் சொல்லுமாறு செய்வதற்குப் பதிலாகத் தம் அன்னையார் போலக் கருதிப் பணிவிடை செய்யும் துணிவுள்ள இத்துறவியைப் பார்த்து ஏனைய சக துறவிகள் தங்கள் சந்நியாசத் தற்பெருமையால் குருதேவரைப் பார்த்து எள்ளி நகையாடுவார்கள்.

ஒரு முறை சுவாமி சிவானந்தர், மகாராணி அம்மையாருடன் கங்காசாகருக்கு (கங்கையும், வங்காளவிரிகுடாக் கடலும் கலக்கும் இடம்) யாத்திரை சென்றார். வழியில் யாத்திரிகர்கள் கடலில் சிறிது தூரம் நடந்து செல்ல வேண்டும்; மூதாட்டியால் அவ்வாறு நடக்க இயலவில்லை. குருதேவர் உடனே தம் அகன்ற வலிமை வாய்ந்த தோள்களைத் தந்தார். மகாராணியார் தயங்கினார்; ஆனால் குருதேவர் சிறிதும் தயக்கமின்றி அம்மையாரைத் தம் தோள்களில் ஏற்றிக் கொண்டு சுமந்து சென்று படகில் அமர வைத்தார். வேறொரு சமயம், லக்னோவில் அரண்மனையில் மகாராணியார் ஒரு பெண் துறவி கேட்டுக் கொண்டவாறு அளவில்லாத பெரும் செல்வத்தைச் செலவு செய்து குறிப்பிட்ட ஒரு வகை வழிபாட்டைச் செய்ய மறுத்துவிட்டபோது அப்பெண் துறவி மிகவும் சினம் அடைந்தார். சினம் மிகுந்த ஆவேச வெறியினால் அச்சந்நியாசினி தம் உணர்வுகளின் கட்டுப்பாட்டை இழந்து உணர்வற்றுக் கீழே விழுந்து விட்டார். குருதேவர் அப்பெண் துறவியைத் தம் தோள்களில் சுமந்து கொண்டு அருகில் இருந்த மருத்துவமனைக்குச் சென்றார்; அவரே பணிவிடையும் செய்தார். மகாராணியார் சோடா குடிப்பதில் விருப்பமுள்ளவர்; நாள்தோறும் விடியற்

காலையில் வழக்கமாகக் குடித்து வந்தார். பணியாட்கள் தம் கடமைகளில் அடிக்கடி கவனக் குறைவாக இருப்பார்கள்; குறிப்பிட்ட நேரத்தில் சோடா தருவதில் அலட்சியமாக இருந்துவிடுவார்கள்; ஆனால் நேர்மையுள்ள விருந்தினராகிய குருதேவர், மகாராணியாரால் தம் குருவாக நன்கு மதிக்கப் பட்டவர், தம் சிஷ்யையின் தேவைகளை எதிர்பார்த்து நிறைவேற்றுபவர், அம்மையார் அறியாமலேயே, சோடா தயாராக உடனே கைக்கு எட்டும்படியாக இருக்கின்றதா என்று நிச்சயம் செய்து பார்த்துக் கொள்ளுவார்.

எனினும் அரண்மனையில் ராஜகுருவாகக் குருதேவர் நிரந்தரமாகத் தங்குவதற்கு மகாராணியார் திட்டமிட்ட போது அமைதியாக யாருக்கும் தெரியாமல் நழுவி அவ்விடத்தை விட்டு வந்துவிட்டார்; அங்கிருந்து ரிஷிகேசத்துக்கு வரும் வழியில் பல பெரிய துன்பங்களையும், தொல்லைகளையும் சந்தித்தவராக நடந்து வந்து சேர்ந்தார். அரண்மனையில் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டார்; பனிக் காலமாக இருந்தும் ஒரு போர்வை கூட எடுத்துக் கொள் ளாமல் புறப்பட்டார்; வழியில் குளிராலும், பசியாலும் துன்புற்றார்; ஆனால் உலக சுகங்களின் சின்னஞ் சிறிய தொடர்பிலிருந்து கூடத் தம்மை விடுவித்துக் கொள்வதில் அவர் மிகவும் உறுதியாக இருந்தார்.

தனி ஒருவராகிய வலிமை வாய்ந்த இவருடைய வாழ்வில் பல்வேறு வகையான வாய்க்கால்களில் தன்னலமற்ற சேவை பெருக்கெடுத்தோடியது. நோயாளிகட்கும் ஏழைகட்கும் செய்யும் சேவையைத் தனிச் சிறப்புடன் பெருமைப் படுத்துவது அவருடைய வழக்கம். தம் இளமைக் காலத்தி லிருந்தே நோயையும் அதன் விளைவாகிய துயரத்தையும் மிகவும் அருகிலிருந்து அவர் பார்த்துள்ளார்; மற்றவரை வருத்தும் வலியின் வேதனையை அவர் ஆழமாக உணர்ந்துள் ளார். மலேயாவிலிருந்து குருதேவரின் பழைய நண்ப ரொருவர் ஆசிரமத்திற்கு வந்தார்; அவர், "அந்த நாட்களில் சுவாமிஜியின் பெருமையை எங்களால் புரிந்துகொள்ள

முடியவில்லை. வழக்கத்திற்கு விரோதமான விநோதமான மனப்பான்மைகள் நிறைந்தவர் என்று ஏறத்தாழ நாங்கள் முடிவு செய்தோம்'' என்று எங்களிடம் கூறினார். அவர் சேவை செய்தமைக்கு அவருடைய ஊக்கமே காரணம்; இது குருதேவர் சிவானந்தரிடம் தனிச் சிறப்புடன் அமைந்திருந்தது. அவர் மிகுந்த சக்தியுடன் சுறுசுறுப்பாக இருந்தார்; நாள் முழுதும் செயல்பட்டார்; தமக்கென எதையும் சம்பாதிப்பதற்காகவோ, எதையும் இழப்பதற்கோ, அச்சத்தினாலோ, அல்லது எதையும் எதிர்பார்த்தோ அவர் பணி செய்யவில்லை.

அவரைப் பொறுத்தவரைக்கும் 'ஆசையால்' என்பது சிறிதும் இருக்கவில்லை. ஆதலின், அவர் ஏன் அவ்வாறு பணி செய்தார்? இலக்குகளோ, விருப்பங்களோ, ஆசைகளோ, நம்பிக்கைகளோ, எதிர்பார்ப்புகளோ இல்லாத ஒருவர் எப்படிப் பணி செய்ய முடியும்? நோக்கம் ஏதாவது இல்லாத மனிதன் சோம்பேறியாக இருப்பான் என்ற கருத்து வலையில் நாம் அகப்பட்டுக் கொள்ளுகின்றோம். சுவாமி சிவானந்தர், ''நாம் ஏன் சோம்பேறிகளாக இருக்க வேண்டும்? நீங்கள் ஏதேனும் ஒரு பணியைச் செய்யும் போது, 'நான் ஏன் அதைச் செய்ய வேண்டும்?' என்று கேட்கிறீர்கள். ஆனால் நீங்கள் அதைச் செய்யாதிருக்கும் போது, 'நான் ஏன் அதைச் செய்யவில்லை?' என்று நீங்கள் உங்களைக் கேட்பதில்லை என்று கேட்டார். தான் என்பது நிலவி இருக்கவில்லை என்று காணும்போது எதையேனும் செய்வதிலோ அல்லது எதையேனும் செய்யாமல் தவிர்த்திருப்பதிலோ நீங்கள் ஆர்வம் காட்டுவதில்லை; சோர்ந்து சோம்பேறியாக இருக்க நீங்கள் விரும்பமாட்டீர்கள். சோம்பல் பயனற்றது. அகந்தை அல்லது தற்பெருமையின் மற்றொரு வடிவமே சோம்பல். தான் என்பது நிலவி இருக்கவில்லை என்று காணும்போது உங்களுக்குள் உள்ள உணர்வும் சக்தியும் (அதையே நாம் 'கடவுள்' என்று சொல்லுகின்றோம்) செயல்படுகின்றன. 'இறைவன் விருப்பம் அல்லது இறைவன் கருணை' என்று சொல்லப்படும்

தொடர் இங்குதான் பொருத்தமாக உள்ளது. சுவாமி சிவானந்தரின் வாழ்வில் நாங்கள் மிகவும் பொருத்தமாக இதைத்தான் கண்டோம்.

## அச்சமின்மை

உண்மையான தன்னலமற்ற சேவையில் ஆபத்து இல்லை; மேலும் தெய்வ நம்பிக்கை உள்ளவர்களுக்கு முற்றிலும் பாதுகாப்புள்ள தெய்வ உலகம் அது. சுவர்க்காசிரமத்தில் குருதேவரின் வாழ்க்கை தொடங்கிய ஆரம்ப நாட்களில், தம் உயிர்மீது ஆசையுள்ள எவரும் அணுக அஞ்சித் தூர விலகிச் செல்லக் காரணமாக இருந்த பகுதிகளுக்கும் துணிச்சலுடன் செல்லத் தொடங்கித் தனிப்புகழ் பெற்றூர். காலரா, டைபாய்ட் நோய்கள் மிக எளிதில் தொற்றிப் பரவக் கூடியவை; ஆதலால் அத்தகைய நோய்கள் பரவி இருந்த இடங்கள் அவருக்காகவே ஒதுக்கப்பட்டன. மிகவும் கடுமையாகத் தாக்கும் வகையைச் சேர்ந்த காலரா நோயால் சுவாமி ஆனந்தானந்தாஜி அவதிப்பட்டுக் கொண்டிருந்தபோது அவருடைய குடிலை நெருங்கவும் மக்கள் அஞ்சினூர்கள். ஆனுல் குருதேவர், சுவாமியின் படுக்கையருகில் எப்போதும் தொடர்ந்து கவனித்துப் பணிவிடை செய்து கொண்டிருந்தார். பணிசெய்வோரைத் தாக்கக்கூடிய நோய்களால் வருந்தும் நோயாளிகட்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்வதில் குருதேவருக்கு மனவருத்தமோ அல்லது வெறுப்போ சிறிதும் இருக்கவில்லை. படுக்கை, மலஜலப் பாத்திரத்தை அவர் தம் சொந்தக் கைகளால் கழுவித் தூய்மை செய்வதுடன் நோயாளியின் உடம்பில் உள்ள மலத்தையும் நீர் ஊற்றிக் கழுவித் தூய்மை செய்வார். சுவாமி ஆனந்தானந்தாவின் உடல் நோயுற்று மிகவும் நலிவுற்றிருந்தபோது குருதேவர் சிறிதும் தயக்கம் இன்றி உடனே சித்தமாகிச் சிறிதும் வெறுப்பின்றி, அச்சமும் இன்றிச் சுவாமியின் ஆசனவாயில் தம் சொந்தக் கைவிரல்களை நுழைத்து மலத்தை அறவே நீக்கிக் கழுவி விட்டார். மருத்துவ அறிவாலும்கூடத் தோன்றுத ஒரு

தன்னம்பிக்கையாக இவ் உறுதிமொழி, ''கிருமிநாசினி மருந்தால் என்னை நான் கழுவிக் கொள்வேன்'' என்று அமைந்தது. கிருமிநாசினி மருந்தால் தம் கைகளை அவர் கழுவிக்கொள்வதை நான் ஒருபோதும் பார்த்ததில்லை. பெரும்பாலும் அவர் தூய தண்ணீரை மட்டுமே பயன் படுத்தினார். இதுபோலவே திரு. வீரராகவாச்சாரியின் சீடர் காலரா நோயால் துன்புற்றபோது, மீண்டும், குருதேவர்தான் அவருக்குப் பணிவிடை செய்யத் தாமாக முன் வந்தார். குருதேவரின் சேவையைக்கண்டு மக்கள் பலரும் வியப்பால் வாயடைத்துப் போயினர்; திரு. கல்யாணந்தாஜி நோய்வாய்ப் பட்டபோது, வேறு யாரும் கூடாது, குருதேவர் மட்டுமே வரவேண்டும் என்று சொல்லியனுப்பினார். ''அற்புதம் விளைக்கும் தங்கள் சிகிச்சைக் கரத்தால் தாங்கள் எதுசெய்தாலும் அது என்னைக் குணமாக்கும்'' என்று அவர் கூறுவார். பலரும் இவரைப் போலவே, குருதேவரே தங்களுக்குச் சிகிச்சை செய்ய வேண்டும் என்று பிடிவாதம் செய்தனர்.

நீண்ட காலத்திற்குப் பிறகு 1948–49ல், குருதேவர் ஒரு கட்டிடத்தின் தரைப்பகுதியில் உள்ள ஓர் அறையில் வாழ்ந்து வந்தார்; அப்போது மாடியில் குடும்பத்துடன் வாழ்ந்த ஒரு மனிதர் மிகவும் கடுமையான அம்மை நோயால் பீடிக்கப்பட்டார். அவருடைய மேனியெங்கும் அம்மை நோய் முத்துக்களே பரவியிருந்தமையால் உடம்பின் தோலையே பார்க்க முடியவில்லை. கண்கள் மட்டுமே வெளியே ஒட்டியவை போல் இருந்தன. குருதேவர் அப்போதும் அங்கேயே மாடிப் படிகளின் கீழே தம் அறையில் தங்கி இருந்தார். அவ்விடத்தை விட்டு ஆசிரமத்தில் ஏதோ ஓரிடத்தில் தங்குமாறு அவரை வற்புறுத்தி யாரும் வெற்றி பெற முடியவில்லை. அவருடைய முகத்தில் எந்தவிதமான கலவரமும் தென்படாததை எல்லோராலும் பார்க்க முடிந்தது. அதுபோலவே, அவருக்கே டைபாய்டு வந்த போதும் அவர் சிறிதும் கவலைப்படாமல் இருந்தார்.

மனத்தளவிலும்கூட அவர், நாம் ஏற்கனவே பார்த்தது போல, முற்றிலும் அச்சமில்லாதவராக இருந்தார். முதல் முதலாகப் பொது மக்கள் குறை கூறுவதைப்பற்றி அச்சம் இருக்கவில்லை. இரக்கமற்ற தன்மை அல்லது அகந்தை யிலிருந்து இந்த அச்சமற்ற இயல்பை வேறுபடுத்துவது மிகவும் முக்கியமானதாகும். அவரிடம் அகந்தை இருக்க வில்லை. நான் இதைப் பார்த்திருக்கின்றேன்; அவர் ஏதேனும் ஒரு செயலைச் செய்ய விரும்பும் போது, அவருடைய சொந்தச் சீடர்களில் ஒருவர், ''இல்லை, சுவாமிஜி! இதை இப்படிச் செய்யக் கூடாது; அப்படிச் செய்ய வேண்டும்'' என்று கூறினல், அவர் மிகவும் பணி வுடன், ''சரி, அப்படியே ஆகட்டும், நாம் இதை அப்படியே செய்வோம்'' என்று மட்டும் கூறுவார். எனினும் அவர் தாமாகவே ஒன்றைச் செய்ய முற்பட்டு விட்டால், யார் என்ன சொன்னுர்கள் என்பதைப் பற்றிச் சிறிதும் கவலைப் படமாட்டார். இந்த நூற்றுண்டின் தொடக்க ஆண்டு களில் அவர் நடைமுறையை மாற்றும் வரையில், பொலி வுள்ள காவிநிற ஆடையை அணிந்த துறவியொருவர், ஹரே ராம ஹரே ராம, ராம ராம ஹரே ஹரே; ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண, கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே — என்ற மகா மந்திரமாக இருந்தாலும்கூட, அவர் பாடி ஆடுவதென்பதைக் கற்பனையிலும் நினைத்துப்பார்க்க முடியாமல் இருந்தது. மற்றவர்களுக்கும் பணிந்து வணங்கக் கூட ஒரு துறவிக்கு அனுமதி கிடையாது. சுவாமி சிவானந்தர் தாம் அனைவருக்கும் பணிந்து வணங்குவதைத் தொடங்கி வைத்தார். அவரைப் பலரும் குறை கூறினுர்கள். குருதேவர் தாம் எங்கு சென்றுலும் உடன் சுமந்து சென்ற மூன்று துணிப்பைகளைப்பற்றி மேதகு ஸ்ரீ சுவாமி தபோவன்ஜி மிகவும் தெளிவாக நினைவு கூர்ந்து அறிவித் தார். ஒன்றில் துண்டு அறிக்கைகளும், சிறு நூல்களும், ஒரு குறிப்பேடும் இருந்தன; ஒன்றில் தின்பண்டங்கள், பிஸ்கட்டுகள் அல்லது பழங்கள் இருந்தன; மூன்றுவது பையில் அனைவருக்கும் பயன்படக் கூடிய ஆஸ்பிரின் போன்ற பொதுவான மருந்துகளும், கட்டுப்போடும்

துணிகளும் இருந்தன. சாலையோரத்தில் அவர் நூறு இடங்களில் நிற்பார்; துறவிகளைப் பற்றியும் நாட்டுப்புற மக்களைப் பற்றியும் விசாரிப்பார்; சிறு நூல்களை அவர் வழங்குவார்; தேவைப்படுவோருக்கு மருந்துகளையும் தருவார்; குழந்தைகளுக்குத் தின்பண்டங்களைக் கொடுப்பார். சுவர்க்காசிரமத்தில் வாழ்ந்தபோது அவர் தரும சாலையிலிருந்து பெறும் உணவை மட்டுமே உண்டு வாழ்ந்து வந்தார்; அவ்வுணவில் ரசமும், உலர்ந்த ரொட்டியும் மட்டுமே இருந்தன. தென்னிந்தியாவில் உள்ள தம் வீட்டை விட்டு அவர் வந்து விட்ட பிறகு, அவருடைய ஆயுள் பாது காப்புப் பத்திரம் முதிர்ச்சி பெற்று ஐயாயிரம் ரூபாயாகக் கனிந்து பலன் தர இருந்த நிலையை யாரோ ஒருவர் கண்டு பிடித்தார். குருதேவர் பிடிவாதமாக இருந்திருந்தால் அத் தொகையைப் பெற மறுத்திருப்பார்; ஆனால் அதற்குப் பதிலாக அவர் அத்தொகையை மருந்துகளையும், பழங்களையும், தயிரையும் வாங்குவதற்காகப் பயன்படுத்தி நோயுற்றவர்களுக்கும், சாதுக்களுக்குச் சேவை செய்யவும் அவர் செலவிட்டார். அவர் சத்திய சேவாஸ்ரம மருந்தகத்தை நிறுவினார். அங்கே நோயாளிகள், துறவிகள், பொது மக்கள் அனைவரும் மருந்துகளையும், உணவுகளையும், தேவைப்பட்டால் பணமும் பெற்றார்கள். அவர்கள் மிகவும் திகைப்படையும் வகையில் அவர்களுக்கு நேர்மையான நன்றி செலுத்தப்பட்டதுடன் சாஷ்டாங்க நமஸ்காரமும் கிடைத்தது. நோயாளிகள் கண் கண்ட தெய்வங்களாகப் போற்றப்பட்டார்கள்.

இவையெல்லாவற்றாலும் துறவிகள் குருதேவரைப் பற்றிக் குறை கூறினார்கள். சாதுக்கள் இவரைக் குறித்து, "ஓ! காவியாடை அணிந்திருந்தாலும் இவர் இல்லறத் துறவி; ஏனெனில் இவர் பணத்தைப் பயன்படுத்துகின்றார்; பல்வேறு நூல்களையும் வெளியிடுகின்றார். ஒரு துறவி முற்றிலும் வெறுங்கையுடன் நடக்க வேண்டும். அவர் தம் தண்ணீர்க் குடத்தைக் கூடச் சுமந்து வரக் கூடாது; ஒரு சீடர் அதைச் செய்ய வேண்டும்" என்று கூறுவது வழக்கம்.

தமக்கு உரிய விதியாக இதைப் பின்பற்றியவர்கள் அவரைக் குறை கூறுவது இயற்கையே; ஆனால் அவர் இதனால் அசைய வில்லை; எதிர்க்கவுமில்லை. பலவீனர்கள்தான் அப்படிச் செய்வார்கள். பிற்காலத்தில் நானே இதைக் குறை கூறுபவர்களில் ஒருவரிடமிருந்து கேட்டேன். அவர் ஓர் அற்புதமான மனிதர்; அவர், ''நாங்கள் அனைவரும் உங்களுடைய குருவைக் குறை கூறுவது வழக்கம்; இப்போது நாங்கள் அனைவரும் அவர் பக்கம் சேர்ந்துவிட்டோம். அவர் செய்தது தான் சரி; நாங்கள் செய்தது தவறு'' என்று தெரிவித்தார்.

தாம் செய்தது சரி என்று நிரூபிக்கக் குருதேவர் எப் போதும் விரும்பியவரல்லர். அது தானாகவே நடைபெற வேண்டிய இயற்கையாக இருந்தது. அவர் முற்றிலும் தன் னிச்சையாக அச்சமற்று இருந்தார். 'இவ்வுடம்பு, நான்' என்ற தவறான கருத்து நீங்கியிருந்தமையால் அவர் அச்சம் அற்று இருந்தார். உடம்பு, உடம்புதான்; 'நான்' என்பது நிலவவில்லை. செயற்படுவது இச்சக்தி அல்லது கடவுளின் சக்திதான். இதுவே கர்மயோகம். இத்தகைய தெளிவு உள்ள வரே மற்றவரை வெறுக்காமல் அல்லது அவர்பால் பகை உணர்வு கொள்ளாமல் இருக்க முடியும். இந்தப் பெரிய உருவத்தில் ஒன்று கலந்திருந்த தூய அன்பும் பணிவுமே தம்மைத் தாக்க வருபவரை வெளிப்படையாகச் சந்திக்க முடியும்; அதே சமயம் பணிவுடன் தலை வணங்கவும் ஒரு சிறு குழந்தையினிடம் தாய்போல் அன்பு பாராட்டவும் முடியும்.

தற்போதுள்ள ஆசிரமத்திற்குக் குருதேவர் குடியேறிய போது இங்கும் அவர் ஒரு மருந்தகத்தை நிறுவினார்; ஆசிர மத்தில் உள்ள அனைவருக்கும், நோயாளிகட்குச் சேவை செய்வது பற்றிய தீவிரமான பயிற்சி தரப்பட்டது. இமாலயத்தில் யாத்திரை செய்து முடித்துத் திரும்பும் யாத்திரிகர்களைக் குருதேவர் சென்று ஆக்ரமிப்புச் செய்வது போல் பற்றிக் கொள்ளுவார்; கொப்பளம் கண்ட அவர் களின் கால்களை மருந்து தைலத்தால் தடவித் தேய்த்து

விடுவார்; அவர்களின் மற்ெறாரு காலைத் தேய்த்துவிடுமாறு இன்னொரு சீடரிடம் கூறுவார்; இவ்வாறு அவர் தம் சீடர்களுக்குத் தன்னலமற்ற சேவையில் பயிற்சி தருவார். இத்தகைய சத்சங்கல்பமே (புனிதமான விருப்பம்) சிவானந்தர் கண் மருத்துவமனையாகவும், மிகப் பெரிய அளவில்தான் சிவானந்தர் பொது மருத்துவமனையாகவும் எல்லாவகையான நவீன வசதிகளுடன் உருவாயிற்று. 1953-ல் குருதேவருக்கு இடுப்பில் வாயுப் பிடிப்பு ஏற்பட்ட போது பக்கத்தில் இருந்த ஒரு ராணுவ மருத்துவமனைக்கு நாங்கள் அவரைக் கொண்டு சென்றோம்; அங்கு அவருக்கு முதுகுப்புறத்தில் வெப்ப இயந்திர சிகிச்சை தரப்பட்டது. அவர், 'இந்த இயந்திரத்தை நாம் ஏன் வாங்கக் கூடாது?' வாங்கினால் நம் பகுதியில் உள்ள ஏழை மக்கள் அனைவருமே இலவசமாகப் பயன்படுத்தலாமே' என்று வினவினார், அவருடைய மனோபாவம் அத்தகையதாகும்.

## அனாதைகளின் புகலிடம்

குருதேவரின் தன்னலமற்ற சேவையின் மிகப் பெரிய மூன்று அடையாளங்கள் கருணை, பொறுமை, தீமையைப் பார்க்கக்கூடாதென்ற மிகவும் கண்டிப்பான உறுதி ஆகியவையாகும். துறவு வாழ்க்கையை வாழ வேண்டும் என்ற எண்ணம் சிறிதும் இல்லாமலே ஆசிரமத்திற்கு வரும் ஏழைகளுக்கும், அனாதைகளுக்கும் உணவும், பணமும் கொடுப்பதை நியாயப்படுத்த வேண்டும் என்று அவருடைய கருணை சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அவர்கள் தங்களுக்குத் தங்க இடமும், உடுக்க உடையும், உண்ண உணவும் மட்டுமே வேண்டும் என்று நாடி அவரை அணுகினார்கள். "அவர்கள் எங்கு செல்வார்கள்? நாம் அவர்களைப் பேணிப் பாதுகாப்போம்" — இக்கூற்று அடிக்கடி ஆசிரம அதிகாரிகளையும், பார்வையாளர்களையும்கூட மிகவும் ஆச்சரியப்படவைத்தது. குருதேவரின் திருவடிகளில் புகலிடம் தேடுமாறு தன் உள்ளுறையும் தெய்வத்தால் உந்தப்பட்டு அநாதை தம்மை நாடி வருகின்றார் என்ற ஒரே எளிய காரணத்தால் தம்

கதவருகே வந்து குரல் கொடுக்கும் அந்த அநாதைக்கு வேண்டிய பாதுகாப்பைச் செய்வது தம் பொறுப்பென்று குருதேவர் மேற்கொண்டார். இத்தகைய மக்களை ஆசிரமம் எப்படிப் பாதுகாக்க முடியும்? மிகவும் எளிதில் குருதேவர் இவ்வினவுக்கு விடை தந்தார். ''அவர்களை இங்கு அனுப்பும் இறைவனே, அவர்களுக்கு வேண்டிய பராமரிப்பைச் செய்யும் வசதிகளையும் உருவாக்கித் தருவார். தற்காலத்தில் அரசு இத்தகைய வயது மூத்த மக்களைக் கவனிப்பதில்லை; எனவே என்னால் முடிந்த வரையில் இதைச் செய்வது என்னுடைய கடமையாக உள்ளது''.

அநாதைகளிடையே, தங்கள் கணவன்மார்களின் அகால மரணத்தால் உதவியற்ற விதவைகளாகி விட்டவர்களும், கணவன்மார்களால் அல்லது மாமனார்களால் சித்திரவதைக்கு ஆளாகித் தங்கள் இல்லங்களிலிருந்து துரத்தி விடப்பட்ட பெண்களும், ஆதரவற்றவர்களும், கிழவர்களும் இருந்தனர். அவர்கள் அனைவருக்கும் சிவானந்த ஆசிரமத்தின் கதவுகள் எப்போதும் திறந்து வைக்கப்பட்டிருந்தன. அவர்களுக்கெல்லாம் குருதேவரே தாயாகவும் தந்தையாகவும் இருந்தார். அவர் எப்போதும் அவர்களுடைய கடந்த காலத்தைப் பற்றியோ, எதிர்காலத் திட்டங்களைப்பற்றியோ கேட்டதில்லை; அவர்களுக்குத் தேவை எதுவும் இருந்தால், முதலில் அந்த தேவை நிறைவேற்றப்பட்டது. வழக்கமாக, ஒரு மாதம் அல்லது இரண்டு மாதங்கள் கடந்த பிறகு ஓர் 'அற்புதம்' நிகழும். அவர்கள் தங்கள் உற்றார் உறவினர்களின் மதிப்பில் உயர்வார்கள்; அவர்களுடைய மனப்புண் விரைவில் குணமாகி ஆறிவிடும். பிரிந்த குடும்பங்கள் மகிழ்ச்சியுடன் ஒன்று சேரும். ஒரு முறை ஓர் அனாதை ராமாசிரமத்தின் வெளியே படுத்திருந்தார். யாரும் அவரை ஏறிட்டுப்பார்க்கக் கூட ஒரு போதும் கவலைப்படவில்லை; ஆனால் வழக்கம்போல், குருதேவரின் கவனத்துக்குக் கொண்டு வரப்படவும், அவரை ஆசிரமத்திற்குக் கொண்டு வந்து சீடர்கள் ஒவ்வொருவரும் அவரைக் கவனித்துக் கொள்ளுமாறு செய்தார். அடிக்கடி குருதேவர் ஒரு

மனிதரின் மிகவும் நெருக்கடியான மன நிலையில் கவனிக்க முன்வந்து அவருடைய உயிரைக் காப்பாற்றி இருக்கின்றார். வாழ்வில் முற்றிலும் ஏமாற்றங்கள் அடைந்த பலரும், வாழ்வதா, சாவதா என்று ஊசலாடி இங்கு பரிதாப வாழ்வை வாழ்வதைக் காட்டிலும் இறப்பதே மேல் என்ற முடிவுக்கு வருபவர்கள் இறைவனின் மிக உயர்ந்த கருணையால் நெறிப்படுத்தப்பட்டுக் குருதேவரின் தெய்வீகக் கருணை அன்பால் அரவணைக்கப்பட்டு மீட்சி பெற்றிருக்கிறார்கள். அவர்களுடைய வாழ்வில் அற்புதமான மாறுதல் நடைபெறும்; அவலமும் துயரமும் நீங்கி அமைதியும் நம்பிக்கையும் இடம் பெறும்.

இத்தகைய சேவையைக் குருதேவர் மலேயாவிலும் செய்து வந்தார். முற்றிலும் மனம் உடைந்து நம்பிக்கை இழந்தவாறு இளைஞர்கள் தட்டுத்தடுமாறி டாக்டரின் இல்லத்திற்கு எப்படி வந்து சேர்ந்தார்கள் என்பதை நரசிம்ம ஐயர் எங்களுக்கு எடுத்துரைத்தார். அவர்கள் தங்கள் துயரத்தையும் வாழ்வையும் முடித்துக் கொள்ள விரும்பினார்கள்; தங்கள் துயரத்தை முடிவுக்குக் கொண்டு வந்து வாழ்வில் மறு மலர்ச்சியைப் பெறும் வழியை டாக்டர் அவர்களுக்கு எப்போதும் காட்டி வந்தார். அவர்கள் சமுதாயத்தில் மதிக்கப்படத்தக்க ஓர் இடத்தைப் பெறும் வரையில் அவர் அவர்களைத் தம் உடன்பிறந்த சகோதரர்களைப்போல் பேணிக்காத்து அவர்கள் வாழ்வில் கொண்டிருந்த தொழில் நோக்கங்களையும் தகுந்தவாறு ஊக்குவித்து வந்தார்.

அவருடைய ஆயுட் காலம் முழுவதும் இத்தகைய சேவை நீடித்து வந்தது; இத்தகையவர்களை ஆசிரமத்தில் அனுமதித்தமைக்குத் தரப்பட்ட ஒரே காரணம், ''நாம் அவர்களுக்குச் சேவை செய்ய வேண்டும் என்றே கடவுள் அவர்களை நம்மிடம் அனுப்பியுள்ளார்'' என்பதேயாகும். தம் அன்புக்குரியவர்களை இழந்தமையாலோ, சமூக வாழ்விலும் அலுவலக வாழ்விலும் அடைந்த தோல்விகளாலோ கடுமையான அதிர்ச்சிகளுக்கு ஆளாகித் துன்புற்றவர்கள்

குருதேவரின் பாதுகாப்பைத் தேடிவந்தார்கள். தங்களுக்கு நல்ல வரவேற்பு வழங்கப்பட்டதை அவர்கள் கண்டனர். குருதேவருடைய அபய ஹஸ்தம் (அச்சம் இன்மையை உறுதிப்படுத்தும் கை) அவர்களுக்கு எல்லா வகையான நெருக்கடிகள், கவலைகள் ஆகியவற்றிலிருந்து விடுபட்டு நம்பிக்கைக் கதிரவனும் மகிழ்ச்சியும் அவர்களுடைய வாழ்வில் உதயமாக அருள் செய்தது. பாரபட்சமில்லாத இத்தகைய பாதுகாப்பு தெய்வத்தால் மட்டுமே அருள் செய்யப்படுகின்றது.

குருதேவரின் இத்தகைய மனப்பான்மையே அவருடைய சேவையைப் பெறத் தகுதியில்லாதவர் இந்த உலகத்தில் யாரும் இல்லை என்றும், அறம் செய்யப்படுவதற்குத் தகுதி இல்லாதவர் இந்த உலகத்தில் யாரும் இல்லை என்றும் உறுதிப்படுத்திற்று. பாரபட்சமற்ற அவருடைய சேவைக்கும் அறச்செயலுக்கும் பின்னால் இந்த உணர்வே இருந்தது; யோகத்தின் திறவுகோல் இதுவே !

## ஊக்கம்

விளக்கப்பட்டுள்ள எல்லா வகையான சேவைகளில் ஒன்றையோ, பலவற்றையோ அல்லது அனைத்தையுமே செய்ய முன்வரும் தனி நபர்களும், நிறுவனங்களும் இவ்வுலகில் இல்லையா, என்ன? நிச்சயம் உள்ளன. இவ் வகையில் குருதேவருக்கு உள்ள தனிச் சிறப்பு யாது? சமூக சேவகராக மட்டும் இருக்கும் ஒருவர் அடிக்கடி செய்யத் தவறுவது என்ன? அதை அவர் புறக்கணிக்காமல் நிறை வேற்றி இருந்தால் அது அவரைக் குருதேவரின் நிலைக்கு உயர்த்தி இருக்கும். அது என்ன? அதுவே உன் மனத்தின் பாவனை (மனப்பான்மை); ஆகவே பிற்காலத்தில் அனுபவமாக மலர்கிறது. சேவையில் ஈடுபட்டிருக்கும் காலத்தில், கரங்கள், கால்கள் யாவும் இறைவனுடையவை என்று ஒருவர் நினைவு கூர்ந்தால் சேவை, புனிதமான கடமை ஆகிவிடுகின்றது. சேவை செய்வதே மிகப் பெரிய பரிசாக

அமைகின்றது; மேலும் வேறு எந்தவிதமான பயனும் எதிர்பார்க்கப்படுவதில்லே.

பயிற்சி பெறும் சாதகர்களில் சிலர் பொய்யராகவும், தகுதியற்றவராகவும் இருப்பினும் கூட, தமக்கே தீங்கு இழைக்க முற்படுவோருக்கும்கூடச் சேவை செய்பவர் குருதேவர்; அவர் சாதகர்களுக்கு இடையறுத, அயராத பயிற்சி தந்ததன் இரகசியம் இதில் அடங்கியுள்ளது. அவர் உங்களுக்குச் சேவை செய்ய நீங்கள் ஒரு வாய்ப்பைத் தந்தால் அவர் மறு நினைவு நினைக்காமல் அவர் உங்களுக்குச் சேவை செய்வார். நீங்கள் கைம்மாருக எதைச் செய்வீர்கள் என்பது பற்றிய கவலே அவருக்குக் கிடையாது. சேவை ஏற்கனவே தன்னுள் நிறைவு பெற்றுவிடுகின்றது. குருதேவர் முற்றிலும் பற்றற்று இருப்பதன் இரகசியம் இந்த மனப் பான்மையே ஆகும்.

குருதேவரின் பொறுமைக்கு ஓர் எல்லே இல்லே. யாரேனும் துறவி ஒருவர், ஆசிரமத்திற்கு ஒரு காலத்தில் சிறிது சேவை செய்த பின்னர், அத்தகைய சேவை சிறிதும் செய்யாமல் உடம்பைச் சிறிதும் அலட்டிக் கொள்ளாமல் வசதியாக வாழ முற்பட்டால், மீண்டும் சேவை செய்யுமாறே அல்லது ஆசிரமத்தைவிட்டுச் செல்லுமாறே குருதேவர் அவரிடம் கூற மாட்டார். இத்தகைய ஒரு சமயத்தில் அவர், ''அவர் செய்த சேவைக்காக நான் அவரைப் பேணிப் பாதுகாக்க ஐந்து அல்லது ஆறு பிறவிகள் வரையில் கடமைப்பட்டிருக் கின்றேன்'' என்று அவர் தெரிவித்தார். குருதேவர் தாமாகவே ஒவ்வொரு நாளும் இருபத்தி நான்கு மணி நேரமும் சுறு சுறுப்பாகப் பணி செய்து கொண்டிருந்தார்; ஒவ்வொரு நாளும் — ஆம் — ஆண்டு முழுவதும் ஒவ்வொரு நாளும் — விடுமுறை நாட்கள் கிடையாது; ஞாயிற்றுக் கிழமைகள் கிடையாது; ஓய்வே கிடையாது. நோயுற்றிருந்த போதும் கூட அவர் ஆர்வத்துடன் செயற் பட்டார்; ஊக்கத்துடன் மனித சேவையில் ஈடுபட்டார்; எனினும், தம் உதாரணத்தைப் பின்பற்றவில்லே என்பதற் காக அவர் யாரிடமும் ஒரு போதும் குறை கூறியதில்லே.

# அனைவருள்ளும் இறைவனைக் காண்க

குருதேவர் எவ்விடத்தும் தீமையைச் சிறிதும் காண வில்லை; அவரால் மன்னிக்க முடியாத எதுவும் இருக்க வில்லை; இவ்வகையில் அவருடைய சக்தி எவ்வளவு என்று காண மனிதப் பொறுமையின் எல்லை வரையும் சோதனை செய்யப்பட்டது. 1950 ஆம் ஆண்டு ஜனவரி 8 ஆம் தேதி இரவு இது நடைபெற்றது. அந்த நாட்களில் பஜனை மண்டபத்தில் எங்களுக்கு மின்சார வசதி இருக்கவில்லை. வழிப்பாட்டுப் பீடத்தில் இராமர், கிருஷ்ணர் படங்களும் திரியுள்ள அகல் விளக்கும் மட்டுமே இருந்தன. வாசிப் பதற்கு நாங்கள் ஒரு ஹரிக்கென் விளக்கை வைத்திருந் தோம்; சத்சங்கத்திற்கான வாசிப்பு முடிந்தவுடனே நாங்கள் அந்த விளக்கை அணைத்து விடுவோம். எனவே சத்சங்கம் நடைபெறும்போது இருட்டாகவே இருக்கும். நுழை வாசலின் அருகே உள்ள கதவுக்கு மிகவும் அருகில் குருதேவர் எப்போதும் அமர்ந்திருப்பார்.

ஒருமுறை யாரோ ஒருவர் அவரிடம், ''தாங்கள் ஏன் அங்கே அமர்கின்றீர்கள்? காற்றோட்டம் சிறிது குறைவாக உள்ள பிரிதோரிடத்தில் ஏன் அமரக் கூடாது?'' என்று வின வினர். குருதேவர், ''உங்களுக்கே தெரியும், நான் வயிற்றுப் போக்கு உள்ளவன். மேலும் நீரிழிவு நோயும் எனக்கு உண்டு. எனவே சில வேளைகளில் நான் எழுந்து கழிப் பறைக்குச் செல்ல நேரும், சத்சங்கம் நடைபெறும்போது நான் இடையூறு செய்ய விரும்பவில்லை. ஆதலால் நான் அங்கே அமர்கின்றேன். மேலும் நான் இரவில் காலங் கழித்தும் வருவேன். எவ்வகையான தொந்தரவும் ஏற்படுத்த நான் விரும்பவில்லை'' என்று கூறினர். உண்மை யில் அவர் ஒரு போதும் சத்சங்கத்தை விட்டுச் சென்ற தில்லை. அவர் ஒருபோதும் காலங் கழிந்தும் வந்ததில்லை; வழக்கமாக எப்போதும் அவர் எல்லோருக்கும் முன்னதாக வந்துவிடுவார்.

நாம் மேலே குறிப்பிட்ட நாளன்று சத்சங்கம் தொடங்கியது; வாசிப்புகள் முடிந்தன; விளக்கும் அணைக்கப்பட்டு விட்டது. அப்போது குளிர் காலமாக இருந்தது; குருதேவர் வழக்கமாக ஒரு சால்வையைத் தம் தலையைச் சுற்றிலும் போர்த்திக்கொள்ளுவார்; மண்டபத்தினுள் நுழைந்தவுடனே அதை நீக்கி விடுவார். நமக்குத் தெரியாத ஏதோ ஒரு காரணத்தால் அன்று இரவு அவர் அவ்வாறு செய்யவில்லை. இளைஞன் ஒருவன், மனத்தில் திருப்தி இல்லாதவன், மன நோய் உள்ளவன் சத்சங்கம் நடைபெறும் இடத்திற்குத் தன் கையில் ஒரு கோடாரியுடன் வந்து சேர்ந்தான். சுவாமி சிவானந்தர் வழக்கமாக அமரும் இடத்தை அறிந்தவனாய் அவன் அவரை அணுகி குருதேவரின் தலையின் மீது மூன்று முறை தாக்கினான். முதல் தாக்கு, தலைப்பாகையின் மீது விழுந்தது. ஒன்றும் ஆகவில்லை. ஏதோ ஒன்று ஏதோ ஒன்றின் மீது அடிக்கும் ஓசை மட்டும் கேட்டது. எனவே அவன் உடனே அவசரமாகத் தன் கோடாரியை மீண்டும் ஓங்கியபோது குருதேவருக்கு மேலே சுவரில் இருந்த சில படங்களின் மீது அது தாக்கியது. அதிக இரைச்சல் உண்டாயிற்று; இதற்குள் அவன் முற்றிலும் கலவரமடைந்து மீண்டும் ஒருமுறை குறிவைத்துத் தாக்கியும் எப்படியோ அது திறந்திருந்த கதவின் மீது தாக்கியது; சுவாமி சிவானந்தரின் தோளை இலேசாக மட்டும் உராய்ந்தது. மக்கள் உடனே எழுந்து அவனைக் கைப்பிடியாகப் பிடித்தனர்; பயங்கரமான முழு உண்மையையும் கண்டறிந்தார்கள். இந்த நிலையிலும் குருதேவருக்கு இருந்த ஆர்வமெல்லாம் சத்சங்கம் தொடர்ந்து நடைபெற்று எப்போதும் போல் முடிவு நேரத்தில் சொல்லப்படும் வழிபாடுகளுடன் முடிவுக்குக் கொண்டுவர வேண்டும் என்பதேயாகும். எங்களில் சிலர் அலுவலகத்தில் பணி செய்து வந்தோம்; எங்களிடம் ஒருவர் விரைந்து வந்து நடந்த நிகழ்ச்சியைத் தெரிவித்தார். உடனே நாங்கள் அனைவரும் விரைந்து மண்டபத்திற்கு ஓடிச் சென்றோம். கூடியிருந்த அவையினர் அனைவரும், 'சர்வேஷாம் ஸ்வஸ்திர் பவது; சர்வேஷாம் சாந்திர்பவது. .'' என்று உச்சரித்துக்

கொண்டிருப்பதை நான் கேட்டேன்; நான் அருகே இருந்த சக ஊழியரிடம், ''சுவாமிஜி நலமாக இருக்கின்றார் என்று கூறினேன். ஏனெனில் அவருக்கு மட்டுமே அமைதியும், சஞ்சலம் அடையாத தன்மையும், சத்சங்கத்தைத் தொடர்ந்து நடத்தும் சமயோசித அறிவு வன்மையும், முழு நிகழ்ச்சியையும் எதுவுமே நடவாதது போல் பாராட்டும் பண்பும் உண்டு. குருதேவர் எல்லா மந்திரங் களையும் உச்சரித்தவராய் அங்கே அமைதியாக அமர்ந்திருந்தார்.

அன்று குருதேவர் உயிர் தப்பியது இரண்டாவது முறை யாக நிகழ்ந்த ஓர் அற்புதம் என்று நாங்கள் பின்னர் கண்டறிந்தோம். இம்மனிதனைக் குருதேவர் ஆசிரமத்தில் பெருங் கருணையுடன் பேணி வந்தார்; ஆசிரமத்திற்கான சேவையில் நொடியளவு நேரத்தையோ, எள்ளளவு சக்தியையோ செலவிடுமாறு இவனை அவர் ஒரு போதும் கேட்டுக் கொண்டதில்லை; எனினும் இவன் அவரைத் தாக்குவதற்குத் திட்டமிட்டான். காலை நேரத் தியானத் திற்காகக் குருதேவர் வழக்கமாக வரும் சாலையின் திருப்பத் தில் அவருடைய வருகையை எதிர்நோக்கி அவன் காத்துக் கொண்டிருந்தான். குருதேவர் எப்போதும் தனியாகவே வருவார். ஆனால் அன்று காலை, அவர் தியானத்தில் கலந்து கொள்ளத் தவறிவிட்ட காலையாக இருந்தது; அதைப்பற்றி அவர் அதிருப்தி அடைந்திருந்தார். பின்னர் அவர் அலுவலகத்திற்கு வந்தபோது, அவர், ''இன்று நான் மிகவும் அயர்ந்து உறங்கி விட்டேன். என்ன நடந்த தென்றே எனக்குத் தெரியவில்லை. நான் அதிக நேரம் உறங்கிவிட்டேன்'' என்று கூறினார். இம்மனிதன் அவருடைய வருகைக்காக காத்துக் கொண்டிருந்ததினால், அவர் வந்திருந்தால் ஒரு வேளை, அவர் தம் உயிரை இழந்திருப்பார் என்று, பிறகுதான் நாங்கள் கண்டு கொண்டோம். அந்த வாய்ப்பைத் தவற விட்டு விட்டதால் அவன் மற்றொருமுறை முயற்சி செய்வதற்காக மண்டபத் திற்கு வந்தான்.

இந்த நிகழ்ச்சியின் பிறகு, தற்போதுள்ள அச்சகத்தின் அருகே இருந்த ஓர் அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டான். குருதேவர் அங்கே சென்று அவன் முன்னால் கைகூப்பி நின்று, ''என் மீது உனக்குக் கோபம் இருக்கிறதா? இப்போது உனக்குத் திருப்தி ஏற்பட்டுவிட்டதா? இன்னும் என்மீது தாக்குதல் நடத்த விரும்புகின்றாயா?'' என்று கேட்டார். அது ஓர் அழகிய காட்சியாக இருந்தது. என்னே அவருடைய பேரன்பு! அடுத்த நாள் காலையில் காவல்துறை அதிகாரி, ''நாங்கள் அவன் மீது குற்றம் சுமத்த விரும்பு கின்றோம் என்று கூறினார்''. சுவாமிஜி, ''வேண்டாம், குற்றம் சுமத்த எதுவும் இல்லை. அவன் ஒன்றும் செய்யவில்லை. என் கர்மவினைதான் வேலை செய்தது, அதற்காக அவனை ஏன் தண்டிக்க வேண்டும்?'' என்று விடை தந்தார். காவல் துறையினர் அவன் மீது தகுந்த நடவடிக்கை எடுக்க விரும்பினார்கள். ஆதலால் சுவாமிஜி முடிவில், தென்னிந்தியாவில் உள்ள அவனது வீட்டுக்கு அவனை அனுப்பிவிட இசைந்தார். அவன் புறப்படும் அன்று காலையில் சுவாமிஜியே காவல் நிலையத்திற்கு ஒரு தட்டில் மலர்மாலை, பழங்கள், உடை, நூல்கள், ரயில் கட்டணத்துக்காகவும் பிற செலவுகளுக்காகவும் பயன்பட பணம் ஆகியவற்றுடன் சென்றார். அவர் அவனுக்கு மாலையணிவித்தார்; உணவு படைத்தார், அவனுடைய காலடிகளில் வீழ்ந்து பணிந்து வணங்கினார். குருதேவரைத் தவிர வேறு யாரும் இவ்வாறு செய்ய முடியாது. பின்னர் அவர், ''இறைவன்தான் இவ் வடிவில் வந்தார்; காரணங்கள் ஆண்டவனுக்கு மட்டுமே வெளிச்சம். இறைவன் உங்களிடம் நலம் செய்பவராகவும், பிச்சை ஏற்பவராகவும், நோயாளியாகவும் மட்டும் வருவ தில்லை; உங்களைக் கொலை செய்பவராகவும் அவர் வருகின்றார், அவரும் ஆண்டவனைத் தவிர வேறு யாரும் அல்ல'' என்று கூறினார். அவர் பின்னும் பஜனை மண்டபத் திற்கு இரவில் தொடர்ந்து சென்று கொண்டிருந்தார், அவர் பின்னும் மாலை நேர உலாவுக்குத் தனியாகவே சென்று கொண்டிருந்தார். இதுவே நம்பிக்கை என்று சொல்லப் படுகிறது. உங்கள் பகைவனைக் கொன்றவரிடத்தில் இறை

வனைக் காண்பது எளிது; ஆனால் உங்களைக் கொல்வதற்காக வந்த ஒருவரிடமும் நீங்கள் இறைவனைக் காண முடிந்தால், நீங்கள் எல்லா நிலைகளையும் கடந்து வந்துவிட்டவர்கள் ஆவீர்கள்.

குருதேவர், ''நன்னடத்தை உள்ளவர்களுக்கு மரியாதை செய்யுங்கள். முரடனுக்கு முதலில் சேவை செய்யுங்கள். வருங்கால அருளாளராக அல்லது இப்போதே அவனை ஓர் அருள் ஞானியாகக் கருதி நடத்துங்கள். உங்கள் உள்ளத்தைத் தூய்மைப்படுத்தவும் அவரை உயர்த்தவும் இதுவே தக்க வழியாகும்'' என்று தெரிவித்தார். சுவாமி பரமாத்மானந்தாஜி அவர்களுக்குத் தொடக்க காலத்தில் (1934-35) குருதேவர் எழுதிய கடிதங்கள் பலவற்றுள் ஒன்றில், ''என்னை ஏசவும், இகழவும், பழிதூற்றவும் துன்புறுத்தவும் எண்ணற்ற மக்கள் அடங்கிய ஒரு கூட்டம் என்னைச் சுற்றிலும் இருக்கவேண்டும் என்று விரும்புகின்றேன். நான் அவர்களுக்குச் சேவை செய்யவும், கல்வி கற்பிக்கவும் அவர்களை நல்லவர்களாக மாற்றவும் விரும்புகின்றேன்'' என்று எழுதியிருந்தார், ஒரு கூட்டத்தில் அவர், தீயவர்கள் அவர்கள் வெள்ளையுடை அணிந்திருந்தாலும் சரி, அல்லது காவியுடை அணிந்திருந்தாலும் சரி, முதலில் அவர்களைத்தான் தேடுவார்; கூப்பிய கரங்களுடன் அவர்களுக்கு வணக்கம் சொல்லி வரவேற்பார். மிகவும் மரியாதை கலந்த சொற்களுடன் அவர்களுடன் பேசுவார் குருதேவர், ''மூர்க்கர் ஒருவரை ஒரு சாதுவாகக் கருதி ஆர்ப்பாட்டத்துடன் வரவேற்பு வழங்குங்கள். எல்லோரும் அறிய அவருக்கு மரியாதை செய்யுங்கள்; அப்போது, அவர் தம் தீய செயல்களைத் தொடர்ந்து செய்ய நாணுவார். எளிதில் சினம்கொள்ளும் ஒருவரிடம் நேரில், ''நீங்கள் அமைதியின் உருவம்'' என்று கூறுங்கள்; அவர் தாம் சினம்கொள்வதைப் பற்றி நாணம்கொள்வார். சோம்பேறியாகவுள்ள ஒருவரிடம் சுறுசுறுப்பு மிகுந்த உழைப்பாளி என்று அவரைக் கூறுங்கள்; அவர் உடனே சேவையில் மூழ்கிவிடுவார். ஆனால் அந்தப் புகழ்ச்சி உங்கள்

உள்ளத்தின் ஆழத்திலிருந்து வரவேண்டும்; ஒவ்வொரு சொல்லையும் உங்கள் ஆன்மீகச் சக்தியுடன் பொழிய வேண்டும்; வெளிப்படையாகத் தெரியும் எதிர்மறைப் பண்பின் பின்னால் ஒளிமிக்க உடன்பாட்டுக் குணம் இருக்கின்றதென்றும், நிலைநாட்டப் படுவதற்காகவே அது காத்துக்கொண்டிருக்கின்றதென்றும் மனப்பூர்வமாக நீங்கள் உணர வேண்டும்; இதைச் செய்தால் நீங்கள் இருவரும் நலம்பெறுவீர்கள்'' என்று கூறினார்.

நம் உள்ளங்களின் உள்ளே கர்மயோகத்தின் ஆர்வம் விழிப்பு அடையச் செய்தால் நம் ஒவ்வொரு செயலிலும் இந்த மனப்பான்மையின் நிழல் நிச்சயம் காணப்படும். இறைவனுடைய இருப்பைத் திருவுருவங்கள், கோயில்கள், புனித மகான்கள், புனிதத் தலங்கள் ஆகிய இடங்களில் மட்டும் அல்லாமல் செடிகளில், விலங்குகளில், சடப்பொருள் களில்கூடக் குருதேவர் உணர்ந்தார் என்பதை ஒருவர் அவருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளில் காணலாம். தம் முடைய பேனாவை அவர் மூடிவைக்கும் பாங்கைக் காண்பது களிப்பைத் தருவதாகும். அவர் அதை மேசையின் மீது வைப்பார்; எறியமாட்டார். அக்காட்சி அழகாக இருக்கும். அது ஒரு கலை, அதில் ஒரு மென்மை இருக்கும். அவர் ஒரு சால்வையை எடுத்துத் தம்மைப் போர்த்திக் கொள்ளும் போது அச்செயலில் ஓர் அழகு இருக்கும். செயலின் பின்னே இதய பூர்வம் இருந்தமையால் அங்கே கலை இருக்கும். குரு தேவர் படுத்த படுக்கையாக இருக்கும்போதுகூட யாரேனும் ஒரு சிப்பம் (பார்சல்) தந்தால், தம்மால் தரையைத் தொட முடியாமல் இருந்தாலும் அவர் அதைக் கீழே விழுந்து விடாமல் பிடித்துக் கொண்டிருக்க எவ்வளவு முயற்சி செய் வார் என்பதை நீங்கள் நன்கு காணமுடியும். அவர் எப் போதும் எதையும் கீழே போட்டு உடைக்கவில்லை என்று கருதுகின்றேன். ஒரே ஒரு முறை, ஒரு குரங்கு அவருடைய பேனாவை எடுத்துக் கொண்டுபோய் விட்டது; பிறகு யாரோ ஒருவர் அதற்கு ஒரு வாழைப்பழம் தரவே அது பேனாவைக் கீழே எறிந்து விட்டது, மற்றபடி, அவர் பயன்படுத்திய

பொருள்களுக்கு எந்த விபத்தும் நடந்ததாக எனக்கு நினைவில்லை. மக்கள், சிறப்பாக அயல் நாட்டிலிருந்து வரும் பார்வையாளர்கள் அவருக்குப் பல பரிசுகள் வழங்குவது வழக்கம்; அப்போது அவர் தம்மிடம் இருக்கும்¹ பழைய பொருள்களை யாருக்கேனும் தந்து விடுவார். ஒழுங்கு முறைக்கு மாறாக எதுவும் நடைபெற்றதில்லை. இத்தகைய பொருள்களிலும் அவர் இறைவன் இருப்பையே உணர்வார்.

கர்மயோகத்தைப் பயிற்சி செய்வதற்காக நீங்கள் சென்று தருமம் வழங்கச் சில ஏழை மக்களைத்தேடி அலைய வேண்டியதில்லை; சேவை செய்வதற்காக நோயாளிகளை (அல்லது சில்லரை நோயடையச் செய்தாவது) நாடவேண்டியதில்லை. சுவாமி சிவானந்தருக்கு ஒவ்வொரு செயலும் புனிதமானதாகும். உலகில் உள்ள பொருள்கள் அனைத்தும் புனிதமுள்ளவையாகும். தனிச் சிறப்புள்ள சில துறைகளுக்காக மட்டும் என்று குருதேவர் கர்மயோகத்தை ஒதுக்கி வைக்கவில்லை. அவர் உறுதியாகவும் அழுத்தமாகவும், "ஒருவரின் வாழ்க்கை முறை அல்லது தொழில் எதுவாக இருந்தாலும், அவர் எந்த இடத்தில் இருந்தாலும், தன்னலமற்ற, பயன் கருதும் நோக்கமற்ற செய்கையைச் செய்வது அவரால் முடியக்கூடியதே யாகும். எதுவாக இருந்தாலும் தன்னல நோக்கம் எதுவும் இல்லாமல், உங்களுக்கு ஒதுக்கப் பட்ட கடமையை அல்லது பணியைச் செய்யுமாறு உண்மையான ஊக்கம், வேண்டுகின்றது; அப்போது உங்கள் செயல்கள் யாவும் அமைதியும் பேரின்பமும் நிரம்பி வெற்றிகள் கனிந்து விளங்கும்" என்று தெரிவித்தார்.

## சீடர்களுக்குப் பயிற்சி தருதல்

ரிஷிகேசத்தில் உள்ள குருதேவரின் ஆசிரமத்தில், நீங்கள் கருதக்கூடிய ஒவ்வொரு வகையான பணியிலும் துறவிகள் தாங்களாகவே ஈடுபட்டுச் செய்து வந்தார்கள். ஒருமுறை குருதேவரே, "நான் மிகவும் கடுமையாக உழைப்பவன் மட்டுமல்ல; மற்றவர்களிடம் எப்படி வேலை வாங்குவது

என்பதையும் அறிந்திருப்பவன்'' என்று கூறினர். அது மிகவும் அழகான ஒரு கருத்து. இப்படிச் செய்ய அவரால் எப்படி முடிந்தது? சில சமயங்களில் அவர் தம் நாற்காலியில் சாய்ந்து கொண்டு தம் மூக்குக் கண்ணுடியை மேலே உயர்த்துவார்; சில சமயங்களில் ஒரு கண்ணை மூடிக் கொண்டு பார்ப்பார். வெறுமனே பார்ப்பார். அதன் பிறகு அவர் புன்முறுவல் செய்வார். அவருடைய குரலில், அந்தச் சில சொற்களில் அந்த வெறும் பார்வையில் என்னதான் இருந்தது? அவருடைய முகத்தில் ஏதோ ஒன்று வசீகரிப்பதாக இருந்தது. அன்பினுல் அவர் வெற்றி கொண்டார்.

கவனக்குறைவான, தகுதியற்ற, பிழைகள் நிறைந்த பணிகள் பற்றி அவர் எல்லை மீறிய பொறுமையுடன் இருந்தார். இவற்றைப் பற்றி அவர் சிறிதும் பொருட்படுத்தவில்லை. அவரால் சகித்துக் கொள்ள முடியாதது, சோம்பலைத்தவிர உண்மையில் வேறு எதுவும் இல்லை; இதை அவரே அடிக்கடி கூறுவார். மற்ருெருவர் வேலை செய்யுமாறு ஒருவர் எப்படிச் செய்ய முடியும்? இதற்கான முதல் விடை, நீங்கள் ஒரு முன் உதாரணமாக இருக்க வேண்டும். சுவாமி சிவானந்தரே மிகச் சிறந்த உதாரணம்.

அவர் பின்பற்றிய மற்ருெரு வழி இருந்தது. நீங்கள் சோம்பலாக இருந்தால் குருதேவரிடமிருந்து நீங்கள் முதலில் சில பழங்களும், பாலும் காப்பியும், மற்றும் சில பரிசுகளும் பெறுவீர்கள். சுவாமி சிவானந்தரின் பக்கத்தில் நீங்கள் செல்லும் போதெல்லாம் அவர் உங்களை வாழ்த்தி வரவேற்று உங்கள் நல்ல குணங்களைப் புகழ்வார்; இது மறைமுகமாக உங்களிடம், ''இத்தகைய வியக்கத்தக்க மனிதராக உள்ள நீங்கள் ஏன் சிறிது பணி செய்யலாகாது?'' என்று தெரிவிப்பதாகும். சில சமயங்களில் நீங்கள் அந்தக் குறிப்பை எடுத்துக் கொள்கிறீர்கள்; மற்ற சமயங்களில் நீங்கள், ''நாள் தோறும் நான் ஆறு மணி நேரம் தியானம் செய்கிறேன்'' என்று கூறுகிறீர்கள்; உடனே அவர் ஆர்வத்துடன், ''மிகவும் நல்லது, நீங்கள் அவசியம் தியானம்

செய்ய வேண்டும்; சில கீர்த்தனைகளையும் பஜனைப் பாடல் களையும் பாடுங்கள்'' என்று உடன்பட்டவாறு பேசுவார். அதைச் செய்யுமாறு அவர் உங்களை ஊக்குவிப்பதாக நீங்கள் கருதி, இன்னும் மிகுந்த சோம்பலுக்கு நீங்கள் ஆளாகி விடுகிறீர்கள். பழமும் காப்பியும்கூட உங்களைத் தூண்டி விடுவதில்லை; கிளர்த்தெழச் செய்வதில்லை. பின்னர் உங்கள் முன்னிலையில் அவர் மற்றொருவரைப்பற்றி, ''எவ்வளவு சக்தி யுள்ளவராக அவர் இருக்கின்றார்! ஒவ்வொருவரும் அவசியம் அவரைப் போல இருக்க வேண்டும்'' என்று பேசத் தொடங் குகின்றார். இது உங்கள் மனத்தில் படுகின்றது; ஆனால் உங்கள் உள்ளத்தில் ஏற்கனவே, அமர்ந்து ஆறு மணி நேரம் தியானம் செய்வதுபற்றிய உருவம் இருப்பதனால், நீங்கள் அதைப்புறக்கணித்து விடுகிறீர்கள். இவையெல்லாம் பயன் பட வில்லையென்றால் அவர், '' ஒரு மாறுதலுக்காக, எழுந்து ஏதாவது செய்யுங்கள்'' என்று கூறலாம். அவர் சில நிமிடங்களிற் இடியேறுபோல இறங்கி வருவார்; பிறகு மீண்டும் அவர் பாலும் தேனும் போல ஆகிவிடுவார்; அதுவும் தோல்வியடைந்தால், நிதி நெருக்கடி ஏற்படும்போது சோம்பேறிகளாக உள்ளவர்கள் முதலில் வெளியேற்றப் படுவார்கள். அவர் ஒருபோதும் சோம்பலைப் பொறுத்துக் கொள்ளமாட்டார். டைபாய்டு காய்ச்சல் வந்து, அதனால் அவர் மிகவும் பலவீனமடைந்திருந்த போதிலும் அவர் அடிக்கடி ஆசிரமத்தில் உள்ள சோம்பேறி களைப் பற்றித்தான் விசாரிப்பார். ''நாம் இங்கு சோம்பேறி களுக்கு இடம் கொடுக்கக் கூடாது.'' அவரே ஒருபோதும் சோம்பேறியாக இருந்ததில்லை. உடம்பை நன்கு பேணி வந்தார். பிறகு அதனிடம் அவர் நன்கு வேலை வாங்கினார். மண்ணில் உள்ள புழுக்கள் உண்ணும்படியாக உங்கள் நலம் மிக்க உடம்பை ஏன் கல்லறையில் இடுகிறீர்கள்? அதை நீங்கள் எறிவதற்கு முன்பு, கடைசிச் சொட்டு 'ரசம் உள்ள வரை சாறு எடுங்கள்; சாறு பிழியுங்கள்.

குருதேவர் ஆசிரமத்தில் இருந்த சாதகர்கட்குத் தந்தைக்கும் தாய்க்கும் மேலாக இருந்தார். யாராவது

தம்முள் மறைந்துள்ள திறமைக்கான அடையாளத்தை மிகச்சிறிது வெளிப்படுத்தினுலும் அவர் அதை விழிப்படையச் செய்வதிலும், முழு அளவில் வளர்ச்சிபெறுமாறு பேணுவதிலும் தம்மையே ஆளாக்கிக் கொள்வார். இதைச் செய்வதற்கான வழிவகைகளைக் குருதேவர் இடையருது சிந்தித்து வருவார். மனித சமுதாயத்தின் நலத்திற்காக ஒவ்வொருவரும் தம் ஆற்றல் முழுவதையும் வெளிப்படுத்த வேண்டும். ஓர் இளைஞர் காகிதத்தை உருவாக்கும் தொழிற்கலை தமக்குத் தெரியும் என்று தெரிவித்து ஆசிரமத்துக்கு வந்தார். அடுத்த நாட் காலையில் குருதேவர், ஒரு குழியைத் தோண்டுமாறும் மூலப் பொருள்களைத் தருவிக்குமாறும் ஆணையிட்டார். அவ்விளைஞர் தம் கருத்துக்களின்படிச் செய்து பார்க்கக் குருதேவர் ஊக்குவித்தார்; ஆனல் அவரிடம் சான்றிதழ்கள் எவையும் அறவே இருக்கவில்லை; குருதேவரும் ஒரு போதும் எதுவும் கேட்கவில்லை.

ஒரு நல்ல இசைவாணர் ஆசிரமத்தில் சேர்ந்தார், அடுத்த நாளே ஒரு புதிய ஆர்மோனியப் பெட்டியும் மிருதங்கமும் அவருக்கென்று வழங்க ஆணையிடப்பட்டது. இத்தகைய புதிய முயற்சிகளில் குருதேவர் மிகுந்த அக்கறை எடுத்துக்கொள்வார். அவர் அப்படிச் செய்வதைப் பார்க்கும் போது, இத்தகைய பணியில் உங்கள் உதவியை எதிர் பார்த்து உங்கள் வருகைக்காகவே அவர் காத்திருந்தார் போலும் என்று நீங்கள் நினைப்பீர்கள். கலைத்திறமையுள்ள ஒருவர் தமது துறையில் விரைந்து முன்னேறுவதற்கான குறிப்புக்களை அவர் மிகக் குறுகிய காலத்தில் வழங்கிவிடுவார்! அவருடைய உற்சாகம் அத்தகைய சக்திவாய்ந்ததாக இருந்தது,

சுவாமி சாரதானந்தர் 1947ல் ஆசிரமத்தில் சேர்ந்தார். அவருக்குப் புகைப்படக் கலையில் மனவிருப்பம் இருந்ததைக் கண்டுகொண்ட குருதேவர் உடனே ஒரு புகைப்படப் பிரிவை உருவாக்கினுர்; எல்லா வகையான ஊக்கங்களையும் வழங்கினுர். முடிவில், நாட்டிலேயே மிகவும் வசதிகள் வாய்ந்த புகைப்படம் பிடிக்கும் இடங்களில் ஒன்ருக அது விளங்கியது.

இது நிகழ்ந்தது, தொழிற்கலை வசதிகள் முன்னேறியுள்ள நகர்ப்பகுதியில் அல்ல; இமயமலை அடிவாரத்தில்தான் இதுவும், இதுபோன்ற யாவும் நிகழ்ந்தன என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

மற்றொரு சுவையான நிகழ்ச்சி நடந்தது. ஆசிர மத்தில் தங்கும் நோக்கத்துடன் வராத ஒரு சமையற்கார ரிடம், குருதேவர், ஒரு சிற்றுண்டி விடுதியைத் தொடங்கி வியாபாரம் செய்து இலாபம் சம்பாதிக்குமாறு ஊக்கு வித்தார். குருதேவருடைய கருத்து ''முதலில் அவரை இங்கே தங்கச் செய்யுங்கள்; பிறகு ஆன்மீகப் பயிற்சி செய்யுமாறு அவரை மெதுவாக மாற்றுங்கள்'', என்பதாகும்.

ஆசிரமத்தில் இருந்த பல்வேறு துறைகள் யாவும் துறவிகளாலேயே நடத்தப்பட்டன. கடிதப்போக்கு வரத்துக்களையும் அவர்களே செய்து, வரவு செலவுக் கணக்கு களையும் பராமரித்து வந்தனர். இந்த நடவடிக்கைகள் 'உலகியல்' நடவடிக்கைகள் போல் கருதப்படவுமில்லை; வெறுத்து ஒதுக்கப்படவுமில்லை.

செய்யப்பட வேண்டியது எதுவாயினும் அதைச் செய்வ திலே குருதேவர் வெட்கப்பட்டது கிடையாது. ஆசிரமத்தின் ஆரம்ப நாட்களில், கிறிஸ்து பிறந்த நாள் சார்பான விடுமுறை நாட்களிலும் ஒரு வார காலத்திற்கு யோகப்பயிற்சிக் கூட்டங்களை நடத்துவது சுவாமிஜியின் வழக்கம். பார்வை யாளர்கள் இந்தியா முழுவதும் உள்ள பகுதிகளிலிருந்து வருவது போலவே வெளி நாடுகளிலிருந்தும் வழக்கமாக வருவார்கள். அவர்களில் சிலர் நீதிபதிகளாகவும், காவல் துறை அதிகாரிகளாகவும், வழக்கறிஞர்களாகவும், வணிகர் களாகவும் இருப்பவர்கள்; ஆனால் தாங்கள் யாவரும் ஆன்மீகச் சாதகர்களாக ஆசிரமத்தில் நடத்தப்பட்டார் கள். ஒரு நாட் காலையில் குருதேவர்'', இன்று கர்மயோகம். வாரீர்! நாம் அனைவரும் தோட்டிகள். இன்று நாம் தெருக்களைப் பெருக்குவோம்'' என்று அறிவிப்பார். அங்கே

தம்முள் மறைந்துள்ள திறமைக்கான அடையாளத்தை மிகச்சிறிது வெளிப்படுத்தினாலும் அவர் அதை விழிப்படையச் செய்வதிலும், முழு அளவில் வளர்ச்சிபெறுமாறு பேணுவதிலும் தம்மையே ஆளாக்கிக் கொள்வார். இதைச் செய்வதற்கான வழிவகைகளைக் குருதேவர் இடையறாது சிந்தித்து வருவார். மனித சமுதாயத்தின் நலத்திற்காக ஒவ்வொருவரும் தம் ஆற்றல் முழுவதையும் வெளிப்படுத்த வேண்டும். ஓர் இளைஞர் காகிதத்தை உருவாக்கும் தொழிற்கலை தமக்குத் தெரியும் என்று தெரிவித்து ஆசிரமத்துக்கு வந்தார். அடுத்த நாட் காலையில் குருதேவர், ஒரு குழியைத் தோண்டுமாறும் மூலப் பொருள்களைத் தருவிக்குமாறும் ஆணையிட்டார். அவ்விளைஞர் தம் கருத்துக்களின்படிச் செய்து பார்க்கக் குருதேவர் ஊக்குவித்தார்; ஆனால் அவரிடம் சான்றிதழ்கள் எவையும் அறவே இருக்கவில்லை; குருதேவரும் ஒரு போதும் எதுவும் கேட்கவில்லை.

ஒரு நல்ல இசைவாணர் ஆசிரமத்தில் சேர்ந்தார், அடுத்த நாளே ஒரு புதிய ஆர்மோனியப் பெட்டியும் மிருதங்கமும் அவருக்கென்று வழங்க ஆணையிடப்பட்டது. இத்தகைய புதிய முயற்சிகளில் குருதேவர் மிகுந்த அக்கறை எடுத்துக்கொள்வார். அவர் அப்படிச் செய்வதைப் பார்க்கும் போது, இத்தகைய பணியில் உங்கள் உதவியை எதிர் பார்த்து உங்கள் வருகைக்காகவே அவர் காத்திருந்தார் போலும் என்று நீங்கள் நினைப்பீர்கள். கலைத்திறமையுள்ள ஒருவர் தமது துறையில் விரைந்து முன்னேறுவதற்கான குறிப்புக்களை அவர் மிகக் குறுகிய காலத்தில் வழங்கிவிடுவார்: அவருடைய உற்சாகம் அத்தகைய சக்திவாய்ந்ததாக இருந்தது,

சுவாமி சாரதானந்தர் 1947ல் ஆசிரமத்தில் சேர்ந்தார். அவருக்குப் புகைப்படக் கலையில் மனவிருப்பம் இருந்ததைக் கண்டுகொண்ட குருதேவர் உடனே ஒரு புகைப்படப் பிரிவை உருவாக்கினார்; எல்லா வகையான ஊக்கங்களையும் வழங்கினார். முடிவில், நாட்டிலேயே மிகவும் வசதிகள் வாய்ந்த புகைப்படம் பிடிக்கும் இடங்களில் ஒன்றாக அது விளங்கியது.

இது நிகழ்ந்தது, தொழிற்கலை வசதிகள் முன்னேறியுள்ள நகர்ப்பகுதியில் அல்ல; இமயமலை அடிவாரத்தில்தான் இதுவும், இதுபோன்ற யாவும் நிகழ்ந்தன என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

மற்றொரு சுவையான நிகழ்ச்சி நடந்தது. ஆசிர மத்தில் தங்கும் நோக்கத்துடன் வராத ஒரு சமையற்கார ரிடம், குருதேவர், ஒரு சிற்றுண்டி விடுதியைத் தொடங்கி வியாபாரம் செய்து இலாபம் சம்பாதிக்குமாறு ஊக்கு வித்தார். குருதேவருடைய கருத்து ''முதலில் அவரை இங்கே தங்கச் செய்யுங்கள்; பிறகு ஆன்மீகப் பயிற்சி செய்யுமாறு அவரை மெதுவாக மாற்றுங்கள்'', என்பதாகும்.

ஆசிரமத்தில் இருந்த பல்வேறு துறைகள் யாவும் துறவிகளாலேயே நடத்தப்பட்டன. கடிதப்போக்கு வரத்துக்களையும் அவர்களே செய்து, வரவு செலவுக் கணக்கு களையும் பராமரித்து வந்தனர். இந்த நடவடிக்கைகள் 'உலகியல்' நடவடிக்கைகள் போல் கருதப்படவுமில்லை; வெறுத்து ஒதுக்கப்படவுமில்லை.

செய்யப்பட வேண்டியது எதுவாயினும் அதைச் செய்வ திலே குருதேவர் வெட்கப்பட்டது கிடையாது. ஆசிரமத்தின் ஆரம்ப நாட்களில், கிறிஸ்து பிறந்த நாள் சார்பான விடுமுறை நாட்களிலும் ஒரு வார காலத்திற்கு யோகப்பயிற்சிக் கூட்டங்களை நடத்துவது சுவாமிஜியின் வழக்கம். பார்வை யாளர்கள் இந்தியா முழுவதும் உள்ள பகுதிகளிலிருந்து வருவது போலவே வெளி நாடுகளிலிருந்தும் வழக்கமாக வருவார்கள். அவர்களில் சிலர் நீதிபதிகளாகவும், காவல் துறை அதிகாரிகளாகவும், வழக்கறிஞர்களாகவும், வணிகர் களாகவும் இருப்பவர்கள்; ஆனல் தாங்கள் யாவரும் ஆன்மீகச் சாதகர்களாக ஆசிரமத்தில் நடத்தப்பட்டார் கள். ஒரு நாட் காலையில் குருதேவர்'', இன்று கர்மயோகம். வாரீர்! நாம் அனைவரும் தோட்டிகள். இன்று நாம் தெருக்களைப் பெருக்குவோம்'' என்று அறிவிப்பார். அங்கே

எந்த விதமான ஏற்றத்தாழ்வும் இருக்காது; குருதேவரே முதலில் வந்து காத்திருப்பார். இந்தியாவின் சில கிராமங்களில் உள்ள சாலைப் பகுதிகளையும் பெருக்கித் துப்புரவு செய்ய நீங்கள் புறப்பட்டால், அங்கு நீங்கள் செத்த எலிகள், பசுவின் சாணம் முதலிய எதையும் காணலாம். இப்போதுதான் சிக்கல் வருகின்றது; தொழிற் பழக்கமுள்ள தெருக்கூட்டுவோன் துடைப்பம் வைத்திருக்கின்றான்; அதைக் கொண்டு அவன் எல்லா அசுத்தங்களையும் அகற்றித் தள்ளி விடுகிறான்; ஆனால் நாம் அப்படிச் செய்யமாட்டோம். அது சிறிதுகூடச் சரியான மனப்பான்மை அன்று; ஏனெனில் பசுவின் சாணத்தில் கூடத் தெய்வீகச் சான்னித்யம் இருக்கின்றது. ஒழுகும் பசுவின் சாணம் நிரம்பிய கூடையைக் குருதேவர் சுமக்கும் போது, பசுவின் சாணத்தைச் சுமப்பவராக இருக்க வில்லை; சிவபெருமானே அவருடைய முடியின் மீது அமர்ந்திருந்தார். ஒவ்வொருவரும் இவ்வாறே செய்ய வேண்டும்; பயிற்சி இத்தகையதாக இருந்தது. இது தனிச் சிறப்புள்ள பயிற்சி என்பதில் ஐயமில்லை; ஆனால், உள்ளுணர்வைப் பொருட்படுத்துவது போல நாம் செய்வது எதையும் பொருட்படுத்தக் கூடாது என்று நாங்கள் கற்றுக்கொண்டோம்.

சில சமயங்களில், சமையலறையில் காய்கறிகளை நறுக்குதல், உருளைக் கிழங்குகளை உரித்தல் முதலிய பணிகளைச் செய்யுமாறு எங்களுக்குக் கட்டளை வரும்; இப்பணிவிடைகளின்போது நாங்கள் இறைவனுடைய திருநாமத்தை உச்சரிக்கும்படி அவர் வற்புறுத்துவார்; சில சமயங்களில் நாங்கள் அனைவரும் சேர்ந்துபாடுவோம். ''ஹரே ராம ஹரே ராம, ராம ராம..........'' பாடல் ஒலித்துக் கொண்டே இருக்கும்; பணி நடைபெற்றுக் கொண்டிருக்கும். பாடல் அல்லது எதுவாயினும் அது, இறைவன்தான் எதையும் செய்கின்றான் என்றும் இறைவனுக்காகவே அது செய்யப்படுகின்றது என்றும் நமக்கு நினைவூட்டிக் கொண்டே இருக்கும். செய்பவன் இறைவன், பயன் பெறுபவனும் இறைவன்; ஆதலால் செயல் தானாகவே தெய்வீகத் தன்மையைப் பெற்று விடுகின்றது.

ஒரு நாள் நாங்கள் அனைவரும் அலுவலகத்தில் சரியாகக் குருதேவரின் முன்னால், வேலை செய்து கொண்டிருந்தோம். எங்களில் சிலர் தட்டச்சு செய்து கொண்டிருந்தார்கள்; சிலர் எழுதிக் கொண்டிருந்தார்கள்; சிலர் வரவு செலவுக் கணக்குகளைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர் எதையாவது வேடிக்கையாகச் சொல்ல விரும்பினால் அழகான வழியில் அதைச் சுட்டிக் காட்டுவார். அவர் தாம் அணிந்திருந்த மூக்குக் கண்ணாடியை நெற்றிக்கு மேலே தள்ளிக் கொள்ளுவார்; ஒரு கண்ணை மூடிக்கொண்டு மற்றொரு கண்ணால் பார்ப்பார். தம்முடைய முழங்கையை மேசை மீது ஊன்றிக்கொண்டு எங்களைப் பார்த்தார். பொலிவுள்ள, குறும்புத்தனம் நிறைந்த, புன்முறுவல் பூத்தவராய், ''இவ்வகையான வேலையை நீங்கள் டில்லியில் இருந்தபோதுகூடச் செய்தீர்கள், அல்லவா?'' என்று கேட்டார். ''ஆம், சுவாமிஜி'' என்றோம். ''எனவே, இங்கு வந்ததில் அதைக் காட்டிலும் மிகுந்த பயன் என்ன உண்டு? மோட்சத்தை, விடுதலையை நாடி நீங்கள் ஓர் ஆசிரமத்திற்கு, ஒரு புனித இடத்திற்குச் செல்லுகிறீர்கள். அங்கும் நீங்கள் முன்பு அரசுப் பணியில் செய்தது போன்ற சரியாக அதே வேலையைச் செய்கிறீர்கள். இங்கு நீங்கள் எதற்காக வர வேண்டும்? வாழ்வில் ஒவ்வொருவரும் தத்தமக்கு உரிய சொந்த இடங்களில் இருந்துகொண்டே கர்மயோகத்தைப் பயிற்சி செய்ய முடியாதா? என்ன'' என்று கேட்டார்.

நாங்கள் அனைவரும் மௌனமாக இருந்தோம். பிறகு அவரே விடை தந்தார். ''இங்குதான் ஆன்மா விழிப்படைகின்றது''. நீங்கள் வாழ்க்கைப் போராட்டத்தில் இன்னும் ஈடுபட்டுக்கொண்டிருக்கும்போது, குழப்பமடைந்திருக்கும் போது, சரியான ஆர்வத்தை வளர்த்துக் கொள்வது மிகவும் கடினம். நீங்கள் ஒரு குருவின் திருவடிகளில் வாழும்போது தான் இந்த ஆர்வத்தைக் கண்டு பிடிக்கிறீர்கள். நீங்கள் மீண்டும் உலகத்திற்குத் திரும்பி வரும்போது, அதே உலகமாகத்தான் இருக்கின்றது; ஆனால் நீங்கள் பழைய

அதே மனிதர் அல்ல; ஆகவே உலகமும் அதே பழைய உலகாக உங்களுக்குத் தோன்றுது. நீங்கள் புதிய பார்வையைப் பெற்றிருக்கிறீர்கள். உங்களுக்கு இத்தகைய பயிற்சியைத் தருவது குருதேவர் ஆசிரமத்தின் பணியாகும்.

உண்மையான, நேர்மையான, தாகமுள்ள சாதகர், குருதேவருடைய தெய்வம் ஆவார். இத்தகைய சாதகர் களுக்காகவே அவர் வாழ்ந்தார். இதற்கு ஒருவர் சொல்லக் கூடிய ஒரே ஒப்புமை தந்தைக்கும் ஒரே மகனுக்கும் உள்ள உறவுதான்; அம் மகன் வாழ்வில் காலந் தாழ்ந்து பிறந்தான்; அவன் மீது தந்தை தன் அன்பு முழுவதையும் பொழிகின்ருர்; அவனுடைய நலத்திற்காகத் தாம் செய்யும் எந்த ஒரு தியாகமும் மிகப் பெரிது அன்று என்று அவர் கருதுகின்ருர்.

வேலைக்கான துறையில் மட்டும் அன்று, ஆன்மீகப் பயிற்சிக்கான துறையிலும் குருதேவர் ஒவ்வொரு சாதகருக்கும், தாமே வளர்ச்சி பெறுமாறு அவரவரின் தனிப்பட்ட இயல்புக்கும், மனப்பான்மைக்கும் தகுந்தவாறு வேண்டிய சூழ்நிலையை உருவாக்கிஞர். தமது ஆன்மீகப் பயிற்சி முறையை மாற்றிக் கொள்ளுமாறு எந்த சாதகரும் ஒருபோதும் வற்புறுத்தப்படவில்லை. நீங்கள் வேதாந்தத்தைப் பயில விரும்பிஞல் நீங்கள் தனிமையில் பயிலவும், வளரவும் வேண்டிய வசதிகளும், வாய்ப்புக்களும் எல்லா வகையிலும் அமையுமாறு அவர் ஏற்பாடுகள் செய்வார். எந்த வேலையையும் செய்யுமாறு அவர் உங்களைக் கேட்க மாட்டார்; அவர் உங்களின் அறிவாற்றலை வெளிப்படையாகவே புகழ்வார்; யோக வேதாந்த வனப்பல்கலைக் கழகத்தின் பேராசியராக உங்களை நியமித்துவிடுவார். ஆன்மீகப் பயிற்சியின் வேறு முறைகளை ஆர்வத்துடன் பயிலும் சாதகர்களையும் இவ்வாறே உயர்த்துவார். குருதேவர் ரிஷிகேசத்தில் வாழ்ந்த ஆரம்ப நாட்களில் தாமே அனுபவித்த துயரங்களிலிருந்து, தம் புனிதத் திருவடி நிழலில் அடைக்கலம் புகுந்துள்ள சாதகர்களைக் காப்பாற்றுவதற்காக, அவர் இடையருது பாடுபட்டார். உடல்,

உணவு, உறையுள், மருத்துவ மேற்பார்வை முதலிய அன்றாடத் தேவைகளின் பொருட்டுக் கவலைப்படும் மனோ சக்தி வீணாக அவ்வாறு செலவழிக்கப்படாமல் தடுப்பதற்காக அவர் எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் சென்று அவ்வாறே காப்பாற்றி, அவர்கள் தாங்களாகவே வகுத்துக் கொண்ட பாதையில் கவலையில்லாமல் முன்னேறுவதற்கு மிகவும் உதவியாக இருப்பார். குருதேவரைக் காட்டிலும் உடல் நலிவு அடைந்தவர் ஆசிரமத்தில் யாரும் இல்லை; இருந்தும், அவரைக் காட்டிலும் கடினமாகப் பாடுபட்டவரும் வேறு யாரும் இல்லை சாதகர் ஒருவர் உடல் நலமின்றி இருக் கின்றார் என்று கண்டு கொண்ட கணமே — இலேசான தலை வலியாக அது இருந்தாலும் கூட — அவர், ''தயவு செய்து போங்கள், ஓய்வு கொள்ளுங்கள்'' என்று வேண்டுவார்; அத்துடன் ஒரு மருத்துவரையும் அரை டஜன் ஆட்களையும் உடன் அனுப்பி அவருக்குச் சிகிச்சை செய்யுமாறு பார்த்துக் கொள்ளுவார். அப்படியிருப்பினும் அவர் தாமே உடல் நலிவுற்றிருந்தால், சிறிதேனும் உடம்புக்கு ஓய்வு தருமாறு வேண்டும் மருத்துவரின் வேண்டுகோளைக் கடுமையாகப் புறக்கணித்துவிடுவார். குருதேவர் தாமே தம் உபதேசத்திற்கும், நடைமுறைப் பின்பற்றுதலுக்கும் இடையே இருந்த நீண்ட வேறுபாட்டுக்கு இதுஒரு சான்று. வசதிகள் பற்றிக் கவலைப்படாத, தம்மையே தியாகம் செய்யும் சேவையை அவர் செய்து வந்தார்; ஆனால், ''உங்கள் உடல் நலம் பற்றித் தயவு செய்து கவனம் செலுத் துங்கள்'' என்று அவர் மற்றவர்களுக்கும் போதித்து வந்தார். நேர்மையான ஆன்மீகச் சாதகரிடத்தில் அவர் கொண்டிருந்த அன்பு, புரிந்து கொள்ள முடியாத ஒன்றாகும்.

1946-ல் நாங்கள் மிக்க வறுமையில் இருந்தோம்; பல அறைகள் எங்களுக்கு இருக்கவில்லை; பல்வேறு வசதிகளும், சௌகரியங்களும் கூட எங்களுக்கு இருக்கவில்லை. ஆசிரமத் தின்மீது படையெடுத்து வரும் குரங்குகளிடமிருந்து கூட எங்களுக்குத் தகுந்த பாதுகாப்பு இருக்கவில்லை. எங்களுக்கு ஒரேயொரு சின்னஞ் சிறிய அறை இருந்தது; அதை நாங்கள்

அலுவலகம் என்று அழைத்தோம்; பாதுகாப்பற்ற இரட்டைக் கதவுகள் அதற்கு இருந்தன; இதற்கு அருகில் ஓர் அறை தாழ்ந்த கூரையுடனும், தாழ்ந்த நுழை வாயிலுடனும் இருந்தது. 'பணிதற்குரிய நுழை வாயில்' என்று குருதேவர் இதனை அழைப்பது வழக்கம். நீங்கள் குனிந்து வளையவில்லை என்றால் உங்களின் தலை போய்விடும் — உண்மையில், உயிர் கூடப் போய்விடும். இவ்விரண்டு, அறைகளுக்கும் நடுவே இணைப்புக் கதவு ஒன்று இருந்தது. ஒரு நாள் கோடைக்கால நடுவில் மத்தியான நேரத்தில் அங்கு வெப்பமாக இருந்தது. எனவே நாங்கள் அலுவலகத்தையும் இணைப்புக் கதவையும் சாத்தி வைத்துவிட்டுப் பக்கத்தில் உள்ள சிறிய அறையில் தங்கினோம். குருதேவர் நண்பகல் உணவு கொள்ளும் போதெல்லாம் இன்னொரு தட்டு வேண்டும் என்று கேட்பார்; தமது உணவு எதுவாயினும் அதில் ஒரு பகுதியை அத்தட்டில் இடுவார். தமது உணவை உண்டு முடித்த பின், ஓய்வு கொள்ளாமல், அத்தட்டைத் தமது வழுக்கைத் தலையின்மீது ஒரு துணியால் அதை மூடியவாறு சுமந்து கொண்டு அறை அறையாக நடந்து வந்து ஒவ்வொரு சீடருக்கும் அவ்வுணவில் சிறிது வழங்குவார். அந்த நாட்களில் இதுவே ஒரு செயற்கரிய செயலாக இருந்தது; ஏனெனில் துறவிகளில் பெரும்பாலோர், சீடரோ அல்லது வேறு யாரோ, தாம் உண்ணும் உணவைக் கூடப் பார்க்க அனுமதிக்க மாட்டார்கள். இவ் விதிக்குக் குருதேவர் ஒரு விதி விலக்காக இருந்தார். ''நான் எதை உண்டாலும் என்னிடம் எது இருந்தாலும் உங்களுக்கும் அதில் உரிமை உண்டு; நீங்களும் அதில் பங்கு பெற வேண்டும்'' என்பதே அவருடைய ஆர்வம் மிகுந்த நோக்கம். எனவே பகல் ஒரு மணி அளவில், சுட்டுப்பொசுக்கும் வெயிலில் தட்டைக் கையில் ஏந்தியவராக அவர் அலுவலகத்திற்கு நடந்து வந்தார். கதவுகள் எல்லாம் சாத்திவைக்கப் பட்டிருப்பதைப் பார்த்து நாங்கள் தூங்கிக் கொண்டிருப்பதாகக் கருதினார். கதவுக்குப் பக்கத்திலேயே சமையலறை இருந்தது; அங்கு சென்ற அவர் ஒரு துறவியைக் கண்டார். குருதேவர் அவரிடம் மூன்று கிண்ணங்களில் உணவுகள்

நிரப்பித் தந்து, ''அந்த மூன்று சிறுவர்கள் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார்கள்; அவர்களை எழுப்பித் தொந்தரவு செய்ய வேண்டாம். அவர்கள் விழித்தெழுந்த பிறகு இவற்றைக் கொடுத்துவிடுங்கள்'' என்று கூறினார். இரண்டு நிமிடங்களுக்குப் பிறகு எங்களில் ஒருவர் சிரித்துவிட்டார். சமையலறையிலிருந்த துறவி இதைக் கேட்டுவிட்டு மூன்று கிண்ணங்களுடன் உள்ளே வந்து, ''சுவாமிஜி இங்கு வந்தார்; இவற்றை உங்களுக்காகத் தந்தார்; நீங்கள் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று அவர் கருதினார்'' என்று கூறினார். வாழ்நாள் முழுதும் குருதேவர் இதே ஆர்வத்துடன் இருந்தார். தம்மைக் காட்டிலும் மற்றவர்களின் மீது அவர் மிகுந்த கருணை கொண்டிருந்தார். அவருடைய உடம்பில் மிகுந்த சுருக்கங்கள் விழுந்திருந்தமைக் குரிய காரணங்களில் இதுவும் ஒன்றாக இருக்கலாம்; உடம்பு அதைத் தாங்கக் கூடியதாக இருக்கவில்லை.

நீங்கள் இத்தகைய ஒருவரிடம் வாழும்போது, அவரைக் கண்காணிப்பதுகூடக் கடினம் ஆகிவிடுகின்றது. உண்மையான குருவையும் அவருடைய போதனைகளையும் காண்பதற்காக இத்தகைய திரைகளினூடே நீங்கள் கழுகுப் பார்வையுடன் ஊடுருவிப் பார்க்கவேண்டி இருக்கின்றது. மாணவர்களிடம், நிறைநிலையான, சீரான இரட்டை உறவு கொண்டுள்ள ஒரு பெரும் ஞான ஆசிரியரின் போதனைகளை ஒருவர் எவ்வாறு ஆராய முடியும்? தம் சீடர்களுக்குப் போதிக்கவும் தகுந்த பயிற்சி தரவும் அவர் விரும்பினார் என்பதில் சிறிதும் ஐயமில்லை; ஆனால் அவர் தம் போதனைகள் என்னும் மாத்திரைகளில் மிகுந்த இனிப்பைத் தடவித் தரும் அளவுக்கு அவர் அவர்களை நேசித்தார்; இதனால் நாங்கள் பெரும்பாலும் அடிக்கடி இனிப்பை மட்டும் உறிஞ்சிக்கொண்டு மாத்திரைகளைத் தூர எறிந்து விடுவோம். இந்த இனிப்பையெல்லாம் உறிஞ்சுவதற்கு உங்களுக்கு மிகவும் பொறுமை வேண்டும்; அதன் பிறகு மாத்திரை (மிகவும் கசப்பாக இருக்கும்) வரும். இவ்வுறவின் இரு பக்கங்களும் சம அளவு சக்திவாய்ந்திருந்தன; சீடர்களுக்குப்

போதிக்க வேண்டும் என்ற அவருடைய ஆர்வமும், அவர்கள்பால் அவர் கொண்டிருந்த அன்பும் சமமாக இருந்தன. போதிக்க வேண்டும் என்ற ஆசை, அன்பில் முளைத்தது; போதிக்க வேண்டும் என்ற ஆசையிலே அன்பு முளைத்தது.

அவர் ஏதேனும் செய்யும்போது, நாம் அவருடைய முகத்தைப் பார்க்க வேண்டும்; அவருடைய கண்களைப் பார்க்க வேண்டும்; நம்மிடம் வழக்கமாக இருப்பது அவரிடம் முற்றிலும் வேறுபட்டுக் காணப்பட்டது. அவர் உங்களுக்கு ஏதேனும் வழங்கும்போது, அவர் உங்களுக்காக ஏதேனும் செய்யும்போது, அந்த முகத்தில் தற்பெருமையோ, அகந்தைக் கண்ணோட்டமோ, தாம் மட்டும் திருப்தியடைந்த பாவனையோ சிறிதும் இருந்ததில்லை.

அந்த முகத்தில், அந்தக் கண்களில் பணிவு இருந்தது; அன்பு இருந்தது; இவையெல்லாவற்றுக்கும் மேலாக, மிகவும் முக்கியமாக, நன்றியுணர்வு மிளிர்ந்தது.

போதனைக்கு நாம் வருவோமானால், குருதேவரிடம் மகிழ்ச்சி நிறைந்த, அழகு நிறைந்த விவேகம் நிறைந்த வழி இருந்தது. அவர், ''படைத் தளபதியை நீங்கள் தாக்க முடியாது. ஆனால் நீங்கள் படை வீரர்களைச் சமாளிக்கலாம். தன்னலம் என்பது உங்களைத் தாக்கவரும் தனி வீரன் அல்ல; ஆனால் அவன் ஒரு பரிவாரத்துடன், ஒரு பெரும் படையுடன் வருகின்றான். நீங்கள் நேர்மையாகவும், கவனமாகவும் இருந்தால் அப்படையில் உள்ள ஒருவர் அல்லது மற்ற உறுப்பினர்களை மிகவும் எளிதில் கண்டு பிடித்து விடலாம். பேராசை, காமம், சினம், அச்சம், புலனின்ப நாட்டம், விருப்பு, வெறுப்பு, பொறாமை, புகழ், ஆசை, அதிகார ஆசை, பதவி ஆசை, உயர் அந்தஸ்து ஆசை, செல்வ இச்சை ஆகிய இவை யாவும் தன்னலத்திலிருந்து முளைக்கின்றன — இவற்றைக் களைந்தெறிய வேண்டும்'' என்று கூறுவார்.

பரிவாரங்களுடன் கூட ஒருவர் எப்படிப் போராடுகிறார்? ஆசை, பேராசை, பொறாமை என்பவற்றின் பொருள் யாது என்று உங்களுக்கு எப்படித் தெரியும்? நீங்கள் அவற்றுடன் எப்படிப் போராடுவீர்கள்? இங்குதான் குருவின் பெருமை புலனாகிறது. குருதேவர் தம் சீடர்களுக்குத் தரும் பயிற்சியில்தான், உள்ளே உள்ள தீமை, தீய பழக்கங்கள், தீய எண்ணங்கள், தீய உணர்வுகள், தீய இயல்பு ஆகியவற்றுடன் போராடி வெற்றி கொள்ளும் மிகச் சிறந்த வழியை நாங்கள் காண முடிந்தது. குரு—சீடர் என்ற உறவு ஏற்படும்போதுதான் இவை யாவும் எளிதில் வெற்றி கொள்ளப்படுகின்றன.

மனித சமுதாயத்திற்கு ஞானி ஒருவர் செய்யக்கூடிய மிகப் பெரிய சேவை, தமக்குப் பின்னால் தம்முடைய பல உருவங்களை விட்டுச் செல்வதுதான். குருதேவர் ஒரு ஸ்பரிச வேதியாக இருந்தார்; அவர் தமது காந்த சக்தியால் எல்லா உலோகங்களையும் தம்பால் கவர்ந்து கொண்டு அவற்றையெல்லாம் தூய பசும் பொன்னாக மாற்றினார். அவர் கற்களை, விலை மதிப்பு மிகுந்த முத்துக்களாக மாற்றும் தந்திரம் படைத்திருந்தார்.

குருதேவரின் பாத தாமரைகளின் நிழலைத் தேடிய மக்கள் எல்லோருமே சிறந்த ஆன்மீகச் சாதகர்களாக இருக்கவில்லை. பலரும் நவநாகரிகத்தின் படைப்புக்களாக இருந்தனர்; அவர்கள் உலகத்தைத் துறப்பதற்கு முன்னே ஏற்கனவே உலக இச்சையால் கடியுண்டு, குணப்படுத்த முடியாத அதன் நஞ்சு ஏறியவர்களாக அவர்கள் இருந்தனர்; இவற்றுக்கு மேலாக, ரிஷிகேசத்துக்குச் செல்லும் பாதையில் இத்தகைய தீமைகளையெல்லாம் ஒவ்வொருவரும் களைந்தெறிய முடியாது. இவர்களுக்காகக் குருதேவர் செய்த எதிர்ச் செயல் யாது?

அவர் மிக மேன்மையான நன்மையின் கதிரவனாக இருந்தார்; தீமையின் நிழல்கூட அக்கதிரவன்முன் இருக்கவில்லை. புதிய சாதகர்களிடத்தில் இருந்த நன்மையை மட்டும் அவர்

பார்த்தார்; தீமையைப் பார்க்காத குருடராக இருந்தார். அன்பின் மிகத் தூய்மையான இந்த வடிவம் ஒருவரை எப்போதும் கண்டிக்க முடியாது; நற்பேறு இல்லாத தீமையின் அடையாளம் ஏதேனும் புலப்படுத்தும் ஒரு வரிடத்தில், இரக்கமற்றவராகக் கூட இருக்க முடியாது.

சீடர் ஒருவருடைய தவறு அவரிடம் முறையிடப் பட்டால், அவர் தம் கண்ணூரப் பார்த்திருந்தாலொழிய, அந்தப் புகாரை நம்ப அவர் மறுத்தார். நீங்கள் யாராவது ஒருவரைக் குறிப்பிட்டு அவரிடம் உள்ள சில தீய பழக்கங் களைச் கூறினல், அவர்பால் உள்ள நல்ல இயல்புகளைப் பற்றிய, தாமாகத் தயாரித்த ஓர் எதிர்மாறுன பட்டியலைக் காட்டுவார். முதலில் அவர் அதை ஏற்றுக் கொள்ள மறுத்தார். இரண்டாவதாக, அடுத்த சில நாட்கள், குருதேவர்; குற்றஞ்சாட்டப்பட்டவரிடம் தம் அன்பையும், நேசத்தையும் பொழிவார். அந்தப் புகார் இன்னும் நீடித்தால், அதில் ஏதோ உண்மை உண்டு என்று பொருள். தம்மிடமிருந்து பாயும் அன்பின் மிகப் பெரிய கதிரை உங்களிடம் அனுப்புவார்; அவருடைய பிடியில் நீங்கள் வந்துவிட்டீர்கள் என்பது அவருக்கு நிச்சயமானல், உங்கள் உள்ளம் முற்றிலும் வெல்லப்பட்டு விட்டதென்றல், அப் போது மட்டுமே அவர் மிகவும் மென்மையாக ஒரு குறிப்பை நழுவவிடுவார். ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள், மிகவும் மென்மையாக; அவர் தம் பேனவைக்கூட நழுவவிட மாட்டார். எனவே, இந்தக் குறிப்புக் கூட உங்கள் உள்ளத் தைப் புண்படுத்த அனுமதிக்கப்படமாட்டாது; ஏனெனில் குறைகூறிப் புண்படுத்தினல் அதற்கு எதிரான விளைவே ஏற்படும். நீங்கள் அதற்கு முரண்படும் எதிர்ப்பாளராக மாறி அறிவுரையை புறக்கணித்துவிடுவீர்கள். இப்படி நிகழ அவர் ஒருபோதும் அனுமதிக்க மாட்டார். ஒவ்வொரு வரிடமும் நிச்சயமாக உள்ள நன்மைப் பண்பின் பொருட்டுக் குருதேவர், தீங்கு நழுவிச் செல்ல ஒரு நீண்ட இடைவெளி யைத் தந்து, ஆன்மீகக் குடும்பத்தில் மேலும் ஒரு சகோதர ரைச் சேர்ப்பார்.

தமக்கே உரிய நல்ல பண்புகள் இல்லாதவர் இம்மண்ணுலகில் எவரும் இல்லை என்பது அவருடைய கருத்து. திருத்தப்பட முடியாதவர் யாரும் இல்லை. அவருடைய பார்வையில், நிலையான பாவி இல்லவே இல்லை. எங்கும் தெய்வத்தையும், தெய்வீகத்தையும் காண்பதாகிய அவருள் இருந்த இந்தப் பார்வையும், மேலான சக்தியும் அவருடைய ஆன்மீக ஆற்றலைப் பரவச் செய்தன; அனைவருள்ளும் உறங்கிக் கொண்டிருந்த நல்ல பண்புகளை அவை உடனடியாக விழித்தெழச் செய்தன; ஏற்கனவே நல்ல பண்புகள் இருப்பவரிடத்தில் அவற்றை வலிமை மிக்கனவாகச் செய்தன. நலம் பெறுபவர்கூட இதைப்பற்றிப் பெரும்பாலும் தெரிந்து கொள்ளாமல் இருந்தார், ஆன்மீகச் சாதகர்களிடத்தில் குருதேவர் மிகப் பெரும் அளவில் அனுசரித்துப் போகும் தம் இயல்பை வெளிப்படுத்தினர்; இது அவருக்கு இயற்கையான மனப்பான்மையாக இருந்தது. மக்களை அருளாளராக உருவாக்கும் பணியில் எந்த ஒரு தியாகமும் மிகப் பெரிது அன்று.

பொருந்தா உணவை உண்பது போன்ற, மேலோட்டமான குறைபாடாக இருந்தால், சாதகர், ஆன்மீகச் சூழ்நிலையில் அதை மிக விரைவில் வெற்றி கொள்ளுவார். மற்ற சிறிய பலவீனங்கள் அல்லது ஆடம்பர ஆசையினல் சாதகர் கவரப்பட்டவராக இருந்தால்; குருதேவர் தாமே அவ்வசதிகளைச் செய்து தருவர்; பெரிய வீழ்ச்சி இவ்வாறு தடுக்கப்படுகின்றது; சாதகர் கூடிய விரைவில் அல்லது சிறிது காலந் தாழ்ந்தாவது பலவீனத்தை வெற்றிகொண்டு ஆடம்பரத்தைக் கைவிடுவார் என்ற நம்பிக்கையுடன் அவர் இவ்வாறு செய்வார், ஆன்மீகப் பயிற்சியில் அவர் மிகப் பெரும் நிலைக்கு உயர்வதைத் தடுக்கும் அளவுக்கு, அது ஆழப் பதிந்திருந்தாலும் கூடக் குருதேவரின் தெய்வீகக் கரங்களில் அவர் ஒரு கருவியாகச் செயல்படுவார்; அச்செயல் ஆயிரக் கணக்கானவர்களை உயர்த்திவிடும். உலகத்தாரால் இகழப்பட்ட அதே மனிதரைக் குருதேவர் ஏற்றுக் கொண்டு, மிகவும் நன்மை பயக்கும் ஒரு குடிமகனுக

அவரை மாற்றிவிடுவார். இதை நிறைவேற்றும் மந்திரக் கோல் — உங்கள் கவனத்தையெல்லாம் நன்மையின்மீது ஒருமுகப்படுத்துவதும் அதைப் பெருக்குவதுமேயாகும். இதில் தொடர்பு கொள்ளும் ஒவ்வொருவருக்கும் இலாபம் மட்டுமே இருக்கின்றது. ஒரு மனிதனிடத்தில் உங்களுக்குத் தென்படும் தீமையைச் செய்ய அவனைத் தூண்டிவிடுவது மிகப் பெரிய இழப்பாகும். குருதேவர் ஒருபோதும் அதைச் செய்ததில்லை, பேயினிடத்தில்கூட அவர் மிகவும் நல்ல வேலையை வாங்குவார்.

ஓர் உதாரணங் கொண்டு குருதேவர் அடிக்கடி இதனை விளக்குவார், "முட்செடிகளின் அருகே நீங்கள் நடந்து செல்லுகிறீர்கள்; திடீரென்று ஒரு புயற்காற்று வீசுகின்றது; உங்கள் தோள்களைச் சுற்றிலும் நீங்கள் அணிந்திருந்த சால்வை செடிகளில் அகப்பட்டுக் கொள்கிறது. நீங்கள் எளிதில் அதை இழுக்க முடியாது. இழுத்தால் உங்கள் சால்வை கிழிந்து போகும். நீங்கள் நடப்பதை நிறுத்திக் கொண்டு, மிகவும் மெதுவாக ஒவ்வொரு முள்ளிலிருந்தும் சால்வையை விடுவிக்க வேண்டும். தம்மிடம் உள்ள தீய இயல்பை வெற்றி கொள்வதற்கு இத்தகைய பொறுமை மிகவும் இன்றியமையாதது". குருதேவரே இத்தகைய அற்புதமான, நேரடியான, இந்த மனப்பான்மையைப் பெரும்பாலும் ஒவ்வொரு நாளும் செய்கையில் வெளிப்படுத்திக் காட்டினர். குருதேவருடன் நீங்கள் இரண்டாண்டுகள் வாழ்ந்திருந்தால் சாதகர்களை அவர் எப்படிப் பயிற்றுவிக்கின்றார் என்பதைப் பார்த்து நீங்கள் மிகவும் ஆச்சரியப்படுவீர்கள்.

மிகப் பழங்காலத்தில் சாதகர்கள் துறவு, விவேகம், வைராக்கியம் என்னும் பொலிவு மிக்க நெருப்புடன் குருவிடம் அடைக்கலம் புகுவர்; அவர்களைப் போலவே, இக்காலத்தில் முதல்தரமான சீடர்கள் குருதேவரின் பாத தாமரைகளில் அடைக்கலம் புகுந்தனர். அவர்கள் தெய்வீக மெய்யுணர்வில் நிலைபெற்று விடுவார்கள்; அதற்குக் குருதேவரின் ஒரு பார்வை மாத்திரமே போதும்; அல்லது

அவருடைய புனிதமான உதடுகளிலிருந்து வெளிப்படும் ஒரு வார்த்தை மாத்திரமே போதும். அவர்கள் சிலரே. குருதேவர் யார் யாருடன் பணி செய்தாரோ அவர்களில் மிகப் பெரும்பான்மையோர் சஞ்சல மனமுள்ள சாதகர்களே; அவரிடம் சிறிது பயிற்சி பெற்ற பின்னர், ஆன்மீக அனுபவத்தில் மிக உயர்ந்த உயரங்கள் அவர்கள் ஏறிச் செல்ல முடியும். ஆனால் கடைத்தேற முடியாத சாதகர்கள்கூட அவருடைய எல்லையற்ற மன்னிக்கும் தன்மையாலும், முடிவில்லாத பொறுமையாலும், வரம்பற்ற தருமத்தாலும், மிகவும் மேலான அன்பினாலும் விரைவில் மாற்றப்பட்டார்கள். அதிகாரி பேதம் (சாதகர்களைத் தகுதிக்கேற்றவாறு வகைப்படுத்தல்) அருளாளர்களாக அவர்களை மலரச் செய்வதில் விரைவான ஆட்சி செலுத்தக் கூடும்; ஆனால் குருதேவர் அளந்த அளவுகோல் நிச்சயம் அதுவன்று. அவர் தாமே அவர்களின் உள்ளங்களில் வைராக்கிய விதைகளைப் பெரும்பாலும் விதைத்தார். ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்த ஓர் இளைஞரிடம் குருதேவர் மேற்கொண்ட முயற்சியைக் காட்டிலும் நீங்கள் உங்கள் புதல்வனுக்கு வைராக்கியத்தை ஊட்டுவது மிகவும் எளிதாக இருக்கக் கூடும். குருதேவரின் உள்ளம் யாவும் அன்பே நிறைந்திருந்தது; பேரின்பமாகிய மோட்சத்தை (விடுதலை) அடைவதற்காகக்கூட அவர் சாதகர்களுக்குச் சிறுதுன்பமும் இழைக்கமாட்டார்; சிறிதளவு துயரமும் அடைய இடம் தரமாட்டார்; பட்டினிகிடந்து நோன்பு நோற்குமாறும் ஆணையிடமாட்டார்.

சாதகர் சந்திக்க வேண்டியுள்ள இன்னல்களைப்பற்றிக் குருதேவர் மிகைப்படுத்திக் கூறுவதை நானே கேட்டிருக்கின்றேன். அவர் ''மனம் என்பது எவ்வளவு மர்மம் நிறைந்ததாகவுள்ளது! அதை எப்படிக் கட்டுப்படுத்துவது? மேலும், இவை எல்லாவற்றுக்கும் மேலாக இடையறு முயற்சியுடன் ஆன்மீகப் பயிற்சியிலும், ஆழ்ந்த தியானத்திலும் மனிதன் தன்னை எப்படி ஈடுபடுத்திக்கொள்வது? மனிதன் ஒருவன் தன் வாழ்நாளில் சேவைக்குரிய சில நல்ல செயல்களைச்

செய்திருந்தாலும், அல்லது அவன் ஒருநாள் ஒருபொழு தேனும் இறைவனுடைய திருநாமத்தை உச்சரித் திருந்தாலும்கூட, இறைவன் இத்தகைய எல்லோருக்கும் முக்தியளிக்க வேண்டும் என்று கருதுகின்றேன்'' என்று கூறுவார். மனித சமுதாயத்தின் விதிகளை நிர்ணயிக்குமாறு தெய்வங்களின் ஆட்சியுலகங்களில் குருதேவர் தலைவராக நியமிக்கப்பட்டிருந்தால் (வின்ஸ்டன் சர்ச்சில் கூறிய சொற் களின்படி) சாம்ராஜ்ஜியம் இனி இல்லை என்று ஆகிவிடுமாறு அவர் தலைமை தாங்கியிருப்பார். அந்தச் சாம்ராஜ்ஜியம் என்பது மாயை. (அறியாமை அல்லது இறைவனின் மயக்கும் சக்தி). அது கலைந்துபோய்விடும்; அவர் ஒவ்வொருவருக்கும் முக்தியளித்து விடுவார்.

சாதகர் இருவரிடையே தவறான எண்ணம் அல்லது சச்சரவு இருந்தால், குருதேவர் பெரும்பாலும் இருவரையும் சமாதானப் படுத்துவார்; ஆனால் சில சமயங்களில் அவர் களில் ஒருவர் ஆசிரமத்தை விட்டுச்செல்ல விரும்பக்கூடும். சாதகர், தம்முடைய பாதையிலிருந்து வழுவிச்செல்வதைத் தடுக்கவோ அல்லது அவர் தம் வழிக்கே திரும்பி வரவோ குருதேவர் தம்மால் முடிந்த எதையும் செய்வார். அவர் மன்னிக்காத குற்றமோ அல்லது பாவமோ எதுவும் இல்லை. சாதகர்களிடம் அவர் அடிக்கடி, ''சாதனைச் செல்வத்தின் சிறு அளவைக்கூடச் சம்பாதிப்பது மிகமிகக் கஷ்டம்; அதை இழப்பதோ மிகமிகச் சுலபம். ஒரு பந்தை அடித்தவாறே மாடியின் படிக்கட்டுக்களில் மிகுந்த முயற்சியுடன் கொண்டு செல்வதைப் போன்றது; சில விநாடிகள் தவர்த்திருந்தாலும் அது தரைமட்டத்தை நோக்கி மிக விரைவில் படிகளைத் தாண்டித் தாண்டித் திரும்பி வந்து விடுகின்றது'' என்று கூறுவார்.

ஒரு சாதகர் ஞானியொருவர் தம்முடைய ஆளுமையைச் செதுக்கி உருவாக்குவதற்கு இணங்க வேண்டும்; நிச்சயம் அவரே உண்மையில் அருளுக்கு உரியவர் அல்லது அவர் தம் பலவீனத்தை வெளிப்படுத்தலாம்; தமக்கு நலஞ்செய்பவருக்கு எதிராகக்கூட அவர் அத்துமீறலாம்.

குருதேவருடைய பொறுமை அடிக்கடிக் கடுமையாகச் சோதிக்கப்பட்டது. கையாள முடியாத ஒரு மூலப் பொருளின் திரட்சியாக உள்ள சாதகரை நல்ல வடிவுடன் மிளிரும்படியாக உருவாக்கக் குருதேவர் முயற்சி என்னும் உளியுடன் செயல்படுவார்; ஆனால் மூடத்தனம் மிகுந்த சாதகரோ, பிறப்பிலேயே தாம் ஒரு ஞானி என்று தவறாகக் கருதிக் கொண்டு அவரை வெறுத்து ஒதுக்குவார். இத்தகைய நடத்தையால், பாசத்துக்கு உரிய ஒரு புதல்வன் தன் தந்தைக்கு அடிக்கடி சினம் ஊட்டுவான்; ஆனால் குருதேவர் உளி கொண்டு செதுக்குவதாகிய முயற்சியை மட்டும் நிறுத்தி வைப்பார்; அறிவில்லாத அம்மனிதரிடம் அன்பைப் பொழிவார்; அவர் தாமே உணர்ந்து திருந்தும் வரையில் காத்திருப்பார். அந்த இளைஞர் குருதேவரின் பாதுகாப்பு நிறைந்த நிழலைவிட்டுக் கூடச் செல்வதுண்டு; ஆச்சரியப்படத்தக்க வகையில், அச்சாதகரை உருவாக்கு வதில் பெரும் ஆர்வத்துடன் ஈடுபட்ட குருதேவரும் வெளிப் படையாக, வழி தவறிய சாதகரைப் போலவே கவலையற்று இருப்பார்; அவர் ஆணவம், சினம் அல்லது பேராசை ஆகியவற்றுக்கு ஆளாகி, பல ஆண்டுகள் பொறுமையாலும் இடையறாத உழைப்பாலும் உருவாக்கிக் கட்டப்பட்ட அழகிய கட்டிடம் இடிந்து வீழ்ந்து ஒரு கணத்தில் தரைமட்ட மாவதுபோல அவர் தம் அழிவைத் தேடிக் கொள்ளுகின்றார். குருதேவர் அவற்றை எல்லாம் உடனே மறந்துவிட்டவர் போல் காணப்படுவார்; ஆனால் உண்மையில் அப்படியல்ல. இதன் பிறகுதான் குருதேவர் மிகப் பெரிய அற்புதத்தைச் செய்வார். சாதகர் செல்ல அமைதியாக விடை தருவதற்கு முன்பு, குருதேவர் அச்சாதகரைச் சுற்றிலும் கண்ணுக்குப் புலனாகாத பாதுகாப்பு கவசத்தை யாரும் தடுக்க முடியாத வகையில் தம் நல்லாசிகளுடன் பரப்புவார்; இக்கவசம் சாதகரை என்றேனும் ஒரு நாள் நிச்சயம் திரும்பக் கொண்டு வந்து சேர்க்கும். அச்சாதகர் இவ்வுலகில் வேறு எங்கு இத்தகைய குருவைப் பெற முடியும்? அகில புவனங் களிலும், வேறு எங்கு ஒரு குரு இவ்வாறு சேவை செய்வார்? இவ்வுலகில் வேறு எங்கு ஒரு குரு தம் சீடரின் விருப்பத்துக்குக்

கீழ்ப் படிவார்? குருதேவரின் அருள் சந்நிதானம் என்னும் குளிர்ச்சி மிகுந்த ஒளி, அளவு மீறி அனுசரித்துப் போதல் என்னும் காரணத்தால் தன் பெருமையை வெளிப்படையாகவே இழந்தது, பாலைவனச் சோலையை அல்ல. இறைவனின் பாத தாமரைகளாகிய பேரின்பத்தை உண்மையில் அடைவதற்கு அச்சாதகர் இன்னும் சில பாடங்களைக் கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது; சுட்டுப் பொசுக்கும் வெயில், உலகமென்னும் சுடு மணற் பரப்பில் இன்னும் சில அடிகள் முன்னே நடக்க வேண்டியிருந்தது. அவர் நிச்சயம் திரும்பி வருவார்.

ஒரு துறவி, வயது முதிர்ந்தவரல்ல எனினும், எங்களுக்கெல்லாம் மூத்தவராக இருந்தவர், சில தொல்லைகட்குப் பின்பு ஆசிரமத்தை விட்டு வெளியேறினார். சில ஆண்டுகளுக்குப் பின்பு, 1948-ல் துர்க்கை பூஜை விழாச் சமயத்தில் திரும்பி வந்தார். குருதேவர் சாலையோரத்தில் அமர்ந்திருந்தார்; நான் அவரருகே செல்ல நேர்ந்தது; அவர் என்னை அழைத்து. ''அந்தச் சுவாமி......திரும்பி வந்து விட்டார், உங்களுக்குத் தெரியுமா'' என்று வினவினார். ஒரு கண்ணை மூடிக் கொண்டவராக, ''அவர் ஒரு பெரிய மகான்......... அவரைப் பற்றி ஒரு நீண்ட கதை உள்ளது''. என்று அவர் தெரிவித்தார். அவர் கதையைச் சொல்லவோ, நிந்தையைப் பரப்பவோ விரும்பவில்லை. நான், ''ஆம்! சுவாமிஜி! நான் அதைப்பற்றிக் கேள்விப்பட்டேன்'' என்று கூறினேன். இப்போது உடனே, திடீரென்று, நாடகப்பாங்குடன் அவர் மாறினார். அவர், ''அதெல்லாம் முன்புதான்; முன்னர் அவர் ஒரு தீய மனிதராக இருந்திருக்கக் கூடும். இப்போது அவர் முற்றிலும் மாறிவிட்டார். தீயவர் ஒருவர் நல்லவராக மாறலாம்'' என்று கூறினார். கூடவே, ''நாம் அவருக்கு இன்னொரு வாய்ப்பைத் தருவோம்; இங்கே தங்கும்படியாக நான் அவரைக் கேட்டுக் கொண்டுள்ளேன்'' என்று தெரிவித்தார்.

'மன்னியுங்கள்; மறந்துவிடுங்கள்' என்று மக்கள் அடிக்கடி வழக்கமாகக் கூறுகின்றனர்; இது மிகவும் எளிதாகக்

சொல்லப்படுகின்றதே தவிரப் பெரும்பாலும் பின்பற்றப் படுவது அரிதாக இருக்கின்றது. குருதேவர், எப்போதும் பழுதுபடாத ஒரே ஒரு வழியைத்தான் வழக்கமாகப் பின் பற்றினர். ' 'நீங்களாக முடிவு செய்ய வேண்டாம்; எல்லா முடிவுகளேயும், அவை எத்தகையனவாக இருப்பினும், நிறுத்தி வையுங்கள். நீங்கள் ஏற்றுக் கொள்ள முடியாத எதையாவது அவர் செய்தால், அப்போது தகுந்த நட வடிக்கை எடுங்கள்; ஆனல் அவர் தாமாக அக்குற்றத்தைச் செய்யவில்லே என்பதை உணருங்கள்''.

மற்ருெரு நிகழ்ச்சியில் அவர் இருவழிப்பாதையைக் குறிப்பிட்டார். ''இந்தியாவில் ஆசிரமங்களும் ஞானியரும்'' என்ற ஒரு நூலே அவர் எழுதிக் கொண்டிருந்தார். அதில் அவர் புனிதம்மிகுந்த ஒருவரின் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாகத் தரவேண்டியிருந்தது; துறவு பூண்ட பிறகு அவர் மணம் செய்து கொண்டார். ஒரு துறவி செய்யக் கூடிய பாராட்டத்தக்க செயல், இதுவன்று. குருதேவர், ''அவர் மிகவும் பெருமை வாய்ந்தவர்; ஆனல் சிறுமையில் வீழ்ந்து விட்டார். ஆனல் நல்லவர் தீயவராதலும், தீயவர் நல்லவராதலும் உண்டு. நாமாக ஒரு முடிவைச் செய்யக் கூடாது'' என்று குறிப்பிட்டார். அத்துறவியின் வாழ்க்கை வரலாறு நூ லி ல் சேர்க்கப்பட்டது. இருவழிப்பாதை சாத்தியம் என்று நீங்கள் கண்டு கொண்டால் நீங்கள் விழிப்புள்ளவராகிறீர்கள்; தொடர்ந்து நிலேயான விழிப்புள்ள வராக விளங்குகிறீர்கள். இத்தகைய மக்களேப்பற்றிக் குருதேவர். வேடிக்கைக்காகக்கூட, இகழ்ந்து பேசியதை நான் ஒருபோதும் கேட்டதில்லே.

இத்தகைய சாதகர் ஒருவர் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தால் குருதேவர் அவரை, அவர் ஆசிரமத்தைவிட்டு ஒரு போதும் செல்லாமல் அதன் உறுப்பாகவே இருப்பவரைப் போல நடத்துவார். ஆம்! உண்மையில் அவர் அப்படித் தான் இருந்தார்; அவர் எந்த இடத்தில் இருந்திருந்தாலும், அவர் எப்போதும் குருதேவரின் உள்ளத்தில் இருந்தார். சுவாமிஜி மகிழ்ச்சிக் கூத்தாடி அனேவர் முன்னிலேயிலும்

அவரைப் பெருமைப்படுத்துவார்; ஏனெனில் குருதேவரின் மேலான அன்பின் வெற்றிக்கு இவர், உயிர் வாழும் ஒரு சான்றாக விளங்குகின்றார். சாதகரும், குருதேவரின் வருணிக்கமுடியாத பெருமையைப் பாராட்டும் பெருநிலைக்கு உயருகின்றார். அவருடைய கருணையைப் பெரும் அளவில் வாங்கிக்கொள்ள மனந்திறந்தவராக விளங்குகின்றார்.

குற்றவாளிகள், பாவிகள் ஆகியோரிடத்தில்கூடக் குருதேவர் பெரு நம்பிக்கை வைத்திருந்தார். தீய இயல்புகளே நிரம்பியுள்ள குற்றவாளி, தெய்வீகத்தை நோக்கி முதலடி எடுத்து வைக்கக்கூடத் தன்னால் சாத்திய மல்ல என்பதைக் கண்டு கொள்கிறார் என்ற உண்மையை அன்பின் அவதாரமாக இருந்த குருதேவர் புரிந்து கொண்டிருந்தார்,

எம்பெருமானே! உங்களிடம் நாங்கள் அடைக்கலம் புகும்வரைகூட நீங்கள் காத்திருப்பதில்லை. உங்களின் இனிய பாடல்களாலும், உணர்வு ஊட்டும் சொற்பொழிவு களாலும், அன்பான உரையாடல்களாலும், நிகரற்ற நகைச் சுவையாலும் எங்களைக் கவர்கின்றீர்கள். மகிழ்வூட்டும் படங்களாலும், திரைப்படங்களாலும், சுவையுள்ள பிரசாதங்களாலும் (இறைவனுக்குப் படைக்கும் இனிய நைவேத்தியங்கள்), சத்துள்ள தூய உணவாலும், வசதிகள் நிறைந்த, கவலையற்ற வாழ்வாலும், நீங்கள் உண்மை யாகவே எங்களை உங்களிடம் இழுத்துக் கொண்டீர்கள். எங்களிடமிருந்து நீங்கள் எதுவும் பெறுவதில்லை; ஆனால் எப்போதும் எங்களுக்குத் தருகிறீர்கள்; தந்து கொண்டே இருக்கிறீர்கள். எங்களுடைய இடையூறுகளைப் புரிந்து கொள்ளுகிறீர்கள்; எங்கள் பலவீனங்களைப் பற்றிப் பரிதாபப்படுகிறீர்கள்; நாங்கள் தவறி விழாதவாறு உங்கள் கரங்களில் எங்களைப் பற்றியவாறு முன்னே அழைத்துச் செல்லுகிறீர்கள். எங்களுக்குப் பக்தியை ஊட்டுகிறீர்கள். வைராக்கியம் பெறுமாறு எங்களுக்கு உணர்வு ஊட்டு கின்றீர்கள். எங்கள் இதயங்களில் விவேகம் என்னும் சுவாசத்தை ஊட்டுகின்றீர்கள். ஆம்! தங்களின் சீடர்கள்

விவேகமும், திறமையும் நிரம்பியவர்களாக இருப்பதை உலகம் ஒருநாள் காணத்தான் போகின்றது; ஆனால் இந்த அற்புதத்தைச் செய்யத் தாங்கள் அளவற்ற மெய்வருத் தங்களைத் தாங்களாகவே விரும்பிச் சுமந்ததை உலகம் சிறிதளவும் உணராது. நல்ல மேய்ப்பராகிய தங்களுக்கு அது ஒரு வருத்தமே அல்ல. காணமற்போன ஆட்டின் பின்னால் அதைத் தேடி ஓடுவதிலே தாங்கள் உண்மையான மகிழ்ச்சியை அடைந்தீர்கள். எம்பெருமானே! எங்களை முன்னே வழிநடத்திச் செல்லுங்கள்! தங்களின் பாத தாமரைகளை நோக்கி முன்னேறும்படியாக எங்களை வழி நடத்திச் செல்லுங்கள்!

---

## மூன்றும் அத்தியாயம்

## அனைவருள்ளும் இறைவனைக் காண்க

பக்தியோகம் என்பது என்ன? 'பக்தி' என்னும் சொல், இறைவனிடம் ஈடுபாடு கொண்டிருப்பது, இறைவனை நேசிப்பது, அல்லது இறைவனிடம் சரண்புகுவது என்று பொருள்படும். குருதேவருக்கு மிகவும் விருப்பமான பேச்சு, ''ஒவ்வொருவருடைய முகத்திலும் இறைவனைக் காண்க; அனைவருள்ளும் இறைவனைக் காண்க; அனைவருள்ளும் உறையும் இறைவனுக்குச் சேவை செய்க'' என்பதாம். மானிட வடிவில் உள்ள இறைவனின் அவதாரமாகிய குரு தேவர், இவ்வுலகில் மீண்டும், மீண்டும் பிறப்பேன் என்ற வாக்குறுதியை நிறைவேற்ற இங்கு அவதாரம் செய்தார்; தீமையை வெல்வதும், நல்லறத்தைப் பாதுகாப்பதும், தருமத்தை நிலை நாட்டுவதும் அவதாரத்தின் நோக்கம். நமக்கெல்லாம் மதிப்பில் உயர்ந்தனவும், நடைமுறைப் பயிற்சிக்கு உகந்தனவும் ஆகிய போதனைகளை அவர் வழங்கினார். நாம் கண்காணிக்கவும், போற்றவும், பின் பற்றவும், நம் பொருட்டு, மானிடச் சட்டை சாத்திய

தெய்வம், ஆன்மீகப் பயிற்சிகளை மேற்கொண்டார். நாராயண பாவம் என்பது அவருக்குச் சுபாவம். (இறைவன் எல்லா உயிர்களினுள்ளும் உறைகின்றான் என்ற மனப் பான்மை அவருக்குப் பிறவியில் அமைந்த இயல்பாகும்). ஆதலால், நாராயண பாவத்தை (இறைவன் எங்கும் நிறைந் துள்ள உண்மையை உணர்தல்) வளர்த்துக் கொள்ளவும், அதை நிலையாகப் பேணவும் நமக்குக் கற்றுத் தருவதற்கு அவரே மிகச் சிறந்த தகுதி பெற்றவராவார்.

## மந்திரம் உச்சரித்தல்

மக்கள் ஒரு மந்திரத்தை, இறைவனுடைய திருநாமத் தை, உச்சரிப்பதைப் பற்றி அவர் அளவு மீறிய, அதீதமான பிரியம் கொண்டிருந்தார் என்பதை, நீங்கள் குருதேவரைச் சந்தித்திருந்தால் — நீங்கள் சந்தித்த நேரத்தைப் பொறுத் தது — நீங்கள் நன்கு உணர்ந்த பிறகே அவரிடமிருந்து விடை பெற்றிருப்பீர்கள். இது உண்மையே, இது அவரு டைய ஜீவாதாரச் சக்திகளில் ஒன்று என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஒவ்வொரு நாளும் முதியவர்களும், இளைஞர் களும் ஆகிய பலரும் ரிஷிகேசத்தில் உள்ள ஆசிரமத்திற்கு வருவார்கள்; மிகவும் சுலபமான ஒரு வினாவைக் கேட்பார் கள். ''நான் யோகம் பயில விரும்புகின்றேன். நான் ஆன்மீக வாழ்வை நடத்த விரும்புகின்றேன். முதலில் நான் என்ன செய்ய வேண்டும்?'' இறைவனைப் பற்றிய மிகச் சிறந்த கொள்கைகளைப் பற்றியும்; நான், நான் அல்லாதது; என்பதைப் பற்றியும் சுற்றி வளைத்துப் பேசாமல், குருதேவர்; ''இறைவனுடைய திருநாமத்தை, ராம நாமத்தை உச்சரி யுங்கள்'' என்று கூறுவது வழக்கம். தங்களைச் சீடர்களாக ஏற்றுக்கொள்ளுமாறு அவரிடம் வந்து வேண்டுவோர் பலரும் பலவகையான இயல்புகளைக் கொண்டிருந்தனர்; பல்வேறு மதங்களைச் சார்ந்தவர்களாக இருந்தனர். ஆனால் சொல் லப்படும் விடை எப்போதும் ஒன்றாகவே இருந்தது. ''நான் உங்களுக்கு ஒரு மந்திரம் சொல்லித் தருகிறேன். அதை இரவும், பகலும் எப்போதும் உச்சரியுங்கள்''. இந்த விடை

யைச் சொன்ன அவர் தொடர்ந்து கேட்கும் வினு, 'நீங்கள் என்ன விரும்புகிறீர்கள், தேநீரா, காப்பியா?'' மேற் கொண்டு கேள்வி கேட்பதோ, தர்க்கம் செய்வதோ, ஊக்கு விக்கப்படவில்லை. ''இ றை வ ன் என்ருல் என்ன? இறை வனைப் பற்றிய தங்கள் கருத்து யாது?'' ஊ க் க த் து க் கு இடந்தரும் இத்தகைய பேச்சுக்களையெல்லாம் குருதேவர் தவிர்த்தார்.

யாரேனும் ஒருவர், ஓர் அறிஞர் அங்கே காட்சி தந்து உயர்ந்த தத்துவத்துக்குரிய, சமய உண்மைக்குரிய வினவைக் கேட்டால், என்ன நிகழும்? ஒரு முறை, 1947-ல் ஒருநாள் காலை 8 மணி அளவில் கற்றறிந்த ஒருவர் எங்கள் அலுவலகத் திற்கு வந்து சுவாமி சிவானந்தரிடம், சவிகல்ப சமாதிக்கும் நிர்விகல்ப சமாதிக்கும் உள்ள வேறுபாட்டை விளக்குமாறு கேட்டார். இத்தகைய வினவைக் கேட்க நாங்கள் ஒரு போதும் துணியமாட்டோம் என்ருலும், அப்போது அலுவல கத்தில் பணி செய்து கொண்டிருந்த நாங்கள் மூன்று பேரும் ஆவலுடன் ஏறெடுத்துப் பார்த்தோம். ஏதோ பணியில் ஈடுபட்டிருந்த சுவாமிஜி, உடனே பேனவைக் கீழே வைத்து விட்டு, வந்திருந்த விருந்தினரைப் பார்த்தார். இரண்டு நிமிடம் வரையில் முற்றிலும் மௌனம் நிலவியது; பின்னர் குருதேவர், ''அன்பரே! வருக! வருக! நீங்கள் என்ன பருக விரும்புகிறீர்கள், பாலா, தேநீரா அல்லது காப்பியா'' என்று கேட்டார். உங்கள் வினவுக்குக் குருதேவர் விடை தருவதற்கு முன்னர், முதலில் அவர் கேட்கும் வினவுக்கு நீங்கள் விடை தர வேண்டும். எனவே அப்பேராசிரியர், ''சு வா மி ஜி! சிறிது காப்பி பருகலாம் என்று கருது கின்றேன்'', என்று விடை தந்தார். சுவாமிஜி ''கூடவே சில பழங்கள், சில இட்லி இருக்கட்டுமா?'' என்ருர். (இட்லி என்பது தென்னிந்தியர் காலையில் உ ண் ணு ம் உணவு) ''ஆம், சுவாமிஜி!'' என்ருர் அவர். இவையெல்லாவற் றையும் கொண்டு வருமாறு குருதேவர் ஒரு சீடரிடம் தெ ரி வி த் தா ர். பின்னர் குருதேவர் இன்னெருவரிடம், ''டாக்டருக்காகச் சில புத்தகங்கள் கொண்டு வாருங்கள்''

என்று கூறினார். இவ்வாறு பத்து நிமிடங்கள் கழிந்தன. இதற்கிடையில் காலை உணவும் காப்பியும் வந்து சேர்ந்தன. பேராசிரியருக்கு எவ்வாறு படைக்க வேண்டும் என்று பணியாளிடம் குருதேவர் விளக்கிச் சொல்லிக் கொண்டிருந்தார். இதற்கிடையில் பேராசிரியரின் துணைவியார் அவரை எதிர் பார்த்துக் கொண்டிருந்தார். பேராசிரியர் காப்பி மட்டுமே பருக வந்தார். சில நிமிடங்களுக்குப் பின் அந்த அம்மையார் உள்ளே வந்தார்; கடுமையாக அவரைப் பார்த்து, ''இன்னும் எவ்வளவு நேரம் இங்கே தங்கப்போகிறீர்கள்? எழுந்து வாருங்கள், நாம் போவோம்'' என்று அதட்டினார். பேராசிரியர் மிகவும் பணிவோடு எழுந்து சென்றார். அவர் சென்ற பிறகு குருதேவரிடம் சிரிப்பு வெளிப்பட்டது. வயிறு முழுவதும் குலுங்கும்படியாகச் சிரித்துச் சிரித்து ஓய்ந்து தம் கண்ணைத் துடைத்துக் கொண்டு, ''சவிகல்ப சமாதிக்கும் நிர்விகல்ப சமாதிக்கும் உள்ள வேறுபாட்டைத் தெரிந்து கொள்ள இவர் விரும்புகின்றார்; மனைவி இவரை ஒரு பார்வை மட்டும் பார்த்து ''எழுந்திருங்கள், எழுந்திருங்கள்'' என்று சொன்னதும், எழுந்திருந்து அமைதியாகப் பின் தொடர்ந்து செல்கிறார்'' என்று கூறினார்,

வெறும் தர்க்கம் செய்வதில் குருதேவருக்கும் பொறுமை இல்லை. அவருடைய செய்தி, ''ராம நாமத்தை உச்சரியுங்கள். இறைவனுடைய திருநாமத்தை ஜெபம் செய்யுங்கள். அப்போது, இத்தகைய வினாக்களுக்கெல்லாம் உரிய விடைகளை நீங்களே உங்களின் உள்ளத்தில் கண்டுபிடிப்பீர்கள்'', என்பதாகும்.

இதை அனைவரும் நன்றாகத் தெரிந்து கொள்ளுமாறு நடைபெற்ற மற்றொரு நிகழ்ச்சி ஏற்பட்டது. மிகவும் புகழ் பெற்ற அரசியல் தலைவர் ஒருவர் ஆசிரமத்திற்கு வந்து, அமர்ந்து, இன்றைய உலகச் சூழ்நிலையில் உள்ள இந்தியா எப்படி இருக்கின்றது என்று தம் கண்ணோட்டத்தில் பட்டவாறு அமைந்த இந்தியாவின் படத்தை சுவாமிஜிக்கு அன்பளிப்பாக வழங்கினார். அவர் நாற்பத்தைந்து நிமிடம்

பேசினார். தம் பேச்சைக் கேட்க அவர் விரும்பிய அவை யினரின் எண்ணிக்கை சுவாமி சிவானந்தர் ஒருவர் மட்டுமே. குருதேவரின் பொறுமை மிகவும் பாராட்டத்தக்கதாகும். குருதேவர் தம் முழங்கைகளை மேசையின் மீது ஊன்றிய வராக விருந்தினரின் கண்களை நேராகப் பார்த்துக் கொண்டும், அவருடைய பேச்சைக் கேட்டுக்கொண்டும் இருந்தார். அரசியல்வாதி, உலகச் சூழ்நிலைபற்றித் தெளி வான அழகிய சுருக்கத்தைத் தந்தார். தம் பேச்சை முடித்த தும் அவர் குருதேவரைப் பார்த்த பார்வை, ''நன்று. தங்கள் அறிவுரை யாது? இச்சிக்கல்களை எல்லாம் தீர்ப்ப தற்குத் தாங்கள் கூறும் வழி என்ன?'' என்று கேட்பது போல இருந்தது. இப்போது பந்து குருதேவரின் அரங்கில் இருந்தது. அவர் வேறு யாரையோ பார்த்தார்; ஆம், அவர் வேறு யாரையோ பார்த்தார். வறுமை, பசிப்பிணி, மக்கள் தொகைப் பெருக்கம், அடக்கப்படல், ஒடுக்கப்படல், உற்சாகம் இன்மை, இறுக்கம் — இப்படி உள்ள எண்ணற்ற குறைகள் இவற்றைத் தீர்க்க வழி என்ன? அவருடைய மறு மொழி மிக அழகாக அமைந்தது. அவர், ''பகவானுடைய திருநாமம் மட்டுமே, இறைவனுடைய திருநாமம் மட்டுமே இதற்கு மருந்து ஆகும். இறைவனுடைய திருநாமத்தை உச்சரியுங்கள்''. என்று கூறினார். பாவம்! அந்த அரசியல் வாதி தாம் ஏமாந்தது போல உணர்ந்தார் என்று கருது கின்றேன். அவர் எதிர்பார்த்தது, குருதேவர் தம்மிடம், ''நீங்கள் பிரதம மந்திரி ஆகவேண்டும். அல்லது புதிய கட்சியை உருவாக்க வேண்டும். மாற்றுங்கள்; ஒத்து வராவிடின் அழித்து விடுங்கள்'' என்பது போன்றவை யாகும். ஆனால் குருதேவரோ, ''இறைவனுடைய திரு நாமத்தை உச்சரியுங்கள்'' என்று விடை தந்தார்.

குருதேவர் இதை இலட்சம் தடவை கூறியுள்ளார். அவரைப் பொறுத்தவரைக்கும் எல்லாச் சிக்கல்களுக்கும் இதுவே தக்க வழி. எல்லாச் சிக்கல்களுக்கும் இதுதான்வழி. எதுவாயினும் சரி. இறைவனுடைய திருநாமத்தை உச்சரி யுங்கள்; தனிப்பட்டவருக்குரிய மனவியல் பற்றிய சிக்க

லானாலும், உடல் நலம் பற்றிய சிக்கலானாலும், சமூகம் பற்றிய சிக்கலானாலும், நாட்டுக்குரிய, உலகுக்குரிய அல்லது அகில லோகங்களுக்கும் உரிய சிக்கலானாலும் சரி, இவை எல்லாச் சிக்கல்களையும் தீர்த்து விடுவதற்குரிய ஒரே ஒரு மருந்து — இறைவனுடைய திருநாமத்தைப் பக்தியோடும், புனித உணர்வோடும் உச்சரிப்பதுதான்.

இதைப் பின்பற்றுவது அவ்வளவு எளிது அன்று என்று தோன்றுகின்றதா? உங்களுக்கு உள்ள சிக்கல் என்ன? அலைபாயும் மனத்தைத் தவிர வேறு ஏதேனும் தொந்தரவு இருக்கின்றதா? மனத்தைக் காட்டிலும் ஏங்க வைப்பதும், வருத்தத்திற்குரிய மூலகாரணமும் வேறு ஏதேனும் உள்ளதா? (உறக்கத்தில் இருப்பதுபோல) மனத்தில் கொந்தளிப்பு இல்லாத போது சிறிதும் ஏக்கமும் இல்லை; வருத்தமும் இல்லை; சிக்கலும் இல்லை. அப்போது பொறுப்பு உணர்வும் இல்லை; உலக அமைதிக்காகப் பணி செய்யும் விருப்பமும் இல்லை; அப்போது உலகம் அமைதி நிறைந்து உள்ளது. துடிதுடிப்புள்ள, கட்டுப்படுத்தப்படாத, நெறிப்படுத்தப்படாத மனம்தான் எல்லாச் சிக்கல்களையும் உருவாக்குகின்றது; சிக்கல் மிகப் பெரிய முக்கியத்துவம் வாய்ந்ததென்றும் அதற்குத் தீர்வு கண்டேயாகவேண்டும் என்றும் உங்களை உணரச் செய்கின்றது. எல்லாச் சிக்கல்களும் அலைபாய்கின்ற, நெறிப்படுத்தப்படாத மனத்திலிருந்தே முளைக்கின்றன என்று நீங்கள் கண்டுகொள்ளும் போது, நீங்கள் ஒரு செயலை மட்டும் வழங்குகின்றீர்கள்; அதனால் எதுவும் விளையவில்லையாயினும், அது தீங்கற்றதாக இருக்கின்றது. இத்தகைய மந்திரங்கள் தம்மில் மிகப்பெரும் ஆன்மீக மதிப்புள்ளவை என்பது நிச்சயமே; அவை மனத்தையும், இதயத்தையும் தூய்மைப் படுத்த வல்லவை. இவ்வாறு மனத்தால் மந்திரத்தை உச்சரித்தலாகிய பணியில் நிலையாக ஈடுபட்டிருக்குமாறு நீங்கள் மனத்தை அனுமதிப்பதனால் மாத்திரமே, நீங்கள் மனத்தைப் பணி செய்யச் செய்கின்றீர்கள்; உடன்பாட்டு முறையில், தீங்கற்ற வழியில் அதன் சக்திகளைப் பயன்படு

மாறு செய்கின்றீர்கள், உங்களைத் தொந்தரவு செய்ய அது மறந்துவிடுகின்றது; சிக்கல்களை உருவாக்கவும் அது மறந்துவிடுகின்றது. சிக்கல்களை உருவாக்கும் காரணம், இவ்வாறு கரைக்கப்படுகின்றது.

வாழ்க்கை, தன் வழியைத் தானே வகுத்துக்கொள் கின்றது. வாழ்க்கை நிற்பதில்லை; ஆதலால், வாழ்க்கையின் நடவடிக்கைகளுக்கு ஒரு பதிலீடாக மந்திரங்களை உச்சரித் தல் கூடாது. குருதேவர், ''மந்திரத்தை இரவும் பகலும் உச்சரியுங்கள்'' என்று சொன்னபோது அவர் உண்மையில் கருதியது, வாழ்க்கையின் எல்லா நடவடிக்கைகளும் நடைபெறும் போது அவற்றுடன் கூடவே அதே சமயங்களில், மந்திரம் உச்சரிக்கப்படவேண்டும் என்பதேயாகும். அதை மிகவும் அழகாகச் செயற்படுத்திக் காட்டுவது அவருடைய வழக்கமாகும். கைகளைத் தட்டி அசைப்பதனால் சப்பாத்தி கள் (வட்டவடிவில் அமைந்த, கோதுமை மாவில் சுடுவதற் கான உணவுகள்) செய்யப்படுகின்றன. அவர், ''இவற்றை நீங்கள் செய்யும் போது, 'ஸ்ரீராம் ஜெயராம், ஜெய ஜெய ராம்' என்ற மந்திரத்தைப் பாடிக்கொண்டே இருங்கள்; இரண்டு பணிகளும் ஒரே நேரத்தில் செய்து முடிக்கப்படுகின்றன'' என்று கூறுவது வழக்கம்.

குருதேவர் உங்களுக்கு ஒரு மந்திரத்தையும் ஒரு மாலை (உருத்திராட்ச மாலை) யையும் தரும்போது நீங்கள், ''காலையில் மூன்று மணி நேரமும், பிற்பகல் மூன்று மணி நேரமும், மாலையில் மூன்று மணி நேரமும் வேறு வேலை எதையும் செய்யாமல், ஜெபம் செய்யப்போகின்றேன்' என்று கூறினால், அவர் ''மாலையைத் தூர எறிந்துவிட்டு வாருங்கள், ஏதேனும் வேலை செய்யுங்கள்'' என்று கூறுவார். தாகத்தால் தவிக்கும் ஒருவருக்கு ஒரு குவளை தண்ணீர் கூடத் தர முன்வராமல், முடிவில்லாமல் மாலையின் மணி களை உருட்டிக்கொண்டே இருக்கும் ஒருவர் போலியான பக்தர்; வெறும் பாசாங்கு செய்பவர். மந்திரத்தை உச்சரிப்பதற்காகக் கீழே அமர்ந்து உங்களது மூக்கு நுனியைப்

பார்க்க வேண்டியதில்லை, வேறு சமயங்களில் கூட நீங்கள் அதைச் செய்யலாம். ஆனால், இரவும், பகலும் எல்லா நேரமும் மந்திர உச்சரிப்பு நடைபெற்றுக் கொண்டே இருக்க வேண்டும். இத்தகைய பயிற்சியைக் குருதேவர் 'சிந்தனையின் பின்புறக்காட்சி'' என்று அழைப்பார்; இதைப்பற்றி அவருக்கு மிகுந்த விருப்பம் இருந்தது.

மிகப் பெரும் அளவில் வேலை செய்தால் குருதேவரை மிகுதியும் திருப்தியடையச் செய்யலாம் என்று எங்களில் சிலர் நினைத்தார்கள். 1946-ல் ஒரு நாள் குருதேவர் என்மீது இடிஏறுபோலத் தாக்கியது என் நினைவுக்கு வருகின்றது. ''இன்று நீங்கள் எவ்வளவு தியானம் செய்தீர்கள்? எவ்வளவு ஜெபம் செய்தீர்கள்? தட்டச்சு இயந்திரத்தையும் அதனுடன் கூடிய மற்றைய பொருள்கள் எல்லாவற்றையும் கொண்டுபோய்க் கங்கையில் எறிந்துவிடுங்கள். போய்ச் சிறிது ஜெபமும் தியானமும் செய்யுங்கள்'' என்று முழங்கினார். ''வேலை மட்டும் செய்வது, ஒரு வழிபாடும் செய்வதில்லை'' என்பது குருதேவரின் விருப்பம் அன்று, 'வேலையே வழிபாடு'' என்பதே நிச்சயமான குறிக்கோள்; ஆனால் நடைமுறைப் பயிற்சியில், 'வேலையும் வழிபாடும்' என்பதே அதன் பொருள் என்று கொள்ளவேண்டும். ஆதலால் எந்த நேரத்திலும் எதையும் தவிர்க்காதவாறு சமநிலையாக நிறைவேற்ற வேண்டும்; இதில் குருதேவர் மேம்பட்டு விளங்கினார்.

சிந்தனையின் இந்தப் பின்புறக் காட்சியை வளர்க்க வேண்டும். தேர்ந்தெடுத்துக் கொண்ட திருநாமம் அல்லது மந்திரம் — அது இந்து மதத்திற்கோ, கிறித்துவ மதத்திற்கோ, முகம்மதிய மதத்திற்கோ அல்லது யூதர் மதத்திற்கோ உரியது ஆக இருக்கட்டும்; அதைப்பற்றி பொருட்படுத்த வேண்டாம். தேர்ந்தெடுத்துக் கொண்ட வாய்பாடு எதுவாயினும் சரி, அது சிந்தனையின் பின்புறக் காட்சியை உருவாக்குமாறு அதை உச்சரிக்க வேண்டும்.

இதன் வேலைமுறை மிகவும் சுலபம். நீங்கள் காலையில் விழித்தெழுந்தவுடனே, நீங்கள் படுக்கையைவிட்டு எழுவதற்கு முன்பே கூட, மந்திரத்தை மானசீகமாக உச்சரியுங்கள்; மந்திரம் உங்கள் சுவாசத்தோடு ஒத்திருக்கச் செய்யுங்கள். இதுவே தந்திரம். ஒரு வழியில்; மனத்திற்கு உரிய பழக்கத்தைப் பயன்படுத்தி இயற்கையான ஒழுங்கு என்னும் வகையில் அதை வீழ்த்துவதாக அமைகின்றது. இயற்கையான ஒழுங்குமுறை எதையாவது மனம் கண்டறிந்தால் அதில் தன்னை இழக்க விரும்புகின்றது. தானாக அது நடைபெறுமாறு செய்யுங்கள்; தானாக நடைபெற வேண்டும்; யந்திரம்போல் நடைபெறக் கூடாது.

பின்னர் படுக்கையை விட்டு எழுந்து, முகத்தைக் கழுவிக்கொண்டு கீழே அமர்ந்து ஒருமணி அல்லது ஒன்றரை மணி நேரம் மந்திரத்தை வாய்விட்டு உச்சரியுங்கள். மீண்டும் ஒருமுறை, மந்திர உச்சரிப்பு மென்மையாகவும், மகிழ்ச்சியாகவும், முயற்சி இல்லாமலே நடைபெறுமாறும் அமைவதற்காக, மந்திரத்தை மூச்சுக்காற்றுடன் இணையுங்கள். இதில் முயற்சி எதுவும் பங்கு பெறுவதில்லை. குருதேவர், ''அதிகாலையில் செய்யப்படும் ஜெபம் எந்த அளவுக்குத் தீவிரமாக இருக்கின்றதோ, பிரம்ம முகூர்த்தத்தில் (விடிவதற்கு ஒன்றரைமணி நேரத்திற்கு முன்புள்ள காலம்) செய்யப்படும் தியானத்தில் உள்ளும் புறமும் இறைவனுடைய தெய்வீக இருப்பை உணர்வது எவ்வளவு தீவிரமாக இருக்கின்றதோ, அந்த அளவுக்கு அன்றை நாள் எஞ்சியுள்ள நேரம் முழுவதும் செய்யப்படும் சேவையில் ஈடுபடும் மனத்தின் பங்கு மிகவும் நிறைவாக இருக்கும்'' என்று கூறுவது வழக்கம். கண் விழித்தவுடனே, முகத்தைக் கழுவிக்கொள்வதற்காகப் படுக்கையை விட்டு எழுவதற்கு முன்பேகூடக் குருதேவர் சிறிது நேரம் ஜெபம் செய்வார், குருதேவரின் குடிலில் (குடிசை) மின்விளக்கு போடப்படும் போது நீங்கள் உங்கள் கைக்கடிகாரத்தைச் சரிசெய்து அதிகாலை 3-30 மணி என்று திருப்பிவைத்துக் கொள்ளலாம். இந்த நேரத்தில் துயில் நீத்து எழுவதில் அவர் காலம்

தவருமல் இருப்பதில் எல்லேமீறிய கவனத்துடன் இருந்தார். காலே 4 மணி அடித்தவுடனே, ஜெபமும், பிராணுயாமமும் செய்வதற்காக அவர் தம்முடைய ஆசனத்திற்குத் (தியான இருக்கை) திரும்பி வருவார். அதிகாலே நேரங்களில் ஜெபமும் தியானமும் செய்ய வேண்டும் என்று அவர் ஏன் வற்புறுத்தி வந்தார் என்பதைக் குருதேவரின் சீடர் ஒவ்வொருவரும் அறிவார். உறக்க நிலேயிலிருந்து நாம் விழிப்பு நிலேக்கு வரும் அந்த நேரத்தில் நமது மனம் எதையும் எளிதில் பதித்துக்கொள்ளக்கூடிய நிலேமையில் இருக்கின்றது.

இந்த அதிகாலேத் தியானத்திற்குப் பிறகு, எழுந்து, நீங்கள் செய்ய வேண்டிய எதையும் செய்யுங்கள். நீங்கள் செய்யும் வேலேயில் மனமும் பங்குகொள்ள வேண்டியிருந் தால், உங்களுக்கு மந்திரம் பற்றிய கவனம் இருக்காது. ஆனல் வேலே முடிந்தவுடனே திரும்பவும் அமருங்கள்; உடம்பைத் தளர்த்திக்கொள்ளுங்கள், அமைதியாகக் கவனத் துடன் மூச்சு விடுங்கள்; மனத்தின் பின்புறக் காட்சியில் மந்திரம் இயங்கிக் கொண்டிருந்தால், முயற்சி இல்லாமலே மிகவும் சுலபமாக மனம், மந்திரத்தின் வசமாகிவிடும்.

நீங்கள் உங்கள் மனத்தைக் கண்காணித்து வந்தால் உங்களுக்கு ஓர் உண்மை புலப்படும். மனம், வேலே எதுவும் செய்யாமல் சும்மா இருக்கும்போதுதான் சிக்கல்களே உருவாக்குகின்றது; சிந்தனேயால், அல்லது உடம்பினுல் ஏதேனும் வேலேயில் நீங்கள் உண்மையாகவும் நேர்மை யாகவும், ஈடுபட்டிருக்கும்போது அவ்வாறு நிகழ்வதில்லே. நீங்கள் மேற்கூரையை உற்றுப்பார்த்துக் கொண்டிருக்கும் போதுதான் இந்தச் சிக்கல்கள் எல்லாம் ஒவ்வொன்ருக அங்கிருந்து விழுகின்றன. ஜெபத்தைப் பயிற்சி செய்திருந் தால், நீங்கள் செய்து கொண்டிருந்த குறிப்பிட்ட வேலே முடிந்தவுடனே, மனம் தானகவே ஜெபத்திற்குச் செல்லு கின்றது; இதனல் மனத்தில் சூனியம் ஒருபோதும் ஏற்படு வதில்லே; குறும்புத்தனம் எதையாவது செய்ய மனத்துக்கு

வாய்ப்பும் இல்லாமல் போகின்றது. நாள் முழுவதும் இடை வெளிகள் அமைந்து இந்தப் பயிற்சி நடைபெறலாம்.

நீங்கள் அணிந்து கொண்டும் பயன்படுத்திக் கொண்டும் இருக்கின்ற ஜெப மாலையுடன் கூடவே இன்னொரு சிறிய மாலையையும் (உத்திராட்ச மாலை) வைத்துக்கொள்ளுமாறு குருதேவர் பரிந்துரை செய்வார்; இந்தியாவில் இச் சிறிய மாலையை 'ஸ்மரணி' என்று அழைக்கிறார்கள். கத்தோலிக் கரும்கூட இதைப்போன்ற ஒன்றைப் பயன்படுத்துகின்றனர்; மணிக்கட்டில் அல்லது கைவிரலில் அணியக்கூடிய சிறிய மாலை — இதைச் சட்டைப்பையில் வைத்துக் கொள்ளலாம்; யாரும் அதைக் கவனிக்க மாட்டார்கள். நீங்கள் செய்து கொண்டிருக்கும் எந்த ஒரு பணியிலும் ஒரு சிறிய இடை வேளை ஏற்படும்போது, மானசீகமாக மந்திரத்தை உச்ச ரிக்கும் பழக்கம் இன்னும் உருவாகவில்லை என்றால், அதற்கு இது துணை செய்கின்றது. விரலில் அணிந்துள்ள இந்த மாலை, மந்திரத்தை உச்சரிக்குமாறு உங்களுக்கு நினைவூட்டுகின்றது. குருதேவர் இதைச் செய்வதைப் பார்த்திருக்கின்றேன். அவர் ஏதாவது ஒரு பெரிய திட்டத்தைப் பற்றி அல்லது வேறொன்றைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பார்; இந்த உரையாடலின் சுமையை அடுத்த பணிக்கும் கொண்டுசெல்ல அவர் விரும்பாதபோது (நம்மில் பெரும்பாலோர் அவ்வாறு கொண்டு செல்லுகின்றோம்) மௌனமாக மந்திரத்தை உச்சரித்தவாறு கவனத்தைத் தமக்கு உள்ளே கொண்டு செல்வார். அடுத்த பணிக்கு அவர் மிகவும் விரைவில் தயாராகி விடுவார். இந்த இடை வேளை உருவாக்கப்படவில்லை என்றால், நீங்கள் மூளையின்மீது பெரும் பாரத்தை மேலும், மேலும், மேலும் ஏற்றிக் கொண்டே இருக்கின்றீர்கள்; இதன் விளைவாக, முடிவில், 'நரம்புத் தளர்ச்சி' என்னும் இடைவேளை ஏற்பட்டு விடுகின்றது.

மாலையில் தம் அலுவலகப் பணியை முடித்துக் கொண்ட உடனே, குருதேவர், தம் அறைக்குச் சென்று அதன்

முற்றத்தில் மேலும் கீழுமாக நடந்து கொண்டே, மெது வான குரலில் ''ஓம்ம்ம்ம்...ஓஓஓம்ம்ம்...ஓஓஓம்ம்ம்ம்ம்ம் ...ஓஓஓம்ம்ம்ம்'' என்று உச்சரித்துக் கொண்டே உலாவு வார்; எடை பார்த்த பின் தராசு கீழே வைக்கப்படுவது போல அன்றாடப் பணிகள் கீழே இறக்கி வைக்கப்படுவதை ஒருவர் உண்மையாகவே காணலாம். மனத்தைத் தொடர்ந்து புதுமையாகவும், சக்தி நிறைந்ததாகவும், ஆதலால் விவேகம் நிறைந்ததாகவும் இருக்குமாறு இதுவே பேணி வருகின்றது.

குருதேவர் நம்மிடம் உற்சாகப்படுத்திக் கூறுவதுபோல, ''உறக்கத்தின்போது கூட நாம் உள்ளுணர்வு ஜெபத்தைச் செய்யும் வகையில், உறங்கப்போகும் போதும் ஜெபம் செய்ய வேண்டும்'' — இவ்வாறு நாம் செய்ய முடிந்தால், இதன் பயன் மிகவும் அற்புதமாக இருக்கும். நாம் இதை எவ்வாறு செய்ய முடியும்? ஜெபத்தை வழக்கமாகச் செய்து வருவதே இதற்கு வழியாகும். குருதேவர் அடிக்கடி, ''கடந்த இரவு நான் சரியாக உறங்கவில்லை. காலை 2 மணி யளவில் நான் விழித்தெழுந்து அரை மணி நேரம் வரையில் ஜெபம் செய்தேன், பிறகு அயர்ந்து உறங்கிவிட்டேன்; வழக்கமாக எழவேண்டிய நேரத்தில் மீண்டும் விழிப்புற்று எழுந்தேன்'' என்று கூறுவார். முடிந்தபோதெல்லாம் இறைவனுடைய திருநாமத்தை உச்சரிக்க நாம் இவ்வாறு நம்மைப் பழக்கப்படுத்திக் கொண்டால், தெய்வ சிந்தனை யிலே நம் உள்ளம் நிரம்பியிருக்கும். ஜெபம் பழக்கமாகி விடும்போது பிரம்மமுகூர்த்த தியானம் மிகவும் தீவிரமா கின்றது; இதனால் இறைவனுடைய சந்நிதானம், அப்போது மட்டும் அன்று, அன்றைய நாளில் நடவடிக்கைகள் எல்லா வற்றுள்ளும் உணரப்படுகின்றது.

ஜெபமாலையை எவ்வளவு முறை உருட்டினோம் என்ற எண்ணிக்கை முக்கியமன்று; மன ஒருமையின் நிறை நிலையும், இறைவனுடைய திருநாமம் உதித்தெழுகின்ற மன ஆழமும் மட்டுமே மிகவும் முக்கியம். ஒருமுறை குருதேவர்,

அதிகாலையில் எண்ணற்ற பல்வேறு மந்திரங்களையும் தாம் உச்சரிப்பது வழக்கம் என்று வெளியிட்டார். வாசுதேவ சர்வம். இவை யாவும் தெய்வம் (வாசுதேவர்). சர்வ பூதஸ்தம் ஆத்மானம்; ஒரே ஆத்மா, தெய்வமாக எல்லா உயிர்களினுள்ளும் வியாபித்துள்ளது. 'யத்-ச கிஞ்சித் ஜகத் சர்வம் திருஷ்யதே ச்ரூயதே பி வா அந்தர் பஹிஸ்ச்ச தத் சர்வம் வ்யாப்ய நாராயணம் ஸ்திதஹ;' இவ்வுலகில் உள்ள எதுவும், காணப்படுகின்ற எதுவும், கேட்கப்படுகின்ற எதுவும், இறைவன் நாராயணனே. தெய்வமாக, எல்லாப் பொருள்களின் உள்ளும் புறமும் பரந்து நிறைந்திருக் கின்றது; எல்லா பொருள்களின் உள்ளும் ஊடுருவி நிறைந்திருக்கின்றது''.

குருதேவர் ஒரு முறை, ''ஸ்ரீ சாஸ்திரியாரின் கூற்று பின் வருமாறு; 'ஸ்ரீ வித்யை (ஸ்ரீ வித்யா உபாசனை) என்று சொல்லப்படும் தனிச் சிறப்புள்ள அறிவு நெறியால் தெய்வீக அன்னையை ஒருவர் வழிப்பட்டாலன்றி, வாழ்வில் நான் அடைந்திருப்பதுபோல, உலகியல் வெற்றியை அவர் அடைய முடியாது. நான் ஒரு ஸ்ரீ வித்யா உபாசகன். ஒவ்வொரு நாளும் காலையில் நான் ஸ்ரீ வித்யா மந்திரத்தை இரண்டு முறை உச்சரிக்கின்றேன்; தாய்க்குலமாகிய ஒரு பெண்ணை நான் சந்திக்க நேரும்போதும் இவ்வாறே உச்சரிக்கின்றேன். அவளைத் தெய்வீக அன்னை திரிபுரசுந்தரியின் உருவமாக உணர்ந்து மானசீகமாக நான் அவளுடைய திருவடிகளில் வீழ்ந்து பணிந்து வணங்குகின்றேன். இது என் ஸ்ரீ வித்யா உபாசனையாக அமைகின்றது'' என்று ஸ்ரீ சாஸ்திரியாரின் மொழிகளை எடுத்துக் காட்டினார்.

குருதேவரும், கங்கையாற்றில் நின்று கொண்டிருக்கும் போது, தேர்ந்தெடுத்த சில மந்திரங்களை உச்சரிப்பதில் மிகவும் விருப்பங் கொண்டிருந்தார். மந்திர சித்தியை (மந்திர ஜெபம் பயிற்சியின் நிறைவு) விரைவாக இது உருவாக்குகின்றது என்பதை அவர் நிச்சயமாகக் கருதியிருந் தார். ஆசிரமத்தில் சுறுசுறுப்பாக, எப்போதும் பணி செய்து கொண்டிருந்த மனிதரிடம், குருதேவர், ''ஒரு மாலை ஜெபம்

கூடச் செய்ய உங்களுக்குப் போதிய நேரம் இல்லையென்றால், கங்கையாற்றில் நீங்கள் குளிக்கும்போது, சில விநாடிகள் ஆற்றிலேயே நின்று கொண்டு மூன்று முறை மந்திரத்தை உச்சரியுங்கள்; இது மூன்று இலட்சம் முறை உச்சரிப்பதற்குச் சமம் ஆகும்'' என்று அடிக்கடி கூறி வந்தார்.

மந்திரத்தை எழுதுவதும் சாதகரின் மனம் மிக எளிதில் ஒருமுகத் தன்மையை அடைவதற்கு உதவுகின்றது என்று குருதேவர் பெரும் அளவில் புகழ்ந்துள்ளார். ஒருமுறை அவர், ''மந்திரத்தை எழுதுவதற்காக ஒரு சிறிய நோட்டுப் புத்தகத்தையும், ஜெப மாலையையும் கீதையின் கையடக்கப் பதிப்பு ஒன்றையும், நீங்கள் எங்கு சென்றாலும் உங்களோடு உடன் வைத்திருங்கள். உங்களுக்குச் சிறிது ஓய்வு கிடைக்கும் போதெல்லாம், மனோராஜ்ஜியக் கற்பனைகளில் ஈடுபடுவதை அல்லது சிந்தை செயலற்றுச் சோம்பியிருத்தலைத் தவிர்த்து அதற்குப் பதிலாக, சின்ன நோட்டுப் புத்தகத்தில் சில மந்திரங்களை எழுதுங்கள்; ஜெப மாலையின் சில மணிகளை உருட்டுங்கள்; அல்லது கீதையின் சில சுலோகங்களைப் படியுங்கள். மனத்தைக் கட்டுப்படுத்துவதில் நிறைநிலை பெறுவதற்கு இதுவே சிறந்த வழி'' என்று எங்களிடம் கூறுவார்.

இத்துடன், லிகித ஜெபம் (மந்திரத்தை எழுதுதல்) நம் அன்றாட வாழ்வில் பின்னிப் பிணையுமாறு உதவக்கூடிய எண்ணற்ற பல வழிகளையும் அவர் வழங்கினார். எடுத்துக் காட்டாக, கடிதமோ வேறு குறிப்பையோ எழுதத் தொடங்கு முன்பு ஒவ்வொரு முறையும் ஓம் நமோ நாராயணாய'' என்று எழுதுங்கள். நீங்களும், கடிதமோ, குறிப்பையோ பெறுபவரும் இதனால் நன்மை பெறுகிறீர்கள். இதுபோலவே நீங்கள் ஏதேனும் கட்டுரையோ அல்லது அன்றாடக் கணக்கு விவரங்களையோ, இவைபோல, எவற்றை எழுத நேர்ந்தாலும் ஓரிருவரிகள் மந்திரத்தைப் பின் வருமாறு எழுதிய பிறகு தொடங்குங்கள்.

ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம்
ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம்

## மத சுதந்திரம்

சமய மொழியில் சொன்னுல் குருதேவர், இருமை இல்லை என்னும் வேதாந்தியாக இருந்தார் என்பதை நாம் இங்கே நினைவில் வைத்துக்கொள்வது நல்லது. அத்வைதம் என்று சொல்லப்படும் சித்தாந்தத்தைச் சேர்ந்தவர் அவர். இதன் பொருள் விளக்கம்பற்றித் தற்போது நீங்கள் மிகவும் கவலைப்படவேண்டியதில்லை. அத்வைதிகளின் கொள்கைப் படி ஒரு கடவுள் மீது நம்பிக்கை வைத்திருப்பது அவ்வளவு இன்றியமையாததன்று. இருமையற்ற கொள்கை, இரண்டு என்பது முற்றிலும் இல்லை என்பதைத் தன்னகத்தே கொண்டுள்ளது. ஒன்றே தேவன் என்ற கொள்கைக்கும், ஏகான்மவாதக் கொள்கைக்கும் வேறுபாடு உண்டு. குருதேவர் பின்பற்றி வந்த அதிகார பூர்வமான கொள்கை ஏகான்ம வாதமேயாகும்; ஒரு தெய்வக்கொள்கை அல்ல. தெய்வம் ஒன்று உண்டு என்ற கொள்கையில் தெய்வத்துக்கு வேருக நாம் இருக்கின்ருேம் என்பதால் இருமைபற்றிய (துவைதம்) கருத்தின் ஏதோ ஒரு வகை அதில் பிரிக்க முடியாதவாறு அமைந்துள்ளது. தெய்வமும் நாமும் ஐக்கியமாக வேண்டும் என்ற கருத்து அதில் அடங்கியுள்ளது; தெய்வம் ஒன்று உண்டு; நாம் அனைவரும் இன்றும் தெய்வத்துக்குப் புறம்பாக இருக்கின்ருேம். ஏகான்மவாதம் ''உள்ளது ஒரு பொருள் தான்'' என்று கூறுகின்றது. நீங்கள் என் முன்னே நிற்பதனுல் நான் இவ்வாறு கூறுகின்றேன்; இல்லை எனில் நான் அதைக் கூடச் சொல்லக் கூடாது. ஆதலால் ஏகான்மவாதிகள் கூறுவது போலத் தெய்வம் ஆலயத்திலோ ஒரு சிலையிலோ இல்லை என்பது உண்மையே; அவ்வடிவில் தெய்வம் ஒரு வரையறைக்குள் அடங்கியிருக்க வில்லை என்ற கருத்தில் அவர்கள் அவ்வாறு கூறுகின்றனர். எங்கும் இருக்கும் ஆற்றலால் தெய்வம் ஒவ்வோரிடத்திலும் இருக்கின்றது.

இக் கொள்கையைக் கேட்டவுடன் மனத்தில் தோன்றும் வெளிப்படையான கேள்வி, ''அப்படி என்ருல் நீங்கள் ஏன்

தெய்வத்தை ஓர் ஆலயத்தில் ஒரு மாதா கோயிலில், ஒரு யூதர்களின் கோயிலில் வணங்குகின்றீர்கள் ? நீங்கள் ஏன் தெய்வத்தை எல்லா இடங்களிலும் வணங்கக் கூடாது?'' என்பதாம். ஆனால் நீங்கள் இந்தக் காகிதத்தைப் பார்க்கும் போது ஒரு காகிதம் ஆகத்தான் இதைப் பார்க்கின்றீர்கள். தெய்வமாக அல்ல ! ஏனெனில் மனம் ஓர் வரையறைக்கு உட்பட்டுள்ளது; வரையறையைத் தாண்டிவர அதனால் முடியவில்லை. தண்ணியில் சிக்கவைக்கப் பட்டிருப்பதுபோல நீங்கள் காணப்படுகின்றீர்கள். ஆதலால் குருதேவர், தம் அன்றாட வாழ்வில் இடம் பெற்று விளங்கிய சிறப்பான, சுவையான ஒரு கொள்கையைப் பின்பற்றி வந்தார். ''இறைவனும் மனிதனும் நிரந்தரமாகப் பிரிந்திருப்பவர் கள், மனிதன் என்றேனும் ஒரு நாள் இறைவனுடன் இரண்டறக்கலந்து ஒன்றாகிவிட முடியும் என்பது எள்ளி நகையாடற்குரியது'' என்று சொல்லும் மற்ற மதப் பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் ஏகான்மவாதத்திற்கு எதிரான வர்கள்; இவர்களுடைய கருத்துக்களைக் குருதேவர் இகழ்ந்து பேசியதில்லை.

குருதேவர் ஒரு பக்தராகவும், ஒரு ஞானியாகவும் இருந்தது முரண்பாடு என்பது உண்மையேயாகும். அவர் தாம் ஒரு பக்தர் என்றும், அதனால் வேதாந்தத்தை யோ, தியானத்தையோ பயில மாட்டேன் என்றும் சொன்ன தில்லை. மனம், எல்லா வகையான தந்திரங்களையும் செய்யும் சக்தி வாய்ந்தது என்ற ஒரே காரணத்தால், இது மட்டும், அது மட்டும் என்று சொல்லாமல் எல்லாம் ஒருங்கு இணைந்த யோக அணுகுமுறையை நல்லதென்று அவர் தேர்ந்தெடுத்தார். யோகத்தின் ஒரு பகுதியை மறுக்கும் பக்தரும், ஏகான்மவாதியும் ஆகிய இருவரும் 'நான்' என்ற அகந்தையில் அகப்பட்டுக் கொள்ளுகின்றனர்.

இவற்றுள் எவ்வகை மனப்பான்மையையும் குருதேவர் குறை கூறியதில்லை. அதுவே அவருடைய மேதைப் பண்பு. குறிப்பிட்ட படி நிலையில் உள்ள ஒருவருக்கு, அதற்கேற்ற

மனப்பக்குவத்தை அடைந்த ஒருவருக்கு இவை யாவும் முக்கியமாக வேண்டப்படும் என்பதை உணர்ந்த அவர் இவை எல்லாவற்றையும் சேர்க்க முயன்முர். எல்லாவற்றுக்கும் உரிய இலக்கு ஒன்றே; அதை அடைவதற்கான படி நிலைகளே இவையாவும் என்பதை அவர் அறிந்திருந்தார். உருவ வழிபாட்டில் நீங்கள் மையத்தைத் தொட்டுவிட்டால் அல்லது தெரிந்துகொண்டால், அவ்வுருவத்தில் நீங்கள் எதை வழிபடுகின்றீர்களோ அது உங்களின் உள்ளத்திலும் உள்ளது என்பதைக் கட்டாயமாக உணர்வீர்கள் என்பதை அவர் அறிந்திருந்தார். ''கதிரவனிடத்தில் ஒளியாக இருப்பது எதுவோ அதுவே என் உள்ளத்திலும் ஒளியாக இருக்கின்றது'' என்று உபநிடதங்கள் கூறுகின்றன. மேலோட்டமாகப் பார்க்கும் போது ஒன்றுக்கொன்று மாறுபடுவன போலத் தோன்றும் இக்கொள்கைகளை ஒன்ருக இணைப்பதில் குருதேவர் நுண்ணறிவு அமைந்தது.

அவர் ரிஷிகேசத்திற்கு முதல் முதலாக வந்தபோது, அங்கு முற்றிலும் மாறுபட்ட இந்த இரு குழுக்களும் இருந்தன. ஒரு குழு, ''உங்கள் வேதாந்தம், விசாரணை, தியானம் எல்லாவற்றையும் மறந்து விடுங்கள். இறைவனுடைய தரிசனத்தைப் பெறுவதே மிக உயர்ந்த இலட்சியம். இதற்கு நீங்கள் உருவ வழிபாட்டைச் செய்வது அவசியம்'' என்று கூறியது. அடுத்த குழுவோ, இவர்களை உருவ வழிபாட்டுப் பித்தர்கள் என்றும், தியானம் செய்யத் தகுதியற்றவர்கள் என்றும், உபநிடதங்களின் உயர்ந்த தத்துவத்தைப் புரிந்து கொள்ளாதவர்கள் என்றும் பழிதூற்றியது.

ஒரு குழுவை உயர்த்தவும், மற்ற குழுவைச் சிறிதே தாழ்த்தவும் குருதேவருக்கு வாய்ப்பு வழங்கப்பட்டது; அவர் இதனை அழகாகவும் நுட்பமாகவும் செய்தார். இவர்கள் அனைவரையும் குருதேவர் சமாளிப்பதைப் பார்த்திருக்கின்றேன். ஒரு போதும் அவர் யாரிடமும் சவால் விட்டதில்லை. யாரேனும், ''இவ்வுருவத்தில் இறைவன் இருக்கின்ருன்'' என்று கூறினுல் உடனே அவர் இணக்கம்

தெரிவித்து மேலும், ''வாரீர்! நீங்கள் வழிபடும் சிலைக்கு ஒரு சிறிய கோயில் கட்டுவீர், வழிபாடும் செய்வீர்'' என்று ஊக்குவிப்பார். பின்னர் வேறு யாரேனும் வந்து, ''சுவாமிஜி! எனக்கு இவற்றில் எல்லாம் நம்பிக்கை இல்லை, நான் என் மனநிலையை ஏழாவது பூமிக்கு உயர்த்த முடியும்'' என்று கூறுவார். குருதேவர் அவரிடமும் ஒருபோதும் தர்க்கம் செய்ய மாட்டார். மதவெறி பிடித்த வரைக் கூட கண்டிக்காமல், அவரைப் புரிந்துகொள்ளக் குருதேவர் தயாராக இருந்தார், ஏனெனில் அவர் ஏதோ சிறிது காண்கிறார்; அதுவே முழுமையான காட்சி அல்ல என்பதை உணர்வதற்குப் போதிய பக்குவம் அவருக்கு இல்லை. அவர் தாமாகவே தகுந்த பக்குவத்தை அடைவதற்கு அவரை அனுமதிக்க வேண்டும். எனவே மத வெறியர்களைக் கூட அவர்களைத் திருப்தி செய்வதற்காகக் குருதேவர் அடிக்கடி பணிந்து வணங்குவார்.

ஒவ்வொரு நாளும் காலை, நண்பகல், மாலை என்று மூன்று வேளைகளிலும் ஆசிரமத்தில் உள்ள கோயிலில் பூஜை நடைபெறுவது வழக்கம். மலையடிவாரத்தில் கங்கை ஆற்றின் கரையில் வாழ்ந்து வந்த சுவாமி சிவானந்தர், ஒவ்வொரு நாளும் அந்த மூன்று வேளைகளிலும் அங்கு இருப்பதற்காக வழி முழுவதும் மேலே ஏறி வருவார். அவருடைய உடல் நலம் செப்பமாக இருந்தபோது இவ்வாறு நிகழ்ந்தது. ஆனால் கோயிலுக்கு அருகில் வாழ்ந்து வந்த ஓர் இளந்துறவி வழிபாட்டுக்கு வரமாட்டார். குருதேவரின் மனப்பான்மை என்ன? ஆரதி முடிந்தவுடனே, பிரசாதம் (இறைவனுக்குப் படைக்கப்படும் நைவேத்தியம்; அந்த நாட்களில் அதுவே எங்கள் காலை உணவாகவும் இருந்தது) வினியோகிக்கப்படும்போது அவர் எங்களில் ஒருவரை அழைத்து, ''அந்த இளந்துறவிக்கும் சிறிது பிரசாதத்தை எடுத்துக் கொண்டுபோய்க் கொடுங்கள்'' என்று கூறுவார் ஆனால், கதை அத்துடன் முடியவில்லை. அத்துறவி இப்போது ஆசிரமத்தில் இல்லை; தாமே சொந்தமாக ஓர் ஆசிரமத்தை நிறுவிக்கொண்டார்; அங்கே பூஜையும், மந்திர

உச்சாரணமும் நாள்தோறும் 24 மணி நேரமும் நடை பெறுகிறதென்றும், அவர் தம் சீடர்களை ஏதேனும் ஒரு வடிவில், அவரது தத்தம் தனி அறைகளில் சிறிய கோயில் அமைத்து இறைவனை வழிபடுமாறு வற்புறுத்துகின்றார் என்றும் நான் நம்புகின்றேன். இதைப் 'பிரசாதம்' செய்த அற்புதம் என்று கூறலாமே தவிர, வேறு என்ன வென்று சொல்வது? இப்பக்குவம் உங்களின் உள்ளத்தில் தானாக நிகழ வேண்டும். மத வெறியர்களுடன் குருதேவர் சச்சரவு கூடச் செய்ததில்லை. மதவெறியருடன் நீங்கள் சச்சர விட்டால், நீங்களும் ஒரு மதவெறியராக ஆகி விடுகின்றீர்கள்.

குருதேவரின் போதனைகளில் இது மிகவும் வியப்பைத் தரும் பகுதியாகும். ஒவ்வொருவரும் சொல்வதைக் கேட் பதில் அவர் ஆர்வம் காட்டினார். தமக்கு நேர்மாறான கருத் துள்ளவர் சொல்வதைக் கேட்பதிலும் ஆர்வம் காட்டினார். நீங்கள் உங்கள் சொந்த வழியை பின்பற்றலாம்; வாழ்க்கை பற்றிய உங்கள் சொந்த தத்துவத்தை நீங்கள் மேற் கொள்ளலாம். உங்கள் மதத்தையும், உங்கள் வழிபாட்டு தியான முறையையும் அல்லது உங்கள் வாழ்க்கை முறை யையும் நீங்கள் கைவிடத் தேவையில்லை. மற்றவர்களும் ஏதேனும் சுவையான கருத்தைச் சொல்லக்கூடும். மற்றவர் களின் கண்ணோட்டத்தில் உள்ள கருத்துக்களை ஆராய்ந்து பார்த்துப் புரிந்து கொள்ளும் ஆற்றலையும், அன்பையும், நட்பையும் வளர்த்துக்கொள்ளுங்கள். நம் குருதேவரின் மிகவும் புகழ்வாய்ந்த அறிவுரைகளில் ஒன்று. ''ஒரு மனிதனை இன்னொரு மனிதனிடமிருந்து பிரிக்கும் வேலிகளை உடைத்து எறியுங்கள்'' என்பதாம். அவர் பேசிய போதெல்லாம், இதை நூறு முறைகள் திரும்பத் திரும்பச் சொல்லியிருக்கின்றார்; இன்று கூட அவ்வுரை என் செவிகளில் ஒலித்துக்கொண்டிருக்கிறது. நீங்கள் என்னிட மிருந்து முற்றிலும், முழுவதும் மாறுபட்டிருக்கின்றீர்கள் என்ற உணர்வு இருக்கும் வரையில், நான் ஓர் இந்து, நீங்கள் ஒரு கிறித்துவர் அல்லது நான் ஓர் இந்தியன், நீங்கள் ஓர்

ஐரோப்பியர் என்பதனுல் அல்லது வேறு ஏதேனும் ஒரு காரணத்தால் அத்தகைய வேறுபாட்டுணர்வு நிலவும் வரையில், பகைமையும், அழிவும் விளையக்கூடிய அபாயமும் இருக்கின்றது. சுவாமி சிவானந்தர், ''நீங்கள் ஒரு மனித உயிர் என்பதை உணருங்கள். உங்கள் மதம் எது என்பது உங்கள் சொந்த அலுவல்'' என்று கூறுவார்.

கற்றறிந்த அறிவும், மதக் கட்டுப்பாட்டுப் பக்தியும் வாய்ந்த முகம்மதியர் ஒருவர் ஆசிரமத்திற்கு வருவது வழக்கம். கட்டுப்பாடுமிகுந்த முகம்மதியர் என்பதால் அவர் குறிப்பிட்ட சில செயல்களைச் செய்யமாட்டார்; குறிப்பிட்ட வேறுசில செயல்களைச் செய்வார். குருதேவர் தம் சீடர்களிடம் ''அவர் இப்போது நமாஸ் (முகம்மதியர் செய்யும் தொழுகை) செய்து கொண்டிருப்பார்; எனவே அவருக்கு இடையூறு செய்ய வேண்டாம். இதை அவர் விரும்ப மாட்டார்; எனவே இதை அவரிடம் தரவேண்டாம். இதை அவர் விரும்புவார்; எனவே இதை அவரிடம் தாருங்கள். தொழுகை செய்ய ஒரு பாயை அவருடைய அறையில் வையுங்கள்'' என்று இவை போன்ற கட்டளைகள் இடுவார். மற்றவர் செய்யும் மதப் பயிற்சிகள் பற்றி அவர் மிகவும் உயர்ந்த மரியாதை வைத்திருந்தார்.

இது நினைவில் கொள்ள வேண்டிய முக்கியமான கருத்து. குருதேவருக்கு இவை எல்லாவற்றிலும் நம்பிக்கையுண்டு, ஆனுல் தாம் பயிற்சி செய்ய விரும்பியதையே, பயிற்சி செய்து வந்தார். மற்றவர்கள் என்ன சொல்கிருர்கள் என்பதனுல் கலங்காதவராகி அவர் தம் சொந்த வாழ்க்கை முறையையே பின்பற்றி வந்தார். பல்வேறு மாறுபட்ட சமயக் கொள்கைகளையும் ஒருவர் பின்பற்றுவது என்பது இயலாத செயல். சாலைகள் அனைத்தும் 'ரோம்' நகருக்கு அழைத்துச் செல்வதில்லை; அலைந்து திரிவதற்கே வழிகளாக அமைகின்றன. சாலைகள் பல உள்ளன என்று தெரிந்து கொள்ளுங்கள்; முடிந்தால் அவற்றுடன் தொடர்பு கொள்ளுங்கள்; ஆனுல் மையத்தை நோக்கிச் செல்ல உங்கள் சொந்த பாதையிலேயே தொடர்ந்து செல்லுங்கள்.

## தாராள மனம் உண்மையில் படைத்தவர்

ஏனைய மதங்களில் இருப்பதுபோலவே, இந்தியாவில், இந்துக்களிடையிலும், முதன்மை வாய்ந்த சமயக் கொள்கைகள் சில இருந்தன. ஒரு நாள் ஆசிரமத்திற்கு வந்த விருந்தினர் ஒருவரைக் குருதேவர் வரவேற்றார்; அவர் சைவ சமயத்தின் தலைவர்; அவர் சிவபெருமானை மட்டும் வணங்குவார்; இராமர், கிருஷ்ணர் அல்லது விஷ்ணு பகவானை அவர் வணங்கமாட்டார். தாம் இமயமலைக்கு யாத்திரை செய்வதாகவும், சில நாட்களுக்கு ஆசிரமத்தில் தங்க விரும்புவதாகவும் அவர் குருதேவருக்கு விளக்கமாக எழுதியிருந்தார். 'மிக்க மகிழ்வுடன் வரவேற்கிறேன்' என்று குருதேவர் விடை எழுதினார். அப்புனிதத் துறவி வந்து சேர்வதற்கு ஒரு நாள் முன்பு, எங்கள் எல்லோரையும் குருதேவர் அழைத்து, ''நாளையிலிருந்து மூன்று நாட்களுக்குப் பீடத்தில் சிவபெருமானுடைய படம் மட்டும் வைக்கப்பட வேண்டும்; ஸ்ரீ ராம் ஜெய ராம், ஜெய ஜெய ராம் என்ற மந்திரத்தைப் பாட வேண்டாம்; கணேசர், சிவபெருமான் ஆகியோருடைய திருநாமங்களை மட்டும் பாட வேண்டும்; கீதையைப் படிக்க வேண்டாம்; விஷ்ணு புராணத்தையும் படிக்க வேண்டாம்; சிவபெருமானுக்குரிய சமய நூல்களையே படிக்க வேண்டும்; எதுவாயினும் சிவபெருமானைப் பற்றியதாக இருக்க வேண்டும்'' என்று தெரிவித்தார்.

இது ஒரு கபட நாடகம்போல் உங்களுக்குத் தோன்றுகின்றதா? குருதேவர் ஒரு நயவஞ்சகரல்லர். சிறிது கூட முரண்படாமல் 'மற்றதைத்' தெளிவாக நிழலிடச் செய்யும் தூய்மையான பளிங்கு, அவர். ''இறைவன் அனைவருள்ளும் உறைகின்றார் என்ற உண்மையின்மீது நான் பக்தி பூண்டிருப்பதுபோல, அவர் சிவபெருமானிடம் பக்தி கொண்டுள்ளார்,'' ''நான் கிருஷ்ணரிடமோ அல்லது கிறித்துவரிடமோ பக்தி பூண்டுள்ளதுபோல, அவர் சிவபெருமானிடம் பக்தி கொண்டுள்ளார்'' என்பது, குரு

தேவரின் மனப்பான்மை அன்று. ஆனால், ''எல்லா மதங்களும் ஒன்றே; எல்லா மதங்களும் சம மதிப்புள்ளவையே; சமமான பெருமையுள்ளவையே; உண்மையைச் சமமாகப் பகிர்ந்து கொள்பவையே, என்று நான் உணர்கின்றேன்'' என்பதே அவருடைய மனப்பான்மை. ஆசிரமத்திற்கு வருபவர் யாராக இருப்பினும், அவர் எவ்வளவு மதவெறி உள்ளவராக இருப்பினும் சரியே, அவருக்குச் சேவை செய்ய ஒரு வாய்ப்பையும், அவருடைய உரையைக் கேட்க ஒரு வாய்ப்பையும் எங்களுக்குத் தருபவர் ஆகின்றார். மத வெறியில் ஒரு வகையினர், மற்றவரைக் குணப்படுத்த முடியாது. ஏன் மற்றவருக்குத் தீங்கு இழைக்க வேண்டும்? எரிச்சல் கூட ஏன் ஊட்ட வேண்டும்? மனிதாபிமான அளவில் மக்களோடு பழக வேண்டும் என்பதே கருத்து. ஒவ்வொரு சமயமும் ஒரு பகுதியை மட்டுமே பார்க்கச் செய்கிறது என்பதே சாத்தியமாகலாம்; நிறைவான, முழுமையான காட்சியை எந்த ஒரு மதமும் தனித்து வழங்குவதில்லை. சன்னலின் வழியே வெளியே பார்த்தால் நீங்கள் ஆகாயத்தைப் பார்க்கிறீர்கள். அது முழுமையான ஆகாயம் அல்ல; ஆகாயத்தின் ஒரு சிறிய பகுதியே அது. ஆகாயம் முழுவதையும், பரப்பு முழுவதையும் இவ்வுலகில் யாரும் பார்த்ததில்லை; அதைப்போலவே முழு உண்மையையோ அல்லது கடவுளையோ யாரும் பார்த்ததில்லை. கடவுளாக இருக்கின்ற முழுமையான காட்சியை நீங்கள் ஒருபோதும் காண முடியாது. ஆனால் நீங்கள் பார்ப்பது ஆகாயம்தான்; நாம் அதை மறந்துவிடக் கூடாது. நீங்கள் முழுமையான ஆகாயத்தைப் பார்க்கவில்லையென்றாலும், நீங்கள் இன்னும் ''ஆகாயத்தைப்'' பார்த்துக்கொண்டிருக்கின்றீர்கள்.

மதம் என்பது நீங்கள் மட்டும் மிகவும் இரகசியமாகச் சந்திப்பது என்றும், நீங்களாக மேற் கொண்ட ஆன்மீக முயற்சி என்றும், சமுதாயத்தில் உள்ள மற்றவர்களுடன் நீங்கள் கொள்ளும் தொடர்பில் மனித மன நிலையில் இருக்கிறீர்கள் என்றும் நீங்கள் கருத முடியுமா? சுவாமி சிவானந்தரின் மேதைப் பண்பு அவ்வாறு கருத நமக்குக்

கற்பித்துள்ளது; ஒருவர் மற்றவரைச் சகித்துக்கொள்ள மட்டும் அன்று; ஒருவரையொருவர் புரிந்துகொள்ளவும் கற்பித்துள்ளது. ஒருவரையொருவர் புரிந்துகொள்வது என்பதென்ன ? மதிப்பது, — ''நீங்கள் என் கருத்தை மதிக்கவில்லையென்றாலும், நான் உங்கள் கருத்தை மதிக்கின்றேன்'' அதுவே அழகு. குருதேவர் ''கடவுளை மறுப்பவர் கூடக் கடவுளின் இருப்பை உறுதிப்படுத்துகின்றார்; ஏனெனில் மறுப்பவரின் சொந்த ஆத்மாவே கடவுளாக இருக்கின்றது. ''கடவுள் இல்லை'' என்று சொல்லும் அறிவாற்றலின் அடித்தளமே கடவுளாக இருக்கின்றது'' என்றும் கூறுவது வழக்கம். அவ்வாறு மறுப்பவரின் படிப்படியான பக்குவ வளர்ச்சிக்கு, மறுப்பதும் தேவைப்படுகின்ற ஒரு படி நிலையாக இருக்கலாம்.

குருதேவர் யாரையும் எதிர்த்ததில்லை; தம் மனச்சாட்சிக்கு மாருக நடக்குமாறு யாரையும் வற்புறுத்தியதில்லை; இல்லவே இல்லை. ஆசிரமத்தில் அவருடைய சீடர்களே பெரிதும் மாறுபடும் கொள்கைகளைப் பற்றிய கருத்துள்ளவர்களாக இருந்தார்கள்; ஆனால் குருதேவர் அவர்கள் எல்லோரையுமே நேசித்தும், நன்கு மதித்தும் வந்தார். இறைவன் எங்கும் நிறைந்துள்ளார் என்ற உள்ளுணர்வின் சத்தாகவும், சாரமாகவும் இது எனக்குத் தோன்றுகின்றது. சொல்லன்று, கருத்தன்று, ஆனால் இறைவன் எங்கும் நிறைந்துள்ளார் என்ற மெய்யுணர்வே முக்கியம். இம் மெய்யுணர்வே சுவாமி சிவானந்தராக வாழ்ந்தது.

மற்றொரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி, ஒவ்வொருவரையும் யாது செய்வதென்று தெரியாமல் அனேகமாக நிலைகுலையச் செய்துவிட்டது. 1953-ல் சுவாமி சிவானந்தர் அனைத்து மதங்களின் மாநாட்டை நடத்தினார். வெவ்வேறு சமயங்களைச் சேர்ந்த புலமைமிகுந்த சான்றோர்கள் பலரும் அழைக்கப்பட்டார்கள்; விழாவில் கலந்து கொள்வதற்காக என்று மட்டும் வந்தவர்களும் பலர் இருந்தனர். சுவாமி சிவானந்தரின் சீடர்களும், பக்தர்களும் மட்டும் அடங்கிய

ஒரு பேரவையாக அமைவதற்கு இது தகுந்த தருணம் அன்று என்பது தெளிவு; மக்கட்கூட்டத்தின் மன நிலையை மதிப்பிடுவது சிறிது கடினமாக இருந்தது. ஏனெனில் பரந்த மனப்பான்மை உள்ளவர்களின் கூட்டமாக அது இருந்தது: நிகழ்ச்சிகள் யாவும் பெரும்பாலும் ஆங்கிலத்தில் நடை பெற்றன; ஆங்கிலம் பேசமுடியாத துறவிகள் ஓரிருவர் மட்டும் இந்தி அல்லது தமிழ் அல்லது மற்ருெரு மாநில மொழியில் பேசினர்.

இரண்டாம் நாள், மேடையில் அமர்ந்திருந்த ஒரு துறவி நிகழ்ச்சிகளை நடத்தும் நிர்வாகிகளுள் ஒருவருக்கு ''பேசுவதற்கு எனக்கு வாய்ப்பைத் தாருங்கள்' என்று ஒரு குறிப்பை அனுப்பினுர். நிர்வாகி, ''முடியாது. நேரம் இல்லை'' என்று கூறிவிட்டார்.

மேடையில் வீற்றிருந்த குருதேவர், இதை ஓரக் கண்ணுல் கவனித்துக் கொண்டிருந்தார். அவரிடம் குறிப்பு வந்து சேர்ந்தது. ''அவர் பேசட்டும். நான் இன்று பேச வில்லை. எனவே அவர் பேசட்டும்'' என்று குருதேவர் கூறினுர். அத்துறவி என்ன செய்தார், தெரியுமா?. அவர் எழுந்து நின்று ஒலி பெருக்கியை யாரும் பறித்துக் கொள்ளாதவாறு அதை இறுகப் பற்றிக்கொண்டு பத்து நிமிடங்கள் வரை, சுவாமி சிவானந்தரைக் குறை கூறி நிந்தித்து வாந்தி எடுத்தார். வேறு எதையும் அவர் பேச வில்லை. ''இந்தி மொழிக்கு உரிய வட இந்தியாவில் அவர் வாழுகின்ருர்; எனினும் அவர் ஆங்கிலத்தில் எழுதுகின்ருர்; ஆங்கிலத்தில் பேசுகின்ருர்'' என்றெல்லாம் குருதேவரைப் பற்றி வசைமொழிந்து கொண்டிருந்தார்.'' இது சமயங் களின் மாநாடேயன்றி, மொழிகளின் மாநாடு அல்ல; ஆனுல் இம்மனிதர் அவற்றைப்பற்றி எல்லாம் சிறிதும் கவலைப்படவில்லை. பகிரங்கமாகக் குருதேவரைத் தாக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் மட்டுமே அவர் வந்திருந்தார். குருதேவருடைய ஒளிமிக்க புன்னகையை நீங்கள் பார்த்திருக்க வேண்டும். ''மிகவும் நல்லது, மிகவும்

நல்லது'' நிச்சயம் இந்தியில்தான், என்று அவர் சொல்லிக் கொண்டிருந்தார். இவ்வாறு நிந்திக்கப்படும் மற்ற மக்களின் மூளை கொதித்து அவர்களின் செவிகளில் ஆவி புறப்பட்டு வருவதை நீங்கள் பார்த்திருக்கலாம்; ஆனுல் குருதேவர் மிகுந்த அமைதியுடன் இருந்தார்.'' அது உங்கள் எண்ணம், உங்கள் கருத்து, உங்கள் வழி. தொடர்ந்து பேசுங்கள் என்று சொல்வது போல அந்த அமைதி இருந்தது. குருதேவரின் நூல்கள் உலகம் முழுவதும் பரவி வழங்கப்பட்டு வந்தமையால் அவர் ஆங்கிலத்தில் அவற்றை எழுதவேண்டி இருந்தது; ஆதலால் தாம் செய்தது சரி என்பதை இம்மனிதரின் பார்வையில் நிலை நாட்டவோ அல்லது அவரது மனத்தை ஒப்புக் கொள்ளச் செய்யவோ குருதேவர் முயற்சி கூடச் செய்யவில்லை. இதுவே நம் குரு தேவரின் அற்புதமான மனப்பான்மை; ஆதலால் மீண்டும் சொல்லுகின்றேன், இத்தகைய திரைகளை எல்லாம் ஊடுருவிச் சென்று அவருடைய உண்மையான இயல்பை நேரில் காண்பது மிகமிகக் கடினம்.

கிறித்துவராகவோ, இந்துவாகவோ, முகம்மதிய ராகவோ இருப்பவர் தம் மதத்தைப் புறக்கணித்து விடுவது சிறிதும் அறிவற்ற செயலாகும். எதற்காகப் புறக்கணிக்க வேண்டும்? அதற்குப் பதிலாக நீங்கள் என்ன செய்யப் போகின்றீர்கள்? எல்லாவற்றுக்கும் பொதுவான ஒரு புதிய மதத்தை நீங்கள் பின்பற்றப் போகின்றீர்களா? பொது வான மதம் என்பது என்ன? அதில் ஒருவர் தாம் விரும்பும் கொள்கைகளின் பட்டியல்கள் எல்லாம் வைத்திருப்பார்; தம் மதத்தைத் தவிர மற்ற மதங்களை எல்லாம் கண்டிக்கும் கருத்துக்கள் அந்தப் பட்டியல்களில் இருக்கும். இது காலத்தைப் பாழாக்குவதாகும். நீங்கள் எந்த மதமோ, அந்த மதத்தவராக இருங்கள். குருதேவர் உங்களிடம் ''சாத்தியமான இடங்களில் எல்லாம் கடவுளைத் தேடுங்கள்; எல்லாரிடத்தும் கடவுளைக் காணுங்கள்'' என்று கூறுகின்றார்.

# உருவ வழிபாடு

ஆனால் சரியாகச் சொல்வதானால் குருதேவர் பின் பற்றிய சொந்தப் பயிற்சி என்ன? சரியாக அவர் சுவர்க்கா ஆசிரமத்தில், பிச்சை ஏற்று உண்ணும் துறவியாக வாழத் தொடங்கிய நாட்களிலிருந்து பூத உடம்பு வாழ்வைத் துறந்த கடைசி நாள் வரை அவர் கடவுள் நம்பிக்கை உள்ள வராக மட்டும் வாழவில்லை. நீங்கள் உருவ வழிபாடு என்றும் சொல்லும் பயிற்சியில் மிகவும் உறுதி உள்ளவராக வும் அவர் இருந்தார். சில சமயங்களில் அவர் சிவ பெருமானுடைய படத்தைப் பயன் படுத்தினார். ஆனால் அவர் பெரும்பாலும் அடிக்கடி புல்லாங்குழலைக் கையில் ஏந்தியுள்ள கண்ணபிரானின் படத்தையே பயன்படுத்தினார். அது மிகவும் அழகானபடம். குருதேவர் ஒரு முறை அதைப் பற்றிக் குறிப்பிட்டு "இப்படத்தை வரைந்த ஓவியருக்குக் கண்ணனின் காட்சி வாய்த்திருக்க வேண்டும். அது மிகுந்த உள்ளக்கிளர்ச்சியை ஊட்டுவதாக உள்ளது" என்று கூறினார். எல்லா நேரமும் இந்தப் படம் அவருடைய சொந்தப் பூஜை (வழிபாட்டு) அறையில் வைக்கப் பட்டிருந்தது. அவருடைய உடம்பு படுக்கையிலிருந்து எழுந்து நடமாட முடிந்த காலம் வரையில், அந்தப்படத் திற்குச் செய்யப்படும் சடங்கு முறை வழிபாடு செய்யப் படாமல் தவிர்த்ததாக ஒரு நாள் கூட இருக்க வில்லை. ஒவ்வொரு நாளும் அவர் குளித்து முடித்த உடனே சென்று விளக்கேற்றிவைத்துக் கண்ணபிரானின் திருவடியில் ஒரு மலரை இட்டு ஆரதி காட்டி வணங்குவார். தமக்கு மந்திரங்கள் பல தெரியாதென்றும், ஆனால் தெரிந்த சில மந்திரங்களையாவது வழிபாட்டில் பயன்படுத்தியதாக அவர் ஒரு முறை கூறியுள்ளார்.

பகவத் கீதையில் சொல்லப்பட்டுள்ள போதனை, குரு தேவரின் சொந்த வாழ்வில் எவ்வாறு உருவம் பெற்றுள்ளது என்பதை நாம் இதனால் பார்க்கின்றோம். அந்த அருள் நூலில் சொல்லப்பட்டுள்ள ஒரு சுலோகத்தின் பொருள்

பின்வருமாறு :- ''என் பக்தன் அன்புடன் எனக்கு வழங்குவது எதுவாயினும் இலை, மலர் அல்லது சிறிது தண்ணீர் மாத்திரமாக இருந்தாலும் அதை நான் மிகுந்த மகிழ்வுடன் ஏற்றுக்கொள்ளுகின்றேன்,'' என்பதாம். இங்கே இந்தப் புனித மகான், ஞானி, ஏதேனும் அறம் செய்ய நேர்ந்தால், தம் சீடர்களுக்குச் சில பழங்கள், சிறிது தொகை அல்லது சில உடைகள் தரும்போது, இச் சுலோகத்தில் முதல் இரண்டு சொற்களைக் கூறுவார், ''பத்ரம் புஷ்பம்'' (இலை அல்லது மலர்) என்று அவர் சொல்வதன் உட்கருத்து, ''நான் பக்தன்; நீங்கள் என் தெய்வம்; பொருளாகச் சிறிதும் இல்லை என்று சொல்லும் படியான — பத்ரம் புஷ்பம் — ஏதோ சிறிது படைக் கின்றேன், அருள் கூர்ந்து ஏற்றுக்கொள்ளுங்கள்,'' என்ப தாம். இத்தகைய வழிபாட்டை ஓர் உருவத்திற்கு (மூர்த்தி பூஜை) செய்யலாம்; அல்லது தம் இதயத்தில் குடிகொண்டுள்ள தெய்வத்திற்கு (மானசீக பூஜை) செய்ய லாம்; அல்லது அனைத்து உயிர்களிலும் உள்ளுறையும், எங்கும் நிறைந்துள்ள இறைவனுக்கு (பர பூஜை) செய்யலாம்.

குருதேவர் இவற்றுள் எதையும் தவிர்க்கவில்லை. இந்த உலகம் முழுவதும் அவருக்கு இறைவனுடைய காட்சியாக இருந்தது; தம் வாழ்வின் ஒவ்வொரு நொடியும் அவர் இந்த மன உணர்வுடன் வாழ்ந்து வந்தார். காலையில் கதிரவனை வாழ்த்தி வணங்கி மானசீக பூஜை செய்து. ''ஓம் சூர்யாய நம'' (சூரிய பகவானை மகிழ்விக்கும் மந்திரம்) என்று உச்சரித்து. மானசீகமாகத் தூப, தீப, நைவேத்தியங் களுடன் அர்ச்சனை (சாம்பிராணிப் புகை காட்டல், தீபங் காட்டல், படையல் வழங்கல், மலர் தூவி வணங்கல்) ஆகிய வற்றைத் தம் உள்ளத்தில் தோன்றும் வரிசைப்படிச் செய்து வணங்குவார். கங்கையின் கரையில் அமர்ந்துகொண்டு, பளிச்சிடும் தெய்வீகத் தண்ணீரின் பரப்பைப் பார்த்து மகிழ்ந்து மானசீகமாக ஆற்றுக்குப் பால், மலர்கள் முதலிய வற்றை வழங்கி, வணங்கி வழிபாடு செய்வார்.

எந்த காரணத்தை முன்னிட்டும் குருதேவர் தம் குடிலில் உள்ள சிறிய கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனுக்கு வழக்கமான சடங்குகள் கூடிய வழிபாட்டை முதலில் செய்யாமல் தம் பகல் உணவை உண்ணமாட்டார். தம் அன்றாடக் கடமைகளில் இந்த ஒரு நிகழ்ச்சியின் போது மட்டும் இரகசியத்தைப் பாதுகாத்து வந்தார்; வற்புறுத்தி வந்தார், தம் போதனைக்குத் தாமே ஓர் எடுத்துக் காட்டாக இருக்கவேண்டும் என்று விரும்பியே அவ்வாறு அவர் செய்தார். இறைவனுடைய கருணையைப் பெறுவதற்காக நீங்கள் தனியாக இரகசியமாக வழிபடவேண்டும். உங்களின் வியக்கத்தக்க வழிபாட்டை மற்றவர்கள் பாராட்ட வேண்டும் என்று கருதி அவர்களுடைய கவனத்தை இழுப்பதற்காக மணியை அடித்துக் சேகண்டியை முழக்குதல் முதலான செயல்களைச் செய்யக் கூடாது. ஆடம்பரத்திற்கு அவர் ஒரு சிறிதும் மதிப்பைத் தரவில்லை. அவர் தெய்வத்தின் முன்னால் நிலத்தில் முழுமையாகப் பணிந்து வீழ்ந்து வணங்கிய போது கீழே விழுந்த அவருடைய மூக்குக் கண்ணாடியை நேர்பணியாளர்களில் ஒருவர் ஒரே ஒரு முறை தான் பார்த்தார். இந்த வழிபாட்டில் அல்லது பணிந்து வணங்கியதில் செயற்கை சிறிதும் இல்லை, ஒருவர் முற்றிலும் சரண் அடைவதன் அடையாளம் தான் அது; குருதேவரைப் பொறுத்த வரையில் இந்த அடையாளம் உண்மையானது; மனப்பூர்வமானது.

மன வழிபாட்டைச் செய்தாலும், மெய் வழிபாட்டைச் செய்தாலும் குருதேவருக்கு அவர் வணங்கும் தெய்வம், நாம் கண்ணாரக் காணும் பொருள்களைக் காட்டிலும் உண்மையானதாகும். கொஞ்ச காலமாக, ஆசிரமத்தில் உள்ள விசுவநாதர் ஆலயத்தில் நான் பூஜையும் வழிபாடும் செய்வது வழக்கம். குருதேவர் அடிக்கடி வந்து கலந்து கொள்வது வழக்கம். அவர் சில வில்வ இலைகளைப் படைத்து அங்கிருந்த சிறிய எருதையும் (நந்தி) சிவலிங்கத்தையும் தரிசித்தபோது அவர் அவற்றைச் சிலைகள் என்று சிறிதும் கருதவில்லை என்பது தெளிவாயிற்று. அவர் அழகிய கண்ணபிரானைத்

தரிசிக்கும்போது அவருடைய முகத்தில் வெளிப்படும் தோற்றம், நாம் நீண்டகாலம் பழகிய நம் அன்புக்குரிய நண்பரைச் சந்திக்கும்போது நம் முகம் எப்படி மலர்ச்சி யுடன் காணப்படுமோ அதுபோலவே இருந்தது. அக் களிப்பை அவருடைய கண்களிலும் நீங்கள் காணலாம். காண்பதற்கு அது மிகவும் அழகான காட்சியாகும். அதைச் சொற்களால் விளக்க முடியாது.

இதுபோன்ற 'சிலே' என்று சொல்லயிலகும் பொருளுடன் நீங்கள் கருத்துக்களேப் பரிமாறிக் கொள்ள முடிந்தால், உங்கள் உள்ளத்தில் ஏற்கனவே உருமாற்றம் ஏற்பட்டுள்ளது என்பதைக் காட்டும். சில பெயர்களிலும், சில உருவங் களிலும் உள்ள தெய்வீகத்தையும், தெய்வத்தின் இருப்பை யும் புரிந்துகொள்ள நீங்கள் கற்றுக்கொண்ட உடனே, நீங்கள் வெளியில் புறப்பட்டுச் சென்று, ''அனைத்துப் பெயர்களிலும் உருவங்களிலும் நீயே காணப்படுகின்ருய்'' என்பதை உணரலாம். இத் தெய்வக் காட்சி விரிவடையும் போது, 'நல்லது' என்று மனம் எதை முத்திரை யிடுகின்றதோ அதில் மட்டும் தென்படுமாறு வரையறை செய்து கொள்வதில்லே. தம் வாழ்வில் குருதேவர் எதைச் செய்திருந்தாலும் அது இந்த விரிவடையும் மன உணர் வுடன் தொடர்பு கொண்டதாக இருந்தது.

நீங்கள் உடம்பைப் பேணி வரவேண்டிய காலம் இருக்கும் வரையில் அதை இறைவனுடைய கைகளில் உள்ள கருவி என்று கருதி நடத்துங்கள். 'நான் — இருக்கின்றேன்' என்ற உணர்வு உங்களுக்கு இருக்கும் வரையும் அனைவ ருள்ளும் இருக்கின்ற இறைவனே உணர்ந்து கொள்ளுங்கள்; ஒவ்வோர் உயிருள்ளும் இருக்கின்ற இறைவனே நேசியுங்கள்; சேவை செய்யுங்கள்; அதே நேரத்தில் இறைவன் எங்கும் வியாபித்திருக்கின்ற உண்மையைக் கண்டு கொள்ள முயற்சி செய்யுங்கள். இதுவே உருவ வழிபாட்டின் மர்மமும் மாயா ஜாலமும் ஆகும்.

பக்தி என்பது மன உணர்வின் விரிவு; காணும் காட்சியின் விரிவு; எண்ணும் இதயத்தில் விரிவு. ஆலயத்தில் உள்ள ஒரு சிலையில் அல்லது புனித மகான் அல்லது ஞானியின் உருவத்தில் அல்லது இயற்கையின் அழகிய காட்சியில் — இவ்வாறு ஏதோ குறிப்பிட்ட ஓர் இடத்தில் இறைவனைக் காணத் தொடங்குகின்றீர்கள்; பின்னர் மெதுவாகப் படிப் படியாக இக்காட்சி விரிவடைந்து வளர்கின்றது; பாகு பாடுகள் யாவும் நீக்கப்படும் வரையில், 'நல்லது' என்பதற்கும் 'தீயது' என்பதற்கும் இடையில் உள்ள வேறுபாடு மறையும் வரையில் கூட, இக்காட்சி தொடர்ந்து முடிவில்லாமல் விரிந்து வளர்கின்றது. அப்போதுதான் பரந்த மன உணர்வை ஒருவர் எய்தியவர் ஆகின்றார்.

ஆலயத்தில் செய்யும் தெய்வ வழிபாட்டளவில் மட்டும் நம் வழிபாடு அடங்கியிருக்கக் குருதேவர் எக்காரணத்தை முன்னிட்டும் அனுமதிக்கமாட்டார். ஆலய வழிபாடு, தொடக்கப் பயிற்சி காலத்திற்கு மிகவும் அவசியம் என்பதில் சிறிதும் ஐயமில்லை; ஆனால் இதன் இலட்சியம் (அவர் நம் இதயத்தில் பதியுமாறு ஆணியறைந்தாற்போல் தொடர்ந்து வற்புறுத்தியது) அகில உலகம் முழுவதையும் விசுவப் பிருந்தாவனமாக (கண்ணபிரான் உறையும் இடம்) எண்ண வேண்டும்; அங்குள்ள உயிர் ஒவ்வொன்றையும் வாசுதேவ இறைவன் என்றே உணர வேண்டும். வாசுதேவ சர்வம்.

## எங்கும் நிறைந்துள்ள இறைவனை வழிபடல்

இன்னும் கணக்கற்ற பல்வேறு வழிகளில் குருதேவர் எங்கும் நிறைந்துள்ள இறைவனை வழிபட்டார், நோயாளிகளுக்குச் சேவை செய்வதையே இறை வழிபாடாக அவர் பாராட்டியதைப் பற்றி நாம் ஏற்கனவே பேசியிருக்கின்றோம்,

அவர் வற்புறுத்தியவாறு ஆசிரமத்தில், நவராத்திரி விழா நாட்களில் கன்னியரை வழிபடல், அண்ணல் 'காந்தி

யடிகளின் பிறந்த நாள் விழாவில் தோட்டிகளை வழிபடல் முதலிய சிறப்பு வழிபாட்டு வகைகள் ஏற்படுத்தப்பட்டன. புனிதம் மிகுந்த குரு பௌர்ணமி நாளிலும் (பெருமை மிகு பெரும் பேராசிரியராகிய ஸ்ரீ வியாச பகவானுக்கு அன்று வணக்கமும் வழிபாடும் செய்யப்படுகின்றன; அவர் அன்று தான் பிரம்ம சூத்திரங்களுக்கு உரை எழுதத் தொடங்கினார்) இத்தகைய மற்ற புனிதம் மிகுந்த நாட்களிலும் குருதேவர் ஆசிரமத்தில் அளவற்ற மலர்களைத் தம்மிடம் தயாராக வைத்திருப்பார். பக்தர்கள் அவருடைய குடிலுக்கோ அல்லது அலுவலகத்திற்கோ பெருந்திரளாக வரும்போது குருதேவரே அவர்களுக்கு வழிபாடு செய்வார்.

ஆர்வம் மிகுந்த சீடர்கள் சிலர் அவருடைய திருவடிகளுக்குப் பூஜை செய்யும் நாட்களில் குருதேவர் தாமாகவே தம் கைகளில் மலர்களை ஏந்திக்கொண்டு எல்லா இடங்களுக்கும் வந்து, தம்மை வழிபட்ட பக்தர்கள் ஒவ்வொருவரையும் தனித் தனியே சந்தித்து வழிபாடு செய்வார். அவருடைய முகத்தில் வெளிப்பட்ட பாவனையையும், அவருடைய கண்களில் வெளிப்பட்ட பக்தியையும் கருத்துடன் கவனித்தவர்கள் மட்டுமே குருதேவர் தம் முன்னே நிற்கும் பக்தர் ஒவ்வொருவரையும் இறைவனின் உண்மையான தோற்றமாகவே உணர்ந்தார் என்ற உண்மையை அறிவார்கள்.

சிவராத்திரியின்போது (சிவபெருமானுக்குரிய விழா) ஒரு நாள், சிவபெருமானுக்கு இரவு முழுவதும் செய்யும் வழிபாட்டில் ஈடுபட்டிருந்தோம். அப்போது இரவில் மூன்று மணி நேரத்துக்கு ஒரு தடவையாக, நான்கு தடவைகள் பூஜை நடைபெறும். கோயிலின் முற்றத்தில் சிவபெருமானுக்குரிய திரு ஐந்தெழுத்து (ஓம் நமச்சிவாய) மந்திரத்தைத் தொடர்ந்து பாடும் நிகழ்ச்சியைக் குருதேவரே நடத்துவார். இறுதிக்கட்டத்தின் பின்பு இறைவனுக்கு மலர் அர்ச்சனை செய்வார்கள்; பக்தர்கள் புனிதம் மிகுந்த கருவறைக்கு விரைந்து சென்று சிவலிங்கத்தின்மீது (சிவபெருமானுடைய

அடையாளத் திருவுருவம் அல்லது சிலை) தூய வில்வ இலைகளை இடுவார்கள். சிலர் சிவலிங்கத்தின்மீது வில்வ இலைகளை வீசுவார்கள்; சிலர் அரைத்தூக்கத்தில் இருப்பவர்களாய்த் தம் கைகளிலிருந்து வில்வ இலைகளை நழுவ விடுவார்கள். பக்தியுணர்வு மிகுந்த அன்பர்கள் சிலர் இச்சடங்கை ஒரு சமயக் கடமையாகச் செய்தனர்; அவர்களுக்குச் சிவலிங்கம் என்பது இறைவனை ஏதோ ஒருவகையில் குறிக்கின்ற கற்சிலையாகும்; எவ்வாறு குறிக்கின்றது என்பதை அவர்கள் அறிய மாட்டார்கள். கடைசியாகக் குருதேவர் தம் கைகளில் வில்வ இலைகளை ஏந்தி வருவார். அவருடைய முகம் அசாதாரண ஒளியுடன் பொலிவு பெற்றுத் திகழும். புனித எருதாகிய நந்தியின் திருவடிகளில் சில இலைகளை மிகவும் மெதுவாகவும், இனிமையாகவும், பக்தியாகவும் இட்டு இறைவனை வழிபடுவதற்கு அனுமதி கேட்பார். இலைகளை இடுவதற்கு முன்பு, குருதேவர் சிவலிங்கத்தைப் பார்க்கும்போது வழிபாடு செய்யமாட்டார்; அருட்பாடல்களைப் பாடவும் மாட்டார்; இறைவனுடைய திருநாமங்களை உரக்க உச்சரிக்கவும் மாட்டார்; ஆனால் அவருடைய கண்கள் சிவலிங்கத்துடன் பேசும். அவருக்கு அது உயிர் வாழும் ஓர் உண்மை. இவ்வாறு அவருடைய ஒவ்வொரு அசைவும் அவருடைய மென்மை, மிருதுவான தன்மை ஆகியவற்றை விளக்கின. அத்துடன் அவர், கண்ணிமைக்கும் நேரத்திற்குள், யாரும் கவனிப்பதற்கு முன்னே, நேர் பின்னால் திரும்பி, பக்தர்களை மலர்கள் இட்டு வணங்குவார். ''இறைவன் அங்கு மட்டும் இல்லை; எங்கும் இருக்கின்றார்''. குருதேவர் அனைவருள்ளும் உறையும் இறைவனை வணங்கினார்; எங்கும் நிறைந்துள்ள இறைவனை வணங்கினார்.

## விபூதி யோகம்

பகவத் கீதையின் பத்தாம் அத்தியாயத்தில் விளக்கிச் சொல்லப்பட்டுள்ள விபூதி யோகத்திற்கு (இறைவனுடைய பெருமைகளையும் தோற்றங்களையும் பற்றிய யோகம்) அண்மைக் காலத்தில் மிகப்பெரிய, அனேகமாக ஒரே ஒரு வழிகாட்டியாக விளங்கியவர் குருதேவர். அவருடைய

புகழ் மிக்க, அகில இந்தியச் சுற்றுப் பயணங்களின்போது அல்லது ஆசிரமத்திலேயே நடைபெற்ற சிறப்பு விழாக்களின் போது, அவருடைய கிளர்ச்சியூட்டும் பேருரைகளைச் செவி மடுத்தவர்கள், குருதேவர் இந்தப் பயிற்சிக்கு மிகவும் முக்கியத்துவம் தந்து வற்புறுத்தியதைக் கவனிக்கத் தவறி இருக்க மாட்டார்கள். இராஜ, பக்தி, கர்ம, ஞானயோகங் களுக்குச் சமமாக இந்த யோகத்தைப் பெருமைப்படுத்தி விளக்கினர். அது சக்தி மிகுந்த ஞானபக்தி யோகமாகும். கீதையில் கண்ணபிரான் வழங்கியுள்ள விபூதிகளின் (பெருமைகள் அல்லது தோற்றங்கள்) பட்டியலில் குருதேவர் தமக்குச் சொந்தமான மிகச் சிலவற்றைச் சேர்த்தார். விபூதி யோகத்தைப் பற்றி அவர் பாடியுள்ள பாடல் :

சோகம் சோகம் சிவோகம் சோகம்
ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம் ஓம்
நான் மனமும் அல்ல; உடம்பும் அல்ல. அழியாத உயிர், நான்.
நான் மூன்று அவஸ்த்தைகளையும் காண்போன் — நான் வரம்பற்ற பேரறிவு.
மல்லிகையில் மணம் நான். மலர்களில் அழகு நான்.
பனிக்கட்டியில் குளிர்ச்சி நான். (பருகும்) காப்பியில் சுவை நான்.
இலையில் பச்சை நான். வானவில்லில் நிறம் நான்.
நாவில் அரும்பும் ரசம் நான். ஆரஞ்சுப்பழத்தில் சாறு நான்.
அனைத்து மனங்களின் மனம் நான். அனைத்துப் பிராணன்களின் பிராணன் நான்.
அனைத்து இதயங்களின் இதயம் நான். அனைத்து உயிர்களின் உயிர் நான்.
அனைத்து உயிர்களினுள்ளும் உறைகின்ற ஆன்மா நான்.
அனைத்துக் கண்களினுள்ளும் ஒளியாக உள்ள பாவை நான்.
சூரியர்களுக் கெல்லாம் சூரியன், ஒளிகளுக்கு எல்லாம் ஒளி, முதலியன அனைத்தும் நான்.
நானே அது. அதுவே நான்
நானே அது. அதுவே நான்.

பகவான் கீதையில் கருதியுள்ள கருத்து இதுவே என்பது தெளிவு; அங்கு அவர் இந்தப் பயிற்சிக்கான அணுகு முறையைக் கோடிட்டு மட்டும் காட்டியுள்ளார்; விபூதிகளின் பட்டியலைத் தாம் நிறைவு செய்யவில்லை என்பதை அவரே ஒப்புக் கொண்டுள்ளார்.

விபூதி யோகத்தைக் குருதேவர் எவ்வாறு பயிற்சி செய்தார்? ஒவ்வொரு பொருளும் அவருக்கு இறைவனுடைய தோற்றத்தை நினைவூட்டியது. தம் அறையை விட்டு வெளியே வந்து கங்கையைப் பார்க்கும்போது ''ஆறுகளில் நான் கங்கையாக இருக்கின்றேன்'' என்றும், இமயத்தின் காட்சியில் லயிக்கும்போது, அசையாத மலைகளில் நான் இமயமாக இருக்கின்றேன்'' என்றும் கண்ணபிரான் கூறிய மொழிகளை நினைவில் கொள்வார். சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், அரசமரம், அறிவு நலம் மிகுந்த சான்றோர்கள், உடல் வலிமை மிகுந்த மற்போர் வீரர்கள், குத்துச் சண்டை வீரர்கள், விளையாட்டு வீரர்கள்கூட இறைவனுடைய தோற்றங்களே. அவர்களுடைய வலிமையைப் பார்க்கும்போது நீங்கள் ஏதோ ஒரு தெய்வீகத் தன்மையை உணர்கின்றீர்கள். குருதேவர் செல்வந்தர்களுக்கு மட்டுமே ஆதரவு காட்டுவது போல அடிக்கடி தோன்றும்; ஆனால் குருதேவருக்கு ஒரு மனிதருடைய அளவற்ற செல்வம், இறைவனுடைய மற்றொரு விபூதியாகும்; ஒருவருடைய முன்னேற்றம் அறிவாற்றலின் பொலிவு ஆகியனவும் தெய்வீகமாகும். கண்ணபிரான், ''அறிஞர்களின் அறிவு நான்'' என்று கூறியுள்ளார். மனித உடம்பின் தனிப்பட்ட தோற்றத்தைக் காண்பதற்குத் தனிப் பயிற்சி வேண்டியதில்லை; ஆனால் தெய்வீகத் தோற்றத்தின் சுடரை — ஒளியைக் காண்பதற்கு ஓரளவு பயிற்சி மிகவும் இன்றியமையாதது.

பொதுவாகப் ''பொறி புலன்களுக்கு உணவாக'' அமையும் பொருள்கள் கூட அவருக்கு வேறொரு வகையாகக் காட்சிதந்தன. சுவையுள்ள உணவு அவருடைய சுவை

காணும் நரம்புகட்கு மகிழ்ச்சி தந்ததுடன் நில்லாமல் எல்லா உணவுகளிலும் சுவைப் பொருளாக உள்ள இறைவனை அவருக்கு நினைவூட்டியது. இசை, அவருடைய உள்ளுணர்வை வெளியில் கொணர்ந்து மனத்தைத் தொந்தரவு செய்யாமல் அவர் தம்முடைய சகஜ அவஸ்த்தையை (இயல்பாகவும் தொடர்ச்சியாகவும் அமைந்த மேலாம் மெய்யுணர்வு நிலை) பாதுகாக்கவே உதவியது. இவை எல்லாவற்றுள்ளும் இறைவனுடைய சக்தியையே அவர் கண்டார். காட்டில் நிலவும் அமைதி அச்சுறுத்துவதாக நீடிக்கவில்லை. இறைவனுடைய ஒரு தோற்றமாக அது அமைந்தது. இவ்வாறு ஒவ்வொரு பொருளிலும் அன்புக்குரிய இனிய இறைவனே காணப்பட்டார். உணரப் பட்டார். இடையறாது தொடர்ந்து இறைவனுடைய இருப்பை உணரும் இவ் உணர்வே சகஜ அவஸ்த்தையாகும்.

முதன் முதலாகப் பார்க்கும்போது இப்பயிற்சி மிகவும் சுலபம்போல் தோன்றுகின்றது; ஆனால் இப்பயிற்சி அவ்வாறு சுலபமானது அல்ல. மனம், விருப்பத்தினால் பொருள்களுடன் ஒட்டிக்கொள்ளுகின்ற அல்லது வெறுப்பினால் அவற்றை விட்டு விலகிச் செல்கின்ற விருப்பு, வெறுப்புக்கள் உள்ள ஒரு பிராணி. பொறிகள், பொருள்களைத் தமக்கு உணவாகவும், இன்பநுகர்ச்சிக்குரிய மூலங்களாகவும் கருதப் பழகிவிட்டன. சிறிதுகூட அவை அடங்குவதில்லை. இறைவனுடைய இருப்பை உணரும் சாதனையாகிய விபூதி யோகப் பயிற்சியில் எல்லா உயிர்களினுள்ளும் இறைவன் உறைவதனால் அவ்வுயிரினங்களிடத்தில் இடையறாமல் தொடர்ந்து அன்பு செலுத்தவேண்டும் என்பது சிறப்பு விதியாக உள்ளது. எனவே இப்பயிற்சியில் பொறிகள் தம் சுவைகளைத் தேடிச் செல்லும் போக்குக்கு இடமில்லை.

அனைத்துள்ளும் இறைவனைக்காணும் பழக்கத்தில் ஆன்மீகச் சாதகரை நிலைபெறச் செய்வதற்காகக் குருதேவர் முதலில் இறைவனைத் தெய்வீகச் சிறப்புள்ள எல்லாத் தோற்றங்களிலும் காணுங்கள். மேலே பாருங்கள்.

முடிவில்லாமல் பரந்து விளங்கும் நீல வானத்தைப் பாருங்கள். இது உங்களுக்கு இறைவனை நினைவூட்டவில்லையா? ஒளிமிக்க சூரியனைப் பாருங்கள்; கூடவே சுய ஒளியுடன் திகழும் ஆன்மாவைத் தியானியுங்கள். கங்கையின் புனித நீரைப் பாருங்கள். அதில் இறைவனைக் காணுங்கள். இத்தகைய தோற்றங்களுக்கு மானசீகமாக வணக்கம் செலுத்துங்கள். மெதுவாக இக்காட்சி வளர்ந்து கழுதைகளிலும்கூட இறைவனைக் காணச் செய்யும். தீமை பற்றிய கருத்தை உங்கள் மனத்திலிருந்து வேருடன் களைந்தெறியுங்கள். தீயவன் என்று உங்கள் மனம் கருதும் ஒருவனைக் காணும்போது, ''நயவஞ்சகருள் நான் சூதாட்டமாக இருக்கின்றேன்'' (த்யுதம் சாலயாதமஸ்மி) என்று மனத்தில் உச்சரியுங்கள். அவனுள் உறையும் இறைவனைக் காணுங்கள். வெறுப்பெல்லாம் உடனே மறைந்துவிடும். கொள்ளை அடிப்பவனைக் கண்டு நீங்கள் வெறுக்கவும் மாட்டீர்கள்; அஞ்சவும் மாட்டீர்கள். ஏனெனில் இறைவனே கொள்ளையடிப்பவர்களுக்கெல்லாம் தலைவராக இருக்கின்றார். — தஸ்காராணும் பதயே நம: ''நாளடைவில் நீங்கள் இறைவன் எங்கும் நிறைந்திருப்பதை உணரும் பயிற்சியில் உறுதியாக நிலைகொள்வீர்கள்'' என்று உபதேசிப்பார். இப்பயிற்சியை மேலும் தீவிரமாய் பயில்வதற்கு உதவியாக இருக்கும் பொருட்டு குருதேவர் சாதகரிடம் காணும் பொருளுடன் கூட உதவியாக ஏதேனும் நல்ல மந்திரம், சுலோகம் அல்லது சூத்திரம் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுமாறு கேட்டுக்கொள்ளுவார். உதாரணமாக:

1) ஆகாசவத் சர்வகத நித்ய (ஆகாயத்தைப் போலப் பிரம்மம் எல்லா இடங்களிலும் வியாபித்திருக்கின்றது; அழியாமல் இருக்கின்றது.)

2) புசன்னே கர்சே யம சூர்ய ப்ரஜாபத்ய வ்யூஹரஸ்மின் சமூஹ தேஜோ யத்தே ரூபம் கல்யாண தமம் தத் தே பஸ்யாமி யோஸவாஸவ் புருஷ:— சோஹமஸ்மி (உபநிஷதம்). (சூரியனே! எங்களை உணவூட்டி வளர்ப்பவரே! அண்டங்கள் முழுவதும் பயணம் செய்யும் ஒரே

*பயணியாக உள்ளவரே! அனைவரையும் அடக்கி ஆள்பவரே! சூரியனே! பிரஜாபதியின் புதல்வரே! உங்கள் பெருமை பொருந்திய வடிவைப் பார்க்கின்றேன். நான் அவராக உங்களின் உள் உறையும் புருஷராக இருக்கின்றேன்).*

*3) ஜ்யோ திஷமபி தத் ஜ்யோதிஹ் தமஸா பரமுச்யதே ஞானம் நேயம் ஞானகம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஸிதம். (கீதை). (ஒளிகளுக்கெல்லாம் ஒளியாக உள்ள அது, இருளுக்கும், அறிவுக்கும், அறியப்படும் பொருளுக்கும், அறிவின் எல்லைக்கும் அப்பாற்பட்டு விளங்குகின்றது; அனைவர் இதயங்களினுள்ளும் வீற்றிருக்கின்றது)*

*இந்த விபூதி யோகப் பயிற்சியுடன் மிகவும் நெருங்கிய தொடர்புடையது, நமஸ்கார யோகம் — பணிவுடன் வீழ்ந்து வணங்கும் யோகம். இந்த யோகத்தைப் பயில்கின்றவர், உயர்வு, தாழ்வு என்ற வேறுபாட்டைப் பாராட்டாமல், எல்லா உயிரினங்களுக்கும், கழுதைகள், மரங்கள், உயிரற்ற பொருள்களுக்கும் கூட ஒரே மாதிரியாகப் பணிவான வணக்கத்தைச் செலுத்துகின்றார்; இதனால் அவர் தமது அளவில்லாத செருக்கை, வளையாத ஆணவத்தைச், சிறுமை நிறைந்த அகந்தையை அழிப்பதில் வெற்றி பெறுகின்றார்; மன அமைதியையும் இதயத் தூய்மையையும் எய்துகின்றார்; இவ்விரண்டும் ஆன்மீகப் பயிற்சியில் உயர் நிலையை எட்டுவதற்கு முதல் தேவைகளாக உள்ளன.*

*ஆன்மீக பயிற்சி நிறைவு பெறுவதற்குரிய அங்கமாகக் குருதேவர் இதனை இணைக்கும் வரையில், மதிப்புயர்ந்த இந்தப் பயிற்சி அனைவராலும், சிறப்பாகத் துறவிகளாலும், ரிஷிகேசத்தின் பெரிய பரமஹம்ச சந்நியாசிகளாலும், முற்றிலும் புறக்கணிக்கப்பட்டு வந்தது. மற்றவர்களுக்குப் பணிந்து வணங்க அவர்கள் விரும்பவில்லை. தங்களின் விருப்பமின்மையைத் திரையிட்டு மறைப்பதற்காக அவர்கள் ''யாருக்கு யார் பணிந்து வணங்குவது?'' என்ற வினாவை எழுப்பினார்கள். அவர்கள் தங்கள் ஆன்மீகப் பயிற்சியில் ஓர்*

இணைப்பு விட்டுப் போயிருப்பதைக் குருதேவரின் உதவியால் கண்டு கொண்டார்கள். செல்வம், பிறப்பு, கல்வி முதலிய வற்றால் தோன்றும் அகந்தையைக்காட்டிலும், உலகியல் பொருள்களை வெறுத்து மேற்கொண்ட துறவினாலும், தத்துவச் சிந்தனையாலும், ஆன்மீகப் பயிற்சியாலும் தோன்றும் அகந்தை, போராடி வெல்வதற்குக் கடினமாக மிகுந்த சக்தி வாய்ந்து விளங்குகின்றது எனினும்; விவேகம் இல்லை என்றால் வெற்றி பெற முடியாது என்றும் அவர்கள் குருதேவரிடமிருந்து கற்றுக் கொண்டார்கள். சரியான மனப் பான்மையுடன் செய்யப்படும் நமஸ்கார யோகம், இந்த நுண்மையான அகந்தையை நம் பக்கத்தில் வராமல் சேய் மையில் செல்லும்படியாக விரட்டத்தக்க மிகச் சிறந்த வழிகளில் ஒன்றாகும். தம் சீடர்களின் உள்ளங்களில் இந்தப் பணிவுடைமையை ஓர் இயற்கைக் குணமாகப் பதியச் செய் வதற்குக் குருதேவர் இடையறாது பாடுபட்டார். தம் சீடர்கள் எல்லோரையும் அவர் கடவுள்களாகவே பாவித்து வந்தார். ஏதேனும் ஒரு பணியைப் பற்றிக் கேட்கவோ அல்லது சொல்லவோ வேண்டியிருந்தாலும் கூட அவர் தம் சீடர்களைத் தம்மிடம் வருமாறு சொல்லி அனுப்ப மாட்டார்; (அவர் அறுபது வயதைக் கடந்தவராக இருந்தும் கூட) அவரே ஒவ்வொரு அறையாக அவர்களை நாடிச் செல்வார்; அப்போது அவர் முகத்தில் சுடர் விடும் முகக் குறிப்பைச் சொற்களால் விளக்க இயலாது. அக் குறிப்பின் பொருள், 'தாங்களே என் குருதேவர். தாங்களே என் தெய்வம்' என்பதாகும்.

குருதேவரின் முதற் சீடராகிய சுவாமி பரமானந்தாஜி அவர்கள், 1930-ல் ஸ்வர்க்க ஆசிரமத்தில், குருதேவருடன் தொடர்புகொண்ட ஆரம்ப நாட்களில் நிகழ்ந்த ஓர் அழகான நிகழ்சியை நினைவு கூர்ந்தார். இந்த இளைஞர் — அப்போது துறவியாக இருக்கவில்லை — இன்னும் மிகவும் இளமையாக இருந்தார் — குருதேவரின் சீடராக ஆகவேண்டும் என்ற நோக்கத்துடன் வந்தார். சுவாமி சிவானந்தர் அவரிடம், ஒரு "துறவியிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?

அவருக்கு எப்படி வணக்கம் செலுத்த வேண்டும்? என்பவை தங்களுக்குத் தெரியுமா?'' என்று வினவினர். தாமே விடையும் வழங்கினர். ''நீங்கள் அங்கே நில்லுங்கள், நான் செய்து காட்டுகின்றேன்'' என்று சொல்லித் தரையில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து அச்சிறுவரின் காலடியில் பணிந்து வணங்கினர்.

ஆசிரமத்திற்கு வரும் பார்வையாளர்களும், குருதேவரின் சுற்றுப்பயணங்களின்போது அவருடன் தொடர்பு கொண்டவர்களும், அவர்கள் குருதேவரைச் சந்தித்த போதெல்லாம் அவரே முதலில் பணிந்து அவர்களுடைய காலடிகளைத் தொட்டு வணங்கிய நிகழ்ச்சிகளை நினைவு கூர்ந்து தெரிவிக்கின்றனர். பிறகு தான் அவர்கள் அவருடைய திருவடிகளைத் தொட முடிந்தது; எனினும் குருதேவரிடம் இதனல் சிறிதளவு கூட மாற்றம் ஏற்படவில்லை. அவர் தம்முடைய பயிற்சியைத் தொடர்ந்து செய்து வந்தார்; முடிவில் இப்பழக்கம் மற்றவர்களிடமும் தொற்றிப் பரவியது; உண்மையான பணிவுடைமையை வளர்க்கும் சக்தியுள்ள எச்செயலும் புறக்கணிக்கப்படக் கூடாது என்று அவர்கள் தெரிந்து கொண்டார்கள். அவர் மற்றவரின் காலடிகளில் பணிந்து விழுந்தார் அல்லது வணங்கினர் என்பதனல் மட்டும் அது பணிவுடைமை ஆகும் என்று நான் கருதவில்லை. இல்லை, நீங்கள் அவருடைய முகத்தைப் பார்க்க வேண்டும்; அவருடைய கண்களைப் பார்க்க வேண்டும்; 'உங்களை' அவர் அறவே பார்க்கவில்லை என்று நீங்கள் பார்க்க வேண்டும். பணிந்து வணங்கும்போது குருதேவர் எப்போதும் மாறுதலின்றி ''ஓம் நமோ நாராயணய'' (பரம் பொருளுக்கு வணக்கங்கள்) என்ற மந்திரத்தை உச்சரிப்பார்; இதன் உட்பொருள்; ஒருவரின் சலுகையைப் பெறுவதற்காக அவருடைய பூத உடலை அவர் பணிந்து வணங்கவில்லை; உலகனைத்திலும் உள்ள எல்லா உயிரினங்களிலும் தோற்றம் தரும் இறைவனையே பணிகின்ருர் என்பதாகும். அவருடைய முகத்தில் அழகான அமைதியும் பொலிவும் குடிகொண்டி

ருக்கும், பின்னர் அவர் உங்களுடன் உரையாடுவார்; நகையாடுவார்; ஆனால் உங்களை வணங்கும்போது. தெய்வத்தின் முன்னால் தாம் நிற்பதாகவே கருதிச் செய்வார். ஆதலால் அவர் தம் முன்னால் நிற்பவர் யார் என்பதைப் பற்றிச் சிறிதளவும் பொருட்படுத்த வில்லை. புகழ் மிக்க துறவியோ, வணங்கத்தக்க ஆசிரமவாசியோ, பக்தியுள்ள இல்லற வாசியோ, சாத்தானின் சீடனோ, அடிப்பட்ட குற்ற வாளியோ—இப்படி யாராக இருந்தாலும் சரி—ஒவ்வொருவரும் அவருடைய வணக்கங்களைப் பெற்றனர். அவரைக் காட்டிலும் வயது மிகவும் குறைந்தவர்களும் இப்பேற்றைப் பெற்றனர். அழியும் உடலுக்குத்தான் வயது உண்டு; அதில் மறைந்துள்ள அமரத்துவ நாராயண இறைவனுக்கு வயது இல்லை. இவ்வணக்கம் ஒரு வெறும் நடிப்பு அன்று; குருதேவரின் இதய ஆழத்திலிருந்து, எங்கும் நிறைந்துள்ள இறைவனுடன் இரண்டறக் கலந்த நேரடி மெய்யுணர்வி லிருந்து, தோன்றியதாகும்; அனைவரையும் உண்மையாக வணங்கும் வணக்கத்துடன் அது இணைக்கப்பட்டது. இவ்வுலகில் வேறுயாரிடத்திலும் இப்பணிவுடைமையை நான் கண்டதில்லை.

நடமாடும் தெய்வமும் உலக குருவுமாகிய இவர் யாருடன் பேசினாலும் மரியாதைப் பண்மையுள்ள சொற்களையே எப்போதும் பயன்படுத்துவார்; ஒரு குழந்தையினிடம் கூட இந்திமொழியில் ''ஆப்'' என்றும், தமிழ் மொழியில் ''நீங்கள்'' என்றும் பேசுவார். ஒரு கடுமொழியோ அல்லது சுடுசொல்லோ, கனவில் கூட அவருடைய உதடுகளிலிருந்து வெளிப்படமுடியாது. அவர் மக்களை மனிதர்களாகக் கருதி ஒரு போதும் பேசியதில்லை; ஆனால் அவர் ஒவ்வொருவரையும் தெய்வமாகவே மதித்து வந்தார்.

ஆதலால் குருதேவரின் சீடர்கள், யாரும் பொறாமைப் பட முடியாத இந்த அனுபவத்தை நாள்தோறும் அனுபவிக்க வேண்டியதாயிற்று. சீடரை நோக்கித் தம்

கைகளைக் குவித்துப் பணிவுடன் வணங்குவதுடன் நில்லாமல், குருதேவர் இறைவனுடைய திருநாமத்தை உச்சரிக்கும் அதேமுறையில் சீடருடைய திரு நாமத்தையும் உச்சரிப்பார். காலைநேரத்தில் அவர் தம் குடிலைவிட்டுப் புறப்பட்டு அலுவலகத்துக்குச் செல்லும் வழியில் எதிர்ப்படும் சீடர்களுக்கு அவர் வணக்கம் சொல்லும் புனித வாய்ப்பாடு பின்வருமாறு.

''அரோகரா, தத்துவமசி, ஓம் சாந்தி, பஹு மிகுதா முபாரக், நமச்சிவாய, நமோ நாராயணாய, நமோ பகவதே வாசுதேவாய, நமோ பகவதே . . . . . . (குறிப்பிட்ட சீடரின் பெயரைப் பயன்படுத்தி) நமோ பகவதே கங்காராணி, ஹரி ஓம் தத் ஸத்.''

தம் சீடர்கள் பரிபக்குவ வளர்ச்சியை அடையட்டும் என்று கருதி அவர்களுக்குக் கடுமையான கட்டுப்பாடுகளை விதிப்பவர்களும், நயமாகப் பல இன்னல்களைத் திணிப்பவர்களும், சேவை செய்யக் கட்டாயப்படுத்தி வேலை வாங்குவோரும் ஆக இருக்கின்ற குருமார்களைப்பற்றி நாம் கேள்விப்பட்டிருக்கின்றோம். ஒவ்வொரு முறையும் கண்டிப்பதன் வாயிலாகவும், தேவைப்பட்டால் பிரம்பைப் பயன்படுத்துவதன் வாயிலாகவும் அவர்கள் தம் சீடர்களுக்குப் போதித்தார்கள். 'குரு' என்னும் சொல்லுக்கு மரபு வழக்காகத் தரப்படும் விளக்கங்களுள் ஒன்று, ''உங்களுடைய கையைப் பற்றித் தெய்வீக மெய்யுணர்வுக்கு அழைத்துச் செல்பவர்; யாரிடம் நீங்கள் உங்கள் தனு, மனம், தனம் (பொருள் :- உடல், உள்ளம், செல்வம்) ஆகியவற்றை ஒப்படைக்கிறீர்களோ, அவர்'' என்பதாகும். உங்களுக்குச் சொந்தமாகவுள்ள ஒவ்வொரு பொருளையும் நீங்கள் குருவினிடம் ஒப்படைக்கின்றீர்கள்; இவ்வாறு அடைக்கலம் புகுந்த பின்னர் அவர் உங்களுக்கு மெய்யுணர்தல் பற்றிய அறிவைப் போதிக்கின்றார்.

குருதேவர் தனிப்பெருமை வாய்ந்தவர்; ஏனெனில் முதல் முதலில் அவர், தம் சீடர்கள் தாமாகவே தம்மிடம்

வந்து அடைக்கலம் அடையவேண்டும் என்று எதிர்பார்க்க மாட்டார். அவர் அவர்களுக்கு முழு நிறைவான சுதந்திரத்தை வழங்குவார்; ஏனெனில் நீங்கள் உங்கள் உள்ளத்தில், நீங்களாகவே, உங்களின் ஆன்ம நலத்தின் பொருட்டு, தன்னலத்திலிருந்தும், பெரும் அளவில் உலகப் பற்றிலிருந்தும் உங்களை விடுவித்துக்கொள்ள வேண்டும் என்று அவர் சுட்டிக் காட்டுவார். சீடர்கள் தம் பயிற்சிக்கும், ஆன்மீகப் பரிபக்குவ வளர்ச்சிக்கும் தேவைப்படும் எல்லா வசதிகளையும் பெறுவதற்காகக் குருதேவர் பல்வேறு இன்னல்களையும் தம்மீது திணித்துக்கொண்டு சீடர்களுக்குப் பணிவிடை செய்தார். தம் சீடர்களின்மீது எந்த வகையான ஒழுங்கு முறையையும் கட்டாயப் படுத்துவது பற்றி அவர் கனவுகூடக் கண்டதில்லை. அவர் போதிக்கப் பயன்படுத்திய ஒரேவழி தாமே உதாரணமாக விளங்குதலே; இதுவும் சீடரின் கவனத்தை உதாரணத்தின்பால் திருப்பாமலே கூடச் செய்யப்பட்டது. நாள்தோறும் அவர் தெய்வீக வாழ்க்கையின் கொள்கைகளை வாழ்ந்துகாட்டி விளக்கிக் கொண்டிருப்பார்; அதனால் ஒருநாள், ஏதேனும் ஒருநாள், சீடர் பணிவாக இருக்கவும், அனைவரையும் பணிந்து வணங்கவும், அனைத்துள்ளும் இறைவனைக் காணவும் கற்றுக் கொள்ளுவார்.

## பக்திப் பாடல்கள்

சங்கீர்த்தனம் என்பது இறைவனுடைய திருநாமங்களைப் பற்றிய பக்திப் பாட்டுக்களாகும். சங்கீர்த்தனம், குருதேவர் என்பன பெரும்பாலும் ஒரே பொருளுள்ள சொற்களே யாகும். சங்கீர்த்தனம் அவரால் மறுமலர்ச்சி பெற்றது; அவருடைய வாழ்வு, இயக்கம் ஆகியவற்றின் பல பகுதிகளைப் போலவே இதிலும் குருதேவர், அண்மைக் காலங்களில் வாழ்ந்த முதன்மை வாய்ந்த ஞானியரை இணைக்கும் இணைப்பின் பிரதிநிதியாக இருந்தார். கௌராங்க மகா பிரபுவைப்போல, இந்தியா முழுவதும் எண்ணற்ற பல மேடைகளில் மகா மந்திரத்தை (இந்தக் கலியுகத்திற்குரிய

மிகப்பெரிய மந்திரம்; தன்னைச் சரண் அடைவோருக்கு மிக எளிதில் முக்தியை வழங்குவது) அவர் பாடினார்; ஆனந்தக் கூத்து ஆடினார். அம் மந்திரம் பின்வருமாறு:

ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண
ஹரே ஹரே

ஸ்ரீ சைதன்யருடன் குருதேவர் ஆகமங்களில் ஆழ்ந்த ஞானத்தையும், வேதாந்தத்தில் உறுதியான அடித்தளத்தையும் பகிர்ந்து கொண்டார். இதன் கருத்து, சங்கீர்த்தனம் ஞானத்திலிருந்து தோன்றியதே தவிர, வெறும் மூட நம்பிக்கையுணர்விஞல் தோன்றியதன்று என்பதேயாகும். மீராபாயைப்போல அவர் பாடல்களை மிகுந்த பக்தியுடன் பாடினார்; கபீரைப்போல அவர், வைராக்கியம், விவேகம் ஆகிய உணர்வுகள் நிறைந்துள்ள இசைப் பாடல்களைப் புனைந்தார்.

உண்மையில் குருதேவரின் முழு இயக்கமும் பஞ்சாப்பில் அவர் தலைமை தாங்கி நடத்திய சங்கீர்த்தன மாநாடுகளுடன் தொடங்கியது. இனிமையாகப் பாடுங் குரலும், இசைத் திறமும் அவருக்கு வாய்த்திருந்தன; எனவே தம் சங்கீர்த்தனத்தால் மிகப் பலருடைய வாழ்வுகளில் நல்லுணர்ச்சியையூட்டவும் நல்ல மாற்றத்தை ஏற்படுத்தவும், நாத்திகரைப் பக்தர்களாக மாற்றவும் அவரால் முடிந்தது.

பக்தியுடன் பாடுவதையும் ஆடுவதையும் அவர் நேசித்தார். குருதேவருடைய தோற்றம் கம்பீரமும் கவர்ச்சியும் வாய்ந்தது; அவர் மகிழ்ச்சிக் கூத்தை ஆடினாலும், ஆடவில்லையென்றாலும் அவருடைய தோற்றம் களிப்பு நிறைந்தது; அழகு நிறைந்தது; அவர் 'சிதானந்த், சிதானந்த், சிதானந்த ஹம்' என்று பாடியவாறு ஆடுவதைக் காண்பதற்கு மிகவும் கிளர்ச்சியூட்டுவதாக இருக்கும். தம் முப்பதாம் வயதுகளில் தொடக்க காலத்தில், முதலில்

செய்ய வேண்டும் என்று தாமே தீர்மானித்து அமைத்துக் கொண்டது இதுவே யாகும். சுவாமி பரமாத்மானந்தர் அவர்களுக்குக் குருதேவர் எழுதிய கடிதத்தில், ''நாம் அவசியம் செய்ய வேண்டியது இதுவே; சங்கீர்த்தனம் பாட வேண்டும்; சங்கீர்த்தனத்தின் வாயிலாக மட்டுமே நாம் இந்தியாவையும் உலகத்தையும் வெல்ல வேண்டும்; மாற்ற வேண்டும்; ஆன்மீகப் புரட்சியைத் தோற்றுவிக்க வேண்டும்'' என்று எழுதியுள்ளார். இதுபோன்ற பாடலை யும் ஆடலையும், மற்றும் இதுபோல் உள்ள பக்திப் பயிற்சி களையும் வளர்ப்பதற்காக நிறுவப்பெற்ற சங்கங்களுடன் தம்மை இணைத்துக்கொள்ள அனுமதிப்பதன் வாயிலாக் அவருடைய முழு இயக்கமும் தொடங்கியது. ஆனுல் அவர் வெகு சீக்கிரத்தில் கண்டுகொண்ட உண்மை, ஒரு பக்திச் சங்கம் நிறுவப்பட்டவுடனே சங்கத்தின் அதிகாரம் மேலும் மேலும் ஓங்குகிறது என்பதும், பக்தி மேலும் மேலும் தளர்கிறது என்பதும் ஆகும். இது மிகவும் அபாயகர மானது என்று அவர் கருதினுர். வெறும் பாடல் மட்டும் உணர்ச்சியை வளர்க்கிறது என்பதையும் அவர் கண்டு கொண்டார். இது இப்படி இருக்கக்கூடாது. எனவே எல்லாவகையான யோகங்களையும் சங்கீர்த்தனத்துடன் இணைக்கின்ற தெய்வீக வாழ்க்கைச் சங்கம் தோற்றுவிக்கப் பட்டது.

தத்துவ முறையில் கிளர்ச்சியூட்டும் அவருடைய பாடல்கள் அவருடைய போதனைகளின் சாரத்தைக் கொண் டுள்ளன; உலகம் முழுவதும் பயணம் செய்யக்கூடிய வகையில் எளிய சொற்களால் அவை புனையப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு பாடல் பின்வருமாறு:—

சுஞ்ஜா சுஞ்ஜா சுஞ்ஜா கிருஷ்ண
து — கீதா — வாலா ஞான சுஞ்ஜா கிருஷ்ண —
சேவை செய். அன்பு செய். ஈகை செய்.
தூய்மை செய். தியானம் செய். மெய்யுணர்தல் செய்.
நல்லவராக இரு. நல்லதைச் செய். இரக்கம் காட்டு.
கருணை பாராட்டு.

'நான் யார்' என்று விசாரி. உன்னை அறிந்து கொள்.
விடுதலை பெறு.
தழுவு. சரிப்படுத்திக் கொள்.
மற்றவருக்கும் இடம் கொடு.
இகழ்ச்சியைப் பொறுத்துக் கொள்.
தீங்கைப் பொறுத்துக் கொள்.
மிகப் பெரிய சாதனை. (இதுவே).
மேன்மையாக இரு, நேர்மையாக இரு,
உண்மையாக இரு.

பொறுமையாக இரு. பணிதல் மேற்கொள்.
சகிப்புத்தன்மையுடன் இரு.
மென்மையுள்ளவராக இரு. பணிவுள்ளவராக இரு.
பண்புள்ளவராக இரு.
துணிச்சல் நிறைந்திரு, தூய்மை நிறைந்திரு,
ஞானம் நிறைந்திரு, அறம் நிறைந்திரு,
நிலையாக இரு. அமைதியாக இரு.
உன்னை அறிந்து கொள்.

தூய்மை செய்தல், ஒருமுகம் செய்தல்,
சிந்தனை செய்தல், தியானம் செய்தல்,
ஒளி பெறுதல், ஒன்றென்று உணர்தல்,
லயமாதல், முக்திப் பேறு
ஆகிய இவை எட்டும், மெய்யுணர்தலின் படிநிலைகள்.

கிளர்ச்சி பெறுதல், ஒளி பெறுதல்,
உண்மை வெளியிடப் பெறுதல், மகிழ்ச்சி, களிப்பு,
மெய்ஞ்ஞானக் காட்சி
ஆகியவை ஆன்மீக முன்னேற்றத்தின் அறிகுறிகள்.
அறிபவர் யார் என்று கண்டுபிடி.
கேட்பவர் யார் என்று கண்டுபிடி.
சுவைப்பவர் யார் என்று கண்டுபிடி.
நீங்கள் இந்த உடல் அன்று; இந்த உள்ளம் அன்று;
அழியாத ஆத்மா நீங்கள்.

பக்தி, தியாகம், ஒழுக்கம்,
சேவை, பயன் துறவு, மேன்மை பெறுதல்.
எளிமை ஆக்கு, தூய்மை ஆக்கு, தீவிரம் ஆக்கு
வாழ்வில் எளிமை பெறு. மனத்தில் தூய்மை பெறு.

சாதனை, தியானம் ஆகியவற்றைத் தீவிரப்படுத்துங்கள். வைராக்கியத்தையும், முமுட்சுத்துவத்தையும், தீவிரப்படுத்துங்கள்.

சத்சங்கம், சந்தோஷம், சாந்தி.
தனிமை, மௌனம், சத் - விசாரம் (தூய சிந்தனை)
மீண்டும் ஒருங்கு இணைக. மறுமலர்ச்சி பெறுக.
புதுமை பெறுக.
ஒத்துழைப்பு நல்குக. கூட்டுச் சேர்க. இணக்கம் பெறுக.
அதை இப்போதே செய்க. அதை இப்போதே செய்க.
அதை இப்போதே செய்க.
அதை இப்போதே முயல்க. அதை இப்போதே முயல்க.
அதை இப்போதே முயல்க.
கருத்தின் உள் கொள்க. கருத்தின் உள் கொள்க.
கருத்தின் உள் கொள்க.

நிஷ்டை, பாவம், மகா பாவம், பிரேமை,
(இறைவனோடு கொள்ளும் தொடர்பு உறவின்
வெவ்வேறு படிகள்)
தேடுக. காண்க. சொல்க. ஓய்வு பெறுக.
விசாரி, கண்டுபிடி. மீட்டுக்கொள்.
இதுவே நெறி. இதுவே உண்மை.
இதுவே தெய்வீக வாழ்க்கை.

குருதேவருக்கு மிகவும் பிரியமானது, நிச்சயம், மகா மந்திரமே.

ஹரே ராம, ஹரே ராம; ராம, ராம, ஹரே ஹரே
ஹரே கிருஷ்ண, ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண
ஹரே ஹரே

இந்த யுகத்தில் வாழும் மக்களுக்கு இது ஒரு தெய்வீக வரப் பிரசாதம்; ஒவ்வொரு சாதகரின் உள்ளத்திலும் இதைக் குடிகொள்ளச் செய்வதற்காகக் குருதேவர் செய்யாத முயற்சி எதுவுமே இல்லை. உண்மையில் அவர் இந்த மகா மந்திரத்தின் மீது மிகவும் பிரியம் வைத்திருந்தார்; ஆசிரமத்தில் இந்த மகா மந்திரத்தைத் தொடர்ந்து பாடுவதை 1943 டிசம்பர் 3-ஆம் தேதி தொடங்கி வைத்தார்; அன்று முதல் இந்தப் பாடல் இரவும், பகலும் தொடர்ந்து பாடப்பட்டு வருகின்றது; சர்வ சக்தி வாய்ந்த ஆன்மீக அலையை அது தோற்றுவித்து வருகின்றது; ஆன்மீக முயற்சியில் சாதகர் அனைவர்க்கும் அது தோன்றாத் துணையாக உதவி வருகின்றது. முக்கியத்துவம் வாய்ந்த கொண்டாட்டங்களையும், மற்ற விழாக்களையும், மாநாடுகளையும் நடத்துபவர்கள் நிகழ்ச்சிகளுடன் இணையும்படியாக இந்த மகா மந்திரத்தைத் தொடர்ந்து பாடுவதற்கு ஏற்பாடு செய்யுமாறு குருதேவர் அவர்களை ஊக்குவித்து வந்ததுடன் அவர்களுடைய முயற்சிகளில் நிச்சயம் வெற்றி பெறுவார்கள் என்று உறுதியும் கூறி வந்தார்.

குருதேவருடைய பாடல்களில் உள்ள ஒரு குறிப்பிடத்தக்க தன்மை என்னவென்றால், அடிப்படையில் அவை துவைதக்கொள்கை உடையன அல்ல. தெய்வீக மெய் உணர்வில் அவர் பெற்றுள்ள நிறைநிலையையும் இறைவனைப் பற்றி எண்ணற்ற பல்வேறு வழிகளில் மக்கள் தங்கள் தங்கள் மனப்பக்குவத்திற்கும் ஆன்மீகத் தகுதிக்கும் ஏற்பத் தியானித்து வருகின்றார்கள் என்பதைப் பரந்த மனப்பான்மையுடன் அவர் புரிந்து கொண்டுள்ள நிலையையும் அப்பாடல்கள் மிகவும் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகின்றன. ஆசிரமக் கூட்டங்களின் நிகழ்ச்சிகளில் மகா மந்திரம் பெரும்பாலும் இடம்பெறுவது பொதுவான ஒரு பகுதியாக இருப்பினும், குருதேவர், வாரத்தின் ஒவ்வொரு நாளும் பல்வேறு தெய்வங்களையும் வாழ்த்திப் பாடுவதற்காகத் தமக்கே உரிய சிறப்புப் பாடல்களைப் புனைந்து அனைவரையும் பாடச் செய்வார். ஞாயிறன்று சூரியன்,

திங்களன்று சிவபெருமான், செவ்வாயன்று முருகப் பெருமான், புதனன்று கண்ணபிரான், வியாழனன்று குரு (ஞான ஆசிரியர்), வெள்ளியன்று தெய்வீக அன்னை, சனியன்று அனுமார். பண்டிகை நாட்களில் குருதேவர், வழிபடப்படும் குறிப்பிட்ட தெய்வத்தின் பெருமைகள் பற்றிய பாடல்களையே எப்போதும் பாடுவார்; சான்றாக நவராத்திரியின் போது துர்க்கை, இலக்குமி, சரசுவதி; சிவராத்திரியின் போது சிவபெருமான்; ஸ்ரீராம நவமியன்று இராமபிரான்; ஜன்மாஷ்டமி நாளன்று கண்ணபிரான் என்று பாடல்கள் அமையும்.

ஏசு, அல்லா, ஜொரோஸ்தரர், புத்தர் ஆகியோரைப் பற்றிக் குருதேவர் பாடியுள்ள பாடல்கள் அவர் சர்வ மதங்களின் மீதும் கொண்டுள்ள பேரன்பினை மிகவும் விரிவாகப் படம் பிடித்துக் காட்டுகின்றன. ஆசிரமத்தில் நடைபெறும் முக்கியமான எல்லா விழாக்களின் போதும் பல்வேறு மதங்களைச் சார்ந்த மக்கள் கலந்துகொள்ளும் பிரார்த்தனைக் கூட்டங்கள் நடைபெறும் போது இப்பாடல்கள் பாடப்பட்டு வந்தன.

மீண்டும் மீண்டும், பக்திப்பாடல்களை வெளி வேஷத்திற்காக அல்லாமல் இறைவன் பொருட்டாக மட்டுமே எவ்வாறு பாடவேண்டும் என்பதைக் குருதேவர் சாதகர்களுக்குப் பாடிக் காட்டித் தாமே ஓர் உதாரணமாக விளங்கினார். இரைச்சலும், பக்க வாத்தியங்களும் அவருக்குச் சிறிதும் வேண்டியதில்லை. வெறிபிடித்த நிலையில் இறைவனுடைய திருநாமங்களை உரக்கப்பாடிச் சிலர் மூர்ச்சித்து விழுவதுண்டு; இது பேரின்பச் சுக நிலை என்று அடிக்கடி தவறாகக் கருதப்படுகிறது. இத்தகைய போக்கையும் அவர் சிறிதும் ஆதரித்ததில்லை. ''இறைவன் உங்கள் இதயத்தில் வீற்றிருந்து உங்கள் பாடலைக் கேட்டுக் கொண்டிருக்கின்றார் என்ற உணர்வை எப்போதும் உணர்பவராகப் பக்திப் பாடல்களை இனிமையாகவும், மென்மையாகவும், மெதுவாகவும் பாடுங்கள். இவ்வாறு பாடுவதே உங்களைப் பேரின்பச் சுக நிலை (சமாதி)க்கு அழைத்துச் செல்லும்'' என்று அவர் கூறுவார்.

## சத் சங்கம்

குருதேவர் வற்புறுத்திய மற்ருெரு ஆன்மீகப் பயிற்சி சத் சங்கமாகும். சத் என்னும் சொல் வாய்மை, தெய்வம், உள்ளது அல்லது இருக்கும் பொருள் ஆகியவற்றைக் குறிக்கும். சங்கம் என்னும் சொல் கூடியிருத்தல், சேர்ந் திருத்தல், ஒன்ருக அமர்ந்திருத்தல் என்று பொருள்படும். புனித மகான் ஒருவரால் மனக்கிளர்ச்சியைப் பெறுவதையும் கூடச் சத்சங்கம் என்னும் சொல் குறிக்கும். நீங்களும் புனிதராக இல்லாவிடின் புனித மகான் ஒருவரை நீங்கள் எவ்வாறு புரிந்துகொள்ள முடியும்? இக்காரணத் திற்காகவே ஆன்மத்தூய்மை மிகவும் வற்புறுத்தப்படு கின்றது. உங்களைத் தூய்மைப் படுத்திக் கொள்ளுங்கள். சரியான உள்நோக்குடன் உங்களைத் தகுதிப் படுத்திக் கொள்ளுங்கள். அப்போது நீங்கள் சத்தியத்தைப் புரிந்து கொள்வீர்கள். புனிதத்தன்மை எங்கு காணப்படினும் அதைப் புரிந்து கொள்வீர்கள்.

புனிதம் என்பது எது? சத்தியம் என்பது எது? தெய்வம் என்பது எது? நீங்கள் சந்திக்கும் ஒவ்வொரு வருடைய புனிதத் தன்மையின் கூட்டுறவை சத்தியத்தின் நட்புறவை நீங்கள் ஏற்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். தெய்வத்திற்கு நெருக்கமாக சத்தியத்திற்கு நெருக்கமாக உங்கள் மனத்தையும், உங்கள் எண்ணங்களையும், உங்கள் உள்ளுயிரையும் கொண்டு செல்லும் கூட்டுறவே சத் சங்கம். இந்தச் சத்சங்கத்தை அனுபவித்து மகிழ்பவர் தம் உள்ளத் தின் உள் ஏதோ ஒன்று விழிப்புற்று எழுவதைக் கண்டு கொள்ளுகின்ருர். ஏதோ ஒன்று நவநாகரிகத்தின் தூசும் துப்பும், சாம்பலும் ஆகியவற்ருல் எப்படியோ மூடப் பட்டிருப்பதைச் சத்சங்கம் உங்களுக்கு நினைவூட்டுவதை மட்டுமே செய்கின்றது. உள்ளுறையும் சத்தியத்தின் மீது குவிந்துள்ள சாம்பல் வீசி அகற்றப்பட்டவுடனே உள்ளுக்குள் ஒரு சுடர் இருப்பதும் அது ஒளிவிட்டு வளரத் தொடங்கு வதும், சத்சங்கத்தில் அனுபவமாகின்றன.

பாகவதமும், யோக வாசிஷ்டமும் ஆகிய கீழ்த்திசையின் இருபெரும் சமய நூல்கள் சத்சங்கத்தைப் பற்றி, ஏறக் குறைய, இதுபோலவே புகழ்ந்து பேசுகின்றன. பாகவதம் தெய்வத்தின் நூல் (புனித விவிலிய நூலுடன் ஒப்பிடக் கூடியது) வாழ்வின் நிலையாமையும், தெய்வத்தின் பெருமை யும் நமக்குச் சத்சங்கத்தில் நினைவூட்டப்படுகின்றன என்று கூறுகின்றது.

அடிக்கடி நிகழும் இத்தகைய நினைவூட்டல்கள் ஏன் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்து விளங்குகின்றன என்பதைக் குருதேவர் விளக்கியுள்ளார். அவர், ''மாயை, பொய்த் தோற்றம், இறைவனுடைய மயக்கும் சக்தி, மனத்தைத் தடுமாறச் செய்து குழப்பும் சக்தி, சொற்களால் விளக்கிச் சொல்லப்பட முடியாதது. சான்றாகச் 'சுடுகாட்டு வைராக்கியம்' (சாவுச் சடங்கின்போது தோன்றும் பற்றற்ற தன்மை) என ஒன்று உள்ளது. நீங்களும், ஒருவேளை நாளையே, இறப்பீர்கள் என்ற நினைவு உங்களுக்கு ஏற்படு கின்றது; எனவே இன்று முதல் நல்லவராக இருக்க நீங்கள் முடிவு செய்கின்றீர்கள். நீங்கள் வீட்டுக்குத் திரும்பி வரும் வரையில் கூட அத்தீர்மானம் நிலைத்திருப்பதில்லை. உங்களுடைய தீர்மானத்தை, நீங்கள் தீர்மானம் செய்த அவ்வளவு வேகமாக, மறக்கச் செய்கின்ற அந்த மயக்கும் சக்தியே, மாயை எனப்படுகிறது. சத்சங்கம் நம் விவேகத்தை நிலைபெறச் செய்கிறது என்றும், நம்மை இத்தகைய மயக்கத்திலிருந்து காப்பாற்றுகின்றது என்றும் குருதேவர் தெளிவு செய்துள்ளார்.

சத்தியத்தின் மாளிகைக்கு நான்கு வாயிற் காவலர் உள்ளனர் என்றும், அவர்களில் ஒருவர் 'சத்சங்கம்' என்றும் யோகவாசிஷ்டம் குறிப்பிடுகின்றது. ''சத்சங்கம்'' என்பவரின் கூட்டுறவை நீங்கள் ஏற்படுத்திக் கொள்ளுங்கள்; அவர் மிகவும் எளிதில் உங்களை உள்ளே செல்லவிடுவார்'' என்று அந்நூல் கூறுகின்றது.

குருதேவர் சத்சங்கத்தின் மீது மிகவும் பிரியம் வைத்திருந்தார். எனவே வாரந்தோறும் ஏழுநாட்களும் ஒவ்வோர் இரவிலும், ஆண்டு முழுவதும் ஒவ்வொருவரும் ஒருநாள் கூடத் தவருமல் ஆசிரமத்தில் நாங்கள் சத் சங்கத்தை நடத்தி வந்தோம். கலந்துகொள்ளும் மக்களின் எண்ணிக்கையைப் பற்றி நாங்கள் கவலைப்படவில்லை. சில சமயங்களில் மூன்று பேர் இருப்பார்கள்; சில சமயங்களில் முப்பது பேர் இருப்பார்கள்; சில சமயங்களில் மூன்னூறுபேர் இருப்பார்கள் — யார் இருக்கிருர்கள்; யார் இல்லை என்பது கூட முக்கியமன்று, ஆட்களைப் பற்றிய கருத்து சிறிதும் முக்கியமன்று; ஆனல் எந்த உணர்வுடன் நாங்கள் ஒன்று சேர்ந்து நிகழ்ச்சியில் கலந்து கொள்கிறேம் என்பதே கவனிக்கப்பட வேண்டிய கருத்தாகும்.

ஆண்டுகள் செல்லச் செல்லச் சத்சங்கத்தில் பல்வேறு மாறுதல்கள் இடம்பெற்றன. எனினும், அடிப்படை அமைப்பு இன்னும் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. குரு தேவர் ஒரு கால கட்டத்தில், சத்சங்கத்தின் ஒரு பகுதியாகக் கிறிஸ்துமஸ் விழா, புத்தாண்டுத் தொடக்க நாள் இரவு, தம் பிறந்தநாள், நடப்பு ஆண்டில் நிகழும் இந்துக்களின் மங்களகரமான புனிதத் திருநாட்கள் சில ஆகிய நிகழ்ச்சி களையும் கொண்டாடத் தொடங்கினுர். புத்தாண்டின் தொடக்க நாள் இரவில் சத்சங்கம் நள்ளிரவு பன்னிரண்டே கால் மணி வரைக்கும் நீடிக்கும்; அப்போது குருதேவர் தம்முடைய கைக்கடியாரத்தைப் பார்த்து, ''புத்தாண்டு ஒலிக்கின்றது. ஓம் ஹரி ராம ......'' என்று கூறுவார். உலகில் உள்ள எல்லா மதங்களின் விழாக்களும் கொண் டாடப்படுவதைப் போலவே கிறிஸ்து உயிர்த்தெழுந்த நாளும் கொண்டாடப்பட்டது. ஒவ்வோராண்டும் துர்க்கை யின் பூஜை மிகப் பெரிய அளவில் கொண்டாடப்பட்டது. குருதேவர் சடங்குகளைப் பற்றிச் சிறிதும் வெறுப்படைய வில்லை; மாருக, அவர் அவற்றைப் பெரிதும் விரும்பினுர். சில சமயங்களில் நாடகங்கள் அல்லது கலை நிகழ்ச்சிகள் நடித்துக் காட்டப்பட்டன. இவையாவும் சத்சங்கத்தின்,

ஒரு பொழுதும் மாறாத அடிப்படை அமைப்பில் ஒன்றாக இணைக்கப்பட்டன.

1924-ல், இமயமலையின் அடிவாரத்தில் உள்ள தம் சிற்றூராகிய ரிஷிகேசத்திற்கு வந்து சேர்ந்த போது, ஒரு புதிய துறவியாக மட்டுமே வந்து சேர்ந்தார்; யாசித்து வாழும் ஒரு சந்நியாசியாகவும் பெரும்பாலும் மற்றவர்கள் அறியாதவராகவும் அவர் இருந்தார். நாற்பதாண்டுகள் மட்டுமே நிறைந்தவராகையால், சுவர்க்க ஆசிரமத்தில் இருந்த மற்ற புனித மகான்களுக்கு அவர் மிகவும் இளையவராக இருந்தார். ஆனால் துணிச்சலும் செயல் முறையாக நடந்து காட்டும் இலட்சியமும் உள்ள குருதேவர் அப்போது கூட, ஆன்மீகச் சாதகரின் உள்ளத்தில் உள்ள கடவுள் பக்தி என்னும் அக்கினி அணைந்துவிடாமல் வைத்திருக்க உதவும் விசிறி, சத்சங்கமே என்று கண்டறிந்தார். இந்தப் புனித மகான்கள் அனைவரையும் சத்சங்கத்தில் ஒன்று சேர்ப்பதே குருதேவரின் பணியாக அப்போது இருந்தது. இதற்கு முன்பு அவர்கள் அனைவருக்கும் அவரவர்க்குரிய தனிச் சீடர் கூட்டம் இருந்தது; குருதேவர் தான், ''மக்கள் அனைவரும் உங்களைக் காணவும், கேட்கவும் வசதியாக ஒவ்வொருவரும் ஒரே மேடையில் ஏன் ஒன்று சேரக் கூடாது?'' என்ற யோசனையைத் தெரிவித்தார். இதுவே குருதேவரின் மேதாவிலாசமாகும்.

அவர் பின்னணியில் இருந்து கொண்டு, ''நான் அவ்வளவு முக்கியம் அல்ல; மேடை அமைக்கவும், பாய்களை விரிக்கவும், புனித மகான்கள் அமர்வதற்கு இருக்கைகள் தயார் செய்யவும் தவிர, சத்சங்கத்திற்கு நான் தேவைகூட இல்லை'' என்று கூறுவது வழக்கம். குருதேவர் ஆசிரமம் இப்போதுள்ள இருப்பிடத்திற்கு வந்து சேர்ந்தவுடன் அவர் செய்த முதல் காரியம், கோடைக்காலம், குளிர் காலம், மழைக் காலம், காற்றுவீசும் காலம் — எதுவாக இருப்பினும் ஒவ்வொரு நாள் இரவும் சத்சங்கம் நடைபெறுவதை நிச்சயப்படுத்திக் கொள்வதாக இருந்தது. குளிர்

காலத்தில் அனைவரும் மலையின் மேற்பகுதிக்குச் செல்லுவார்கள், அங்கே குளிர் குறைவாக இருக்கும்; கோடைக் காலத்தில் கங்கை ஆற்றின் கரையில் சத்சங்கம் நடைபெறும், அங்கே அப்போது குளிர்ச்சியாக இருக்கும். அவருக்கு உடல் நலக் குறைவு ஏற்பட்டபோதுகூட அவர் சத்சங்கத்தில் கலந்து கொள்ளத் தவறியதில்லை; அதனால் நாங்கள் நல்ல வரம் பெற்றோம்; ஏனெனில் சத்சங்கத்தில் சத்தாக இருந்தவர் அவர்தான்; அதாவது அங்கு ஒன்று சேர்ந்தவர்கள் நாடிய கூட்டுறவின் தெய்வமாக இருந்தார். அவர் ஒரு புனித மகான்; அவருக்கு யாருடைய கூட்டுறவும் தேவையில்லை; எனினும், ஒரு நீண்ட ஊன்று கோலின் உதவியால் நடந்து வந்து ஒவ்வொரு இரவும், பிரார்த்தனை மண்டபத்தை அடைவது அவருடைய வழக்கம். அந்த அளவு கூட நடந்துவர அவருடைய உடம்பு இடந்தராத காலங்களில், இருவருடைய தோள்களைப் பக்கதுணையாகப் பற்றிக்கொண்டு நடந்து, சத்சங்கத்திற்கு வந்து சேருவார். அவர் அவ்வாறு செய்வதை யாரும் தடுக்க முடியாது. பிற்காலத்தில், தம் கால்கள் தம் உடம்பைத் தாங்குமா என்பதைப் பற்றி நிச்சயப்படுத்திக்கொள்ள அவரால் முடியாத போது, தம் உடம்பைப் பிடித்தவாறு, ''ஓ, கால்கள் சிறிது மரத்துப் போய்விட்டன; நாம் என்ன செய்யலாம்?'' என்று கூறுவார். அவர் ஒரு டாக்டர்; எனவே வழி அவருக்கு நிச்சயம் தெரியும், ''சக்கர நாற்காலியைக் கொண்டு வாருங்கள்'' என்று தெரிவிப்பார். இக்கருத்தை உங்களுக்கு எப்படி விளக்குவது என்பது எனக்குத் தெரியவில்லை. ஒரு துறவி, ஒரு யோகி, சில ஆண்டுகள் முன்பு வரையில் ஒளிமிக்க உடல் நலத்துடன், அற்புதமான உடல் நலத்துடன், எங்கள் எல்லோருடைய உடல் நலங்களையும் ஒன்று சேர்த்து ஒப்பிட்டாலும் மேம்பட்டு விளங்கிய உடல் நலத்துடன் இருந்தவர். இந்தப் புனித மகான் சத்சங்கத்திற்குச் சக்கரநாற்காலியில் வருவதைப் பற்றி ஒரு சிறிதும் வெறுப்படையவில்லை. நாட்கள் செல்லச் செல்லச் சத்சங்கத்தில் அமர்வதற்குக் கூட அவரால் முடியவில்லை. இந்த உணர்வை உங்களால் நெருங்கிவரக்கூட

முடியுமா என்பதை நினைத்து நான் வியப்படைகின்றேன்; சான்றாக, ஆலய வழிபாட்டின் போது ஒருவர் கீழே படுத்துக் கொண்டிருப்பது முறையன்று என்று கூடக் கருதப்படு கின்றது; ஆனால் அவர், ''என்னால் உட்கார்ந்திருக்க முடியாது. நான் சத்சங்கத்திற்கு வருகின்றேன்; அங்கே படுத்துக் கொள்ளுகின்றேன்; எப்படியும் நான் வந்தே ஆக வேண்டும்'' என்று கூறுவார்.

ஆசிரமத்தையே தங்களின் உறைவிடமாகக் கொண்ட சாதகர்களுக்கும், தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் கிளைகள் இயங்கிக்கொண்டிருக்கின்ற நூற்றுக்கணக்கான நகரங்களில் வாழும் சீடர்களுக்கும் குருதேவர் வழங்கியுள்ள ஆரோக்கிய மான அறிவுரை, ''ஒன்று சேர்ந்து வழிபாடு செய்யுங்கள்; ஒன்று சேர்ந்து தியானம் செய்யுங்கள்; ஒன்று சேர்ந்து பாடுங்கள்'' என்பதாகும். யாரேனும் சாதகர் ஒருவர், தாம் தனியே ஆன்மீகப் பயிற்சியில் ஈடுபட்டிருந்ததனால் சத்சங்கத்தில் கலந்து கொள்ளத் தவறியதாகத் தெரிவித் தால், குருதேவர் தம் கண்களிலும் உதடுகளிலும் நடமாடும் குறும்புத்தனமான புன்னகையுடன், ''அதனால், நீங்கள் பேரின்பச் சுகநிலையை அடைந்தீர்களா?'' என்று விசாரிப்பார். அடிக்கடி அவர், ''தனித்து ஒருவர் செய்யும் எல்லாப் பயிற்சிகளின் பொருளும் தூக்கமே. ஆனால் பலர் ஒன்று சேர்ந்து செய்யும் கூட்டு வழிபாட்டிலும், தியானத் திலும், சக்தி வாய்ந்த அலை உற்பத்தியாகின்றது; ஒவ்வொரு சாதகருடைய உள்ளமும் மிகப்பெரிய ஆன்மீக உயர்நிலை களுக்கு உயர்த்தப்படுகின்றது'' என்று கூறுவார்.

குருதேவரின் சத்சங்கம் பல்வேறு வழிகளிலும் தன்னில் தனிச் சிறப்பு வாய்ந்ததாக விளங்கிற்று. அது மிகவும் அழகும் அற்புதமும் வாய்ந்தது; அதில் இறைவன் புகழைப் பற்றிய பாடல்களும், இறைவனுடைய திருநாமங்களைப் பற்றிய பாடல்களும், இன்னிசையும், சமய நூல்களை வாசிக்கும் வாசிப்பும், உரையாடல்களும் இணைந்து இடம் பெற்றிருக்கும். அனைவருடைய தேவைகளுக்கும், மனப்

பக்குவங்களுக்கும் அவை பொருத்தமாகவும், பேணி வளர்ப்பன வாகவும் இருக்கும்; அது ஒவ்வொருவருடைய ஆன்மீகப் பசிக்கும் திருப்திதரும் உணவாக இருந்தது. தொடக்க காலத்தில் நாங்கள் பத்து அல்லது பதினைந்து பேர்கள் மட்டுமே இருந்தோம்; ஒருவேளை பார்வையாளர்களும் பத்துபேர் இருக்கக்கூடும். நாங்கள் இரண்டு வரிசைகளாக அமர்வோம்; ஒரு சிறிய பீடத்தின் மீது திரியுடன் ஏற்றப் பட்ட விளக்கு இருக்கும். ஒரு சிறிய மரப்பீடத்தின் மீது ஒரு ஹரிக்கேன்லாந்தரும் இருக்கும்; எங்களில் சிலர் சமய நூல்களைப் பார்த்து வாசிப்பதற்காக அந்த விளக்கு ஒவ்வொருவரிடமும் நகர்த்தி வைக்கப்படும்.

சத்சங்கம் தொடங்கும்போது பாடப்படும் பாடல்கள்:

ஓம் ஓம் ஓம்
ஜெய கணேச ஜெய கணேச ஜெய கணேச பாஹிமாம்
ஸ்ரீ கணேச ஸ்ரீ கணேச ஸ்ரீ கணேச ரக்ஷமாம்
ஜெயகுரு சிவகுரு ஹரிகுரு ராம்
ஜகத்குரு பரங்குரு சத்குரு ஸ்யாம்
ஆதிகுரு அத்வைதகுரு ஆனந்தகுரு ஓம்
சித்குரு சித்கனகுரு சின்மயகுரு ஓம்
ஹரே ராம ஹரே ராம ராம ராம ஹரே ஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண
ஹரே ஹரே

(பிற்காலத்தில் இது மிகவும் பெரியதாக விரிவாக்கப் பட்டது.)

பின்னர், குருதேவருக்கு இடதுபுறத்தில் முதலாவதாக அமர்ந்திருப்பவரிடம் விளக்கு சேர்க்கப்படும்; அவர் கீதையின் ஓர் அத்தியாயத்தை மொழிபெயர்ப்புடன் அல்லது மொழிபெயர்ப்பு இல்லாமல் வாசிப்பார். அவர் அதை முடித்தவுடனே அவர் ஒரு கீர்த்தனைப் பாடலைப்பாட வழி நடத்துவார்; அதன் பிறகு விளக்கு அடுத்தவரிடம் சேர்க்கப்படும்; அவர் மற்றொரு சமயநூலின் ஒரு பகுதியை வாசிப்பார். இருவரும் அடுத்த கீர்த்தனைப் பாடலைப்பாட வழி நடத்துவார். இவ்வாறே ஒரு சுற்று முடியும்.

சில சமயங்களில் குருதேவர் தாம் அன்று எழுதிய ஒரு கட்டுரையை வாசிக்கும்படி யாரையேனும் கேட்டுக்கொள்ளு வார். இது மிகவும் சுவையுள்ள நிகழ்ச்சியாக இருக்கும். யாரேனும் ஒருவர் குருதேவரிடம் சென்று யாரோ தம்மைச் சினந்து வைததாகப் புகார் கூறியிருப்பார். குருதேவர் வைதவரை அழைத்து வசை கூறமாட்டார்; ஏனெனில் அது அவருடைய மனத்தைப் புண்படுத்தக்கூடும். இதற்குப் பதிலாக அவர் 'சினத்தின் அபாயம்' என்ற பொருள் பற்றி ஓர் அழகான கட்டுரையை எழுதுவார். (சில சமயங்களில் அதை அவர் தட்டச்சு செய்யுமாறு குறிப்பிட்ட நபரிடமே தருவார்). சத் சங்கத்தில் அக்கட்டுரையைச் சினமடைந்த வரே வாசிக்கும்படியாகக் கொண்டு வருவார். அது தன் பணியை நன்கு செய்யும். அவருக்கென்றே அது எழுதப் பட்டது.

அதன் பிறகு தொடர்ந்து, ஒவ்வொருவரும் ஒரு கீர்த்தனை பாட வழி நடத்த வேண்டும். கூட்டாகப் பாடுவது மட்டும் போதாது. எந்த ஒரு சமாதானத்தை யோ, விளக்கத்தையோ குருதேவர் ஏற்றுக்கொள்ள மாட்டார். ஆன்மீக முன்னேற்றத்திற்கு ஒரு தடையாக இருப்பது, வெட்கம் என்று அவர் சுட்டிக் காட்டுவார். ஒவ்வொருவரும் இவ்வாறு வழி நடத்திப் பாடி முடிந்த வுடன் குருதேவர் மகா மந்திரக் கீர்த்தனையையும் மகா மிருத்யுஞ்சய மந்திரத்தையும் வழி நடத்திப் பாடி முடிப்பார். சத்சங்கம் ஆரத்தியுடன், குருதேவரின் ஆழ்ந்த உள்ளுணர்வுகளை அழகாக வெளியிடும், மிக உயர்ந்த சாந்தி பதப் பாடல்களுடன் முடிவுறும்: அவை வருமாறு:

ஓம் சர்வேஷாம் ஸ்வஸ்திர் பவது
சர்வேஷாம் சாந்திர் பவது
சர்வேஷாம் பூரணம் பவது
சர்வேஷாம் மங்களம் பவது
சர்வே பவந்து சுகினஹ
சர்வே சந்து நிராமயாஹ

ஓம் சர்வே பத்ராணி பஸ்யந்து
மா கஸ்ச்சித் துக்க—பாக்—பவேத்
அஸதோ மா ஸத் கமய
தமஸோ மா ஜ்யோதிர் கமய
ம்ருத்யோர்மா அம்ருதம் கமய
ஓம் பூர்ணமத பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ண முதச்யதே
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவா வசிஷ்யதே

ஓம் சாந்தி சாந்தி சாந்தி:

மேற்கூறிய பாடல்களின் கருத்து பின்வருமாறு:

இறையருளால் அனைவருக்கும் உடல் நலம், மங்களம், அமைதி, நிறைவு ஆகியன உண்டாகுக! அனைவரும் நோயற்று மகிழ்ச்சியுடன் இருப்பார்களாக! அனைவரும் நலமே காண்பார்களாக! யாருக்கும் தீங்கு ஏதும் நிகழா திருப்பதாக!

பெருமானே! அசத்தினின்று சத்துக்கும்
இருளினின்று ஒளியினிடத்துக்கும்

இறப்பினின்று இறவாமைக்கும் என்னை அழைத்துச் செல்லுங்கள். இறைவன் நிறைவாக இருக்கின்றார்; அவருடைய படைப்பும் கூட நிறைவாக இருக்கின்றது. படைப்பு இறைவனிடத்தில் தோன்றியது; எனினும் இறைவன் என்றும் நிறைவாகவே இருக்கின்றார், ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி.

இதன் பிறகு குருதேவர் புறப்பட்டு மிகவும் அமைதியாக நடந்து செல்வார்; இதனால், சமய நூல்களின் வாயிலாக நாங்கள் செவிமடுத்த உயர்ந்த சிந்தனைகளும், கருத்துக்களும் எங்கள் மனங்களிலும் இதயங்களிலும் இன்னும் பசுமையாக, நாங்கள் படுக்கச் செல்லும் போதும், ஒலித்துக் கொண்டே இருக்கும்.

இதுவே சத்சங்கத்தின் முழுமையான அடிப்படை அமைப்பாகும். மக்கள் தத்தம் இல்லங்களில் அக்கம் பக்கத்தவர் சிலருடன், தத்தம் சமய நூல்களுடன் சத் சங்கத்தை நடத்துமாறு குருதேவர் ஊக்குவித்து வந்தார்.

இக்காலத்தில் வாழ்ந்த, பிரார்த்தனையின் மிகப் பெரும் பக்தர்களில் குருதேவரும் ஒருவராவார்; இருதயத்திலிருந்து பாயும் குருதி உடம்பெங்கும் பரவிப் பேணி வளர்ப்பதைப் போலவே, பிரார்த்தனையும் உள்ளத்திலிருந்து உதித் தெழுந்து உடம்பின் ஒவ்வோரணுவிலும் பாய்ந்து பரவிப் பேணி வளர்க்கின்றது, சத்சங்கத்தின்போதும், மற்ற நேரங்களிலும் கூடக் குருதேவர், ''திரு .. ...என்பவர் இன்று காலமாகிவிட்டார். பிரிந்து சென்ற உயிர் அமைதி பெறு வதன் பொருட்டு நாம் பிரார்த்தனை செய்வோம்'' அல்லது ''இன்று திருமதி ... ... ... என்பவரின் பிறந்த நாள். அவர் நீண்ட ஆயுளுடன் உடல் நலத்துடன் வாழ நாம் பிரார்த்தனை செய்வோம்'' என்று கூறுவதை ஒருவர் அடிக்கடி கேட்டிருக்கலாம். பின்னர் இறைவனுடைய திருநாமங்களைப் பாடும் பெரும் பிரார்த்தனைக் கூட்டத்தை அவரே நடத்துவார்; நிகழ்ச்சியின் முடிவில் இரண்டு நிமிட மௌன தியானத்துடனும், பிரார்த்தனையுடனும் முடித்துவைப்பார். கடவுளின் இந்த அவதாரத்தின் புனிதத் திருவடிகளில் கூடியுள்ள பக்தர்களின் நிறைவான பெருங் கூட்டத்தினுல் தோற்றுவிக்கப்படும் சக்தி வாய்ந்த ஆன்மீக அலையை உள்ளுணர்வின் நுட்பமான கண்கள் காணக்கூடும்; யாருக்காக இந்தப் பிரார்த்தனை நடைபெறுகின்றதோ அவர் மீது அருள் பொழியுமாறு எல்லாம் வல்ல இறைவ னுக்கு மௌனமாகப் பிரார்த்தனை செலுத்தப்படுகின்றது. உண்மையில் இந்தப் பிரார்த்தனை அற்புதங்களை நிகழ்த்தி யுள்ளது.

## பிரார்த்தனை

இதுமட்டும் அன்று; முற்றிலும் தன்னலம் கருதாமல், அனைவருக்காகவும் நாங்கள் பிரார்த்தனை செய்யவேண்டும்

என்பதைக் குருதேவர் எப்போதும் வற்புறுத்தி வந்தார். சான்றாக, ஆசிரமத்திற்கு வருகைதந்த ஒருவரின் உடல் நலத்திற்காகவும், நீண்ட ஆயுளுக்காகவும் பிரார்த்தனை செய்யும்போது, குருதேவர் எப்போதும், ''திரு ...... அவர்களும் அவருடைய குடும்பத்தாரும், உலகம் முழுவதும் உள்ள மக்கள் எல்லோரும் உடல் நலத்தோடும் நீண்ட ஆயுளோடும், அமைதியோடும், ஆனந்தத்தோடும், அமரத்துவத்தோடும் வாழ இறைவன் அருள்புரிவாராக!'' என்று பாடுவார். ''திரு ...... அவர்களும் அவருடைய குடும்பத்தாரும் நீடு வாழ்க'' என்று வழக்கமாக வழங்கும் மும்முறை வாழ்த்துக்களுக்குப் பிறகு, மனித சமுதாயம் முழுவதும் நெடிது வாழ நான்காம் வாழ்த்தை அவர் வழங்குவார்.

இந்தப் பிரார்த்தனை மனித இனத்துக்கு மட்டும் என்று வரையறை செய்யப்பட்டதன்று. காயமுற்ற ஒரு நாய் அல்லது குரங்கும் வேறுபாடில்லாமல் குருதேவரிடமிருந்து மகா மிருத்யுஞ்சய மந்திரத்தைச் (சிவபெருமானுக்குரிய மந்திரவாய்பாட்டை) சொல்லவைத்து உய்வுபெறும்; இம் மந்திரம் ஒருவருக்கு ஏற்படும் எல்லா விபத்துக்களிலிருந்தும் அவரைக் காப்பாற்றி வளமான உடல் நலத்தையும் நீண்ட ஆயுளையும் நல்கி முடிவில் பேரின்பவீட்டை வழங்குகின்றது.

''ஓம் த்ரயம்பகம் யஜாமஹே சுகந்திம் புஷ்டி வர்த்தனம்
உர்வாருகமிவ பந்தனாத் ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத்''

(உடல் நலத்தையும் வலிமையையும் பேணிவளர்க்கும் இறைவனுக்கு நாங்கள் வணக்கம் செலுத்துகின்றோம். அவர் எங்களை மரணத்திலிருந்து விடுவிப்பாராக) குருதேவர் செல்லும் வழியில் செத்துக்கிடக்கும் ஒரு பல்லியும் தன் ஆன்ம சாந்தியின் பொருட்டு மகா மந்திரப் பிரார்த்தனையைப் பெறும். குருதேவருக்கு எல்லா உயிரினங்களும் சமமே; பிரார்த்தனை எப்போதும் சமரசபாவனையுடன் இருந்தது.

இறைவனைப் பற்றிய மெய்யுணர்வைப் பெறுவதற்காகவும், மனித சமுதாயத்திற்குச் சேவை செய்வதற்காகவும் வாழ்வதனால், வாழ்க்கை முழுவதையும் ஒரு நீண்ட பிரார்த்தனையாகச் செய்து கொள்ளுமாறு குருதேவர் எங்களிடம் கேட்டுக் கொண்டார். பிரார்த்தனை ஒரு வழக்கமாக ஆகின்றவரையில், கிடைக்கக் கூடிய ஏதேனும் ஓர் ஆதரவைத் துணையாகக் கொள்ளுமாறு அவர் எங்களிடம் வேண்டிக் கொண்டார். ஆலயங்கள், உருவங்கள், சிலைகள், படங்கள், ஞானியர், புனித நூல்கள் முதலிய அனைத்தையும், பிரார்த்தனை அலை தொடர்ந்து பாய்ந்து கொண்டிருப்பதற்காக, மிகப்பெரும் அளவில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அலுவலகத்திலும் பிரார்த்தனை மண்டபத்திலும் தேவர்கள், தேவதைகளின் படங்கள் தொங்கவிடப்பட்டிருந்தன. பெரும்பாலும் ஒவ்வொருவரும், மிகச்சிறந்த நோக்கத்துடன் படத்தைத் தொங்கவிட்ட பிறகு, அதைப் பற்றிய எல்லாவற்றையும் மறந்துவிடுவதுண்டு; குருதேவர் அப்படி மறக்கவில்லை. தம் அன்றாட வாழ்வில் அத்தெய்வங்கள் நிலவி இருப்பதை தெரிந்து கொண்டார். அலுவலகத்தினுள் நுழைந்தவுடனே அவர் படங்களில் உள்ள தெய்வங்கள் அனைவர் மீதும் தம் பார்வையைச் செலுத்துவார்; தம் அலுவலக உதவியாளர்களில் அவர்களும் ஒரு பகுதியாவர்; அவர் பார்க்கும் பார்வையின் பொருள், ''நான் இங்கு உங்களின் கருவியாக இருந்து உங்களின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக இதோ, உங்களின் முன்பு வந்து காத்திருக்கின்றேன்'' என்பதாகும். குருதேவர் தம் பணியைத் தொடங்குவதற்கு முன்பு ஒரு கணம் மௌன அஞ்சலி செலுத்துவார். ஒரு பணி முடிந்து அடுத்த பணி தொடங்கும் நேரமாக இருப்பினும் அல்லது ஒரு பார்வையாளர் புறப்பட்டு அடுத்த பார்வையாளர் உள்ளே நுழையும் நேரமாக இருப்பினும், அவர் தம் இருக்கையில் பின் நோக்கிச் சாய்வார்; ஒரு கண்ணை மூடிக்கொள்ளுவார்; அடுத்த கண்ணால் தெய்வப் படங்களின் மீது பார்வை செலுத்துவார். விடுபடும் அந்த வினாடி அளவற்ற, முடிவற்ற, பரம சாந்தியும் பரமானந்தமும் ஆகும். இவ்வாறு

முழுமுதற் பரம் பொருளுடன் தொடர்பு தொடர்ச்சியாக வைத்துக்கொள்ளப்பட்டு வந்தது.

ஒரு படம் சேதமடைந்தாலோ அல்லது நீக்கப்பட்டாலோ குருதேவர் உடனே அதைக் கவனித்துப் பழைய நிலைக்கு அதைத் திரும்பவும் சேர்ப்பார். இப்பயிற்சியின் மீது அவர் அவ்வளவு அக்கறை வைத்திருந்தார். பகவானாகிய குருதேவருக்கு இத்தகைய ஆதரவுகளைப் பக்தியின் பொருட்டு நாடவேண்டிய தேவை என்ன? பிரம்ம உணர்வில் அவர் எப்போதும் நிலையாக வேரூன்றி இருந்தார். நாம் பின் பற்றுவதற்கு ஓர் உதாரணமாக விளங்குவதற்காகவே அவர் இப்படிச் செய்தார். குருதேவர் புனைந்த அழகான, உள்ளத்தை உயர்த்துகின்ற அனைத்துலகப் பிரார்த்தனைப் பாடல் பின்வருமாறு:

கருணையும் அன்பும் நிறைந்த, வணங்கத்தக்க
இறைவா!
வணக்கங்களையும் வீழ்ந்து பணியும் அஞ்சலியும்
தங்கட்குச் செலுத்துகின்றோம்.
தாங்கள் சச்சிதானந்தம் (உண்மை, அறிவு, பேரின்பம்)
தாங்கள் எங்கும் நிறைந்திருப்பவர்;
எல்லாம் வல்லவர், எல்லாம் அறிந்தவர்.
தாங்கள் அனைத்து உயிர்களினுள்ளும் உறைபவர்.
புரிந்து கொள்ளும் இதயம், சமரச நோக்கு,
சமநிலை மனப்பான்மை,
நம்பிக்கை, பக்தி, ஞானம் ஆகியவற்றை எங்களுக்குத்
தாருங்கள்.

மனத்தைக் கட்டுப்படுத்தவும், மயக்கும் ஆசைகளை
எதிர்க்கவும் ஆழ்ந்த ஆன்மீக வலிமையை
எங்களுக்கு வழங்குங்கள்.
ஆணவம், மோகம், பேராசை, சினம், பகைமை
ஆகியவற்றிலிருந்து எங்களை விடுவியுங்கள்.
தெய்வீக நற்பண்புகளை எங்கள் உள்ளங்களில்
நிரப்புங்கள்.
அனைத்துப் பெயர்களிலும் உருவங்களிலும் நாங்கள்
தங்களைக் காணச் செய்யுங்கள்.

அனைத்துப் பெயர்களிலும், உருவங்களிலும் உள்ள
தங்களுக்கு நாங்கள் சேவை செய்வோமாக.
நாங்கள் எப்போதும் தங்களை நினைப்போமாக.
தங்களின் புகழ்களை நாங்கள் எப்போதும்
பாடுவோமாக.
எங்கள் உதடுகளில் தங்கள் திருநாமம்
எப்போதும் இருக்கட்டும்.
எப்போதும், என்றென்றும் நாங்கள் தங்களில்
உறைவோமாக!

இப்பிரார்த்தனையைக் காலையிலும், மாலையிலும் செலுத்துபவர் இறைவனுடைய மிகச் சிறந்த நல்லாசிகளைப் பெற்றுத் தெய்வீக நிலைக்கு மிக விரைவாக முன்னேற்றம் பெற்று, இப்போதே, இங்கேயே ஜீவன் முக்தராக ஒளிவிட்டு சிறந்து விளங்குவார் என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை.

## இறைவனிடம் நம்பிக்கை

குருதேவர் அடிக்கடி சொல்லும் செய்தி: ''நீங்கள் இறைவனுடைய கருணையைப் பற்றிப் பேசுகின்றீர்கள். இறைவனுடைய கருணையை எவ்வாறு அனுபவிக்க வேண்டும் என்று நீங்கள் அறிவீர்களா? உதட்டளவில் சேவை செய்வதனால் அன்று. இறைவனுடைய கருணையை அனுபவிக்க நீங்கள் விரும்பினால் சிறிது காலத்திற்கு எதையும் சார்ந்திருக்க வேண்டாம். யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் ஆசிரமத்தைவிட்டு வெளியே நடந்து செல்லுங்கள். உங்களுக்குப் பசி எடுக்கும்போது யாரேனும் உணவு படைக்கலாம். களைப்பு ஏற்பட்டால் கீழே படுத்துக்கொள்ளுங்கள். இவ்வாறு சில நாட்கள் வாழ்வை நடத்துங்கள்; அப்போது நீங்கள் இறைவனுடைய கருணை எத்தகையது என்பதை அறிந்து கொள்ளுவீர்கள். உங்களுக்கு அறிமுகம் இல்லாத, வாழ்க்கையில் நீங்கள் எப்போதும் சந்தித்திராத, ஒருவர் உங்களிடம் வந்து, ''நீங்கள் எங்கிருந்து வருகின்றீர்கள்? நீங்கள் உள்ளே வந்து ஒரு குவளை தேனீர் பருக மாட்டீர்களா'' என்று உபசரிப்பதை நீங்கள் காண்பீர்கள். நீங்கள்

அவருடைய முகத்தை நோக்கும்போது இறைவனுடைய கருணையை அங்கே காண்பீர்கள். ''இங்கே இறைவனுடைய கருணை உள்ளது. அதைப் பெற எனக்கு அருகதை இல்லை. இம்மனிதருக்கு நான் எந்த உதவியும் செய்ததில்லை. இவரோ ஏழையாக இருக்கின்றார். இவர் எனக்கு ஒரு குவளை தேனீர் வழங்குகின்றார்'' என்று நீங்கள் உணர்வீர்கள். இதுதான் இறைவனுடைய கருணை. நீங்கள் எங்கோ படுத்துக் கொண்டிருக்கின்றீர்கள்; நீங்கள் குளிரால் நடுங்கிக் கொண்டிருப்பதை யாரோ பார்க்கின்றார்; அவர் வந்து உங்கள் உடம்பின்மீது ஒரு போர்வையைப் போர்த்து கின்றார். நீங்கள் அவரைப் பார்க்கின்றீர்கள். ''இதுதான் இறைவனுடைய கருணை'' என்று உணர்கின்றீர்கள். யாரேனும் ஒருவர் உங்களை அறையவும் கூடும்; அதையும் இறைவனுடைய கருணையாகவே நீங்கள் அனுபவிக் கின்றீர்கள்'' என்று அவர் விளக்குவார். இறைவனுடைய கருணை என்பது அறிவு கண்டு பிடிக்கக்கூடிய ஏதோ ஒன்று அன்று. அதை அனுபவித்துத்தான் அறிந்து கொள்ள முடியும்.

1941-ல், தம்முடன் வாழும் மக்கள் மிகவும் சிலராக இருந்த அந்நாளில் குருதேவர் தாமே இதைச் செய்தார். ஆசிரமத்தை விட்டுச் செல்ல அவர் ஏன் தீர்மானித்தார் என்பதற்கான காரணத்தை யாருமே கண்டறிய முடிய வில்லை. ஒரு நாள் பிற்பகல் குருதேவர் தம் அலுவலகத்திற்கு — வழக்கமாக வருபவர் — வரவில்லை; அவருடைய அறையும் காலியாக இருந்தது. அவர்கள் ஒரு குறிப்பைக் கண்டார்கள். அதில், ''நான் ஓய்வு பெறுகின்றேன். எனக்குப் பிறகு தலைவராக இருக்குமாறு சுவாமி பரமானந்தா அவர்களை நியமித்துள்ளேன் பணிகள் தொடர்ந்து நடைபெற வேண்டும் என்று விரும்புகின்றேன்''. இவ்வாறு எழுதப்பட்டிருந்தது. குருதேவர் ஹரித்துவாரை நோக்கி சென்று விட்டார். அவர் நடந்து சென்ற தாகத் தெரிகின்றது. ஓர் இரவை அவர் ஓர் ஆலயத்தில் கழித்தார்; அடுத்த நாள் காலையில் அவர் குறிக்கோள்

எதுவும் இல்லாமல் நடந்து கொண்டிருந்தார். குறிக்கோள் எதுவும் இருக்கக்கூடாது — என்பதே குறிக்கோளாக இருந்தது. இரவு வந்த போது அவர் சுற்றும் பார்த்தார்; அங்கு ஒரு வைக்கோற் போர் இருந்தது. எனவே அவர் அங்கே சென்று படுத்து உறங்கிவிட்டார். அது ஒரு முகம்மதியரின் வீடு என்பதை அவர் அடுத்த நாள் காலையில் கண்டறிந்தார். அம்முகம்மதியர் இவரை ஓரிரு நாள் கவனித்துக் கொண்டார். பின்னர் குருதேவர் அவ்விடத்தை விட்டு நீங்கினர். பிறகு, ஒரு சிறிய கரும்புத் தோட்டத்திற் குரிய ஒரு உழவர் இவரை அழைத்துக் கொண்டார். இவ் உழவர் இவரைச் சில நாட்கள் வரையில் தம்மிடம் தங்க வைத்துக் கொண்டார்; கரும்புச் சாறும் தந்தார். இதற் குள்ளாக, ரிஷிகேசத்திலும், ஹரித்துவாரிலும், மாவட்டம் முழுவதும் இருந்த ஒவ்வொருவரும் சுவாமி சிவானந்தரைக் காணவில்லை என்று தெரிந்து கொண்டார்கள். குருதேவ ரைத் தேடிக் கொண்டு ஒரு துறவி சென்றூர்; அவர் குரு தேவரைக் கண்டு, ''அருள் கூர்ந்து ஆசிரமத்திற்கு வாருங்கள்'' என்று மன்றுடிக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். அப்போதுதான் கரும்புத் தோட்டத்து உழவர் தம்மால் விருந்து பேணப்பட்டவர் இமாலயத்தின் மிகப் பெரும் ஞானி என்று கண்டு கொண்டார். இம் மனிதர் குருதேவரின் மிகப் பெரும் பக்தராக மாறினர்; இந்த அற்புதமான நிகழ்ச்சியைக் கொண்டாடும் வகையில் அவர் ஆண்டு தோறும் ஆசிரமத்திற்கு இரண்டு பீப்பாய் நிறையக் கரும்புச் சாற்றைக் கொண்டு வருவதை வழக்க மாக்கிக் கொண்டார். குருதேவரும் இதை நேரிடையாகச் சுட்டிக்காட்டி, ''நான் இவருடைய இல்லத்தில் இரண்டு நாட்கள் தங்கினேன்'' என்று சொல்வது வழக்கம்.

இத்தகைய அனுபவம் உங்களுக்கு ஏற்படும் போது நீங்கள் இறைவனிடம் நம்பிக்கை கொள்ளுகின்றீர்கள். நம்புவதிலிருந்து நீங்கள் படிப்படியாக நம்பிக்கை பெறு கின்றீர்கள். நம்பிக்கை என்ற அளவில் அது இருந்தாலும், நம் வாழ்நாள் முழுவதும் நம்மைத் தாங்கவல்லதாக

இருக்கின்றது. இதன் பயனாக ஒரு நாள், மீண்டும் இறைவனுடைய திருவருளால் இறைவன் எங்கும் நிறைந்திருப்பது பற்றிய நேரடியான அனுபவம் நமக்கு ஏற்படுகின்றது. அப்போது, இறைவன் மட்டுமே இருக்கின்றார்; வேறெதுவும் இல்லை என்ற உண்மையை நாம் தெளிவாக உணருகின்றோம். இந்தப் படி நிலையில் ஒருவர் 'நான்' என்ற உணர்வு, இறைவனை உணர முடியாது என்று அறிகின்றார். இறைவன் மட்டுமே உண்மை. அகம்பாவம் கரைகின்ற போது, இறைவன் தம்மை அறிகின்றார், தன்னை உணர்தல் என்பது தன்னைப் பற்றிய உணர்வை நீக்குதலே, இறையுணர்வு என்பது இறைவன் தம்மை உணர்வதே. 'நான்' என்பது எதையும் செய்வதில்லை; இறைவனே தமக்காக எல்லாவற்றையும் செய்து கொள்ளுகின்றார். இதுவே பக்தி யோகத்தின் இதயம்; இறையுணர்வின் சாரம்.

குருதேவர் தமது பக்தி யோகப் பயிற்சிகளின் விளைவாகக் கனிந்த 'கனி'யாகத் தெய்வங்களின், ஞானியரின் தரிசனங்களை அனுபவத்தாலும், அவருடைய பிரார்த்தனைகள் நோயுற்றவர்களைக் குணப்படுத்திய போதிலும், அவருடைய பிரார்த்தனைகள் துன்புற்றவர்களின் துன்பங்களைப் போக்கியிருந்தாலும், அவை பக்தர்களின் விதிகளைக் கூட மாற்றியிருந்தபோதிலும், (இவர்களில் பலருடைய நிகழ்ச்சிகள், 'சிவானந்தரின் அற்புத நிகழ்ச்சிகள்' என்ற நூலில் இடம் பெற்றுள்ளன) அவர்பால் தான் என்ற உணர்வு முற்றும் இல்லாதிருந்தே பக்தியின் மிக உயர்ந்த தோற்றமாக இருந்தது. இத்தகைய, அகம்பாவமின்மையே, உண்மையில் அன்பே வடிவாக உள்ள இறைவனாகும்.

## அத்தியாயம் நான்கு

# நற்குணமும் நற்காட்சியும்

எல்லா யோகங்களைப் போலவே, ராஜயோகத்தில் முதற்படி கட்டுப்பாடு ஆகும். ஆன்மீக குருமார்கள் அனை வரும் இதை வற்புறுத்தியுள்ளனர். சிலர் மற்றவர்களைக் காட்டிலும் மிகுதியும் வற்புறுத்தியுள்ளனர்; சிலர் வரம்பு மீறிய கட்டுப்பாடுகளுக்கு முன்னுரிமை தந்துள்ளனர்; மற்ற வர்கள் அவ்வாறு கூறவில்லை. ராஜயோகத்தில் இந்த அடிப்படைக் கட்டுப்பாடு 'யமம்' என்ற கூறப்படுகின்றது. வட மொழியில் 'யம' என்ற சொல் 'கட்டுப்படுத்துபவர் என்று பொருள்படும்; 'மரணம்' என்றும் பொருள்படும். குருதேவர், ''இறைவனையும் நினையுங்கள்; மரணத்தையும் நினையுங்கள் என்று கூறுவார். அன்றாட வாழ்வில் மரணத் தையும் நாம் இடம் பெறச்செய்தால், அதுவே 'யமம்' ஆகும்.

யோக சாஸ்திரங்களின்படி, இந்த யமம் ஐந்து கூறுகளைக் கொண்டது. அகிம்சை — இன்னா செய்யாமை அல்லது ஆக்கிரமிப்புச் செய்யாமை; சத்தியம் — வாய்மை; அஸ்தேயம் — கள்ளாமை அல்லது பொருள் குவியாமை; பிரம்மச்சரியம் — இறைவனிடம் இடையறாது தொடர்ச்சி யாம் மனம் வாசம் செய்யும் ஒரு நிலை (அல்லது மிகவும் வரையறைப்படுத்திய பொருளில், ஆண்மை காத்தல், தூய்மை); அபரிக்கிரஹம் – பேராசை இன்மை என்பவையே அவை. கடைப்பிடிக்கும் கொள்கைகள் அல்லது நியமங் களில் பின்வரும் ஐந்து கருத்துக்கள் அடங்கியுள்ளன. சௌசம் (அகமும் புறமும் தூய்மைபெறல்) சந்தோஷம் (திருப்தி); தபஸ் (நோன்பு); ஸ்வாத்யாயம் (சமய நூல்களைப் பயில்வது); ஈஸ்வரப் பிரணிதானம் (இறைவனுக்கு ஆத்ம சமர்ப்பணம் செய்தல்) என்பவையே அவை. இவை எல்லா வற்றையும் குறைவில்லாமல் பெற்றிருந்தாலன்றி நீங்கள்

யோகம் என்னும் பாதையில் அடி எடுத்து வைக்கமுடியாது என்று சில குருமார்கள் கருதுகின்றனர். எனினும் குருதேவர் தம் கண்களில் ஒரு மின்னல் பளிச்சிடவும், உதடுகளில் அழகிய ஒரு புன்னகை மிளிரவும், ''இவை எல்லாவற்றையும் பெறும் வரையில் நீங்கள் காத்திருந்தால் உங்களுக்கும் பத்து பிறவிகள் சென்றுவிடும். அவற்றை வளர்க்க எல்லா வகையிலும் பாடுபடுங்கள். ஆனால் அவற்றுடன் கூடவே நீங்கள் ஜெபம், தியானம் இன்னும் மற்ற யோகப் பயிற்சிகள் முதலியவற்றையும், அவை நிறை நிலை பெறவில்லையாயிலும் பயின்று வாருங்கள்'' என்று கூறுவார்.

•

பெருமை மிகு குருமார்களின் கூட்டத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போதுகூடக் குருதேவர் சிவானந்தரிடம் மிகப் பெரும் அளவில் பொது அறிவு செறிந்திருந்தது. கட்டுப் பாட்டைப் பற்றிக் குறிப்பிட நேரும்போது அவர் அடிக்கடி ''உங்களைக் கட்டுப்படுத்தப் பலவந்தமான முயற்சிகளைச் செய்ய வேண்டாம்; அப்படிச் செய்யின் எதிர் விளைச்சல்கள் உண்டாகும்'' என்று சுட்டிக் காட்டுவார். அதற்கு மாறாகக் கட்டுப்பாடு உங்கள் உள்ளத்திலிருந்து தானாகத் தோன்றினால், முயற்சி எதுவும் சிறிதளவும் வேண்டாத வகையில் அது அவ்வளவு இயற்கையாக இருக்கும். பலவந்த மாகத் திணிக்கும் எதுவும் உள்ளத்தில் ஒரு கலகத்தை உண்டாக்கிவிடும். குருதேவர் அடிக்கடி, ''வரம்புகளின் கோடிகள் வரையில் செல்ல வேண்டாம். எதிர் விளைச்சல் பற்றி எப்போதும் எச்சரிக்கையாக இருங்கள்'' என்று கூறுவார். எல்லை மீறிய எதையும், எல்லை மீறிய துறவு, எல்லை மீறிய கெடுபிடி போன்றவை மீது குருதேவருக்கு விருப்பம் இருந்ததில்லை, சபதங்களைக்கூட அவர் விரும்பியதில்லை. தீர்மானங்களைச் செய்து கொள்ளுமாறு அவர் மக்களை ஊக்குவிப்பது வழக்கம்; எனினும் அவர் இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டைத் தெளிவாக விளக்கினார். தீர்மானங்கள் இருக்கட்டும்; சபதங்கள் வேண்டாம்.

குருதேவரின் சீடர்கள் இருவரிடையே மனத்தாங்கல் ஏற்பட்ட, ஓரளவு மகிழ்ச்சியற்ற ஒரு நிகழ்ச்சி என் நினைவுக்கு வருகின்றது. மற்றவரை இகழ்வதாகிய பொறுப்பில்லாத சுபாவம் ஒருவர்பால் இருப்பதாக அடுத்தவர் குற்றம் சுமத்தினார். அவர்கள் இருவரும் வந்தபோது குருதேவர் சாய்வு நாற்காலியில் ஓய்வு பெற்றுக்கொண்டிருந்தார். தவறு செய்தவர் குருதேவரின் திருவடிகளின் அருகில் நின்று கொண்டிருந்தார்; திடீரென்று ஏதோ ஓர் உணர்வு அல்லது மனக் கிளர்ச்சிக்கு ஆளாகிய அவர் தம் கரங்களைக் குவித்து, ''சுவாமிஜி... நான் ஒரு சபதம் எடுத்துக்கொள்ளுகின்றேன் ..''. என்று சொல்லத் தொடங்கினார். ஓ! நிறுத்துங்கள், நிறுத்துங்கள்'' என்று குருதேவர் தடுத்து அவர் தம் வாக்கியத்தை முடிப்பதற்கு விடவில்லை. இனிமேல் யாரையும் பழித்துப் பேசப்போவதில்லை என்று இம் மனிதர் சபதம் செய்ய இருந்தார். குருதேவர், ''பின்வரும் நாட்களில் நீங்கள் என்ன செய்வீர்கள் என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? இப்போது ஒரு சபதம் எடுத்துக் கொள்கிறீர்கள்; நாளைக்கு நீங்கள் அதை மீறினால், அப்படிச் செய்ததற்காக உங்கள் மனம் உங்களைத் தொந்தரவு செய்து கொண்டே இருக்கும். வேண்டுமானால், ''பிழை செய்யாமல் இருக்க நான் முயற்சி செய்கின்றேன். நான் தீர்மானம் செய்கின்றேன். இறைவா! அருள்கூர்ந்து எனக்கு உதவுங்கள்'' என்று கூறுங்கள்; தீர்மானங்கள் இருக்கட்டும்; சபதங்கள் வேண்டாம் என்று தெரிவித்தார்.

ஒருவர் மற்றவரிடம், ''இது நன்று: இது அவ்வளவு நன்று அன்று'' என்று கூறலாம். எளிய வாழ்க்கை நடத்துவது, மிதமாக உண்பது, காரம் மிகுந்த உணவைத் தவிர்ப்பது முதலியவை எல்லாம் நல்லனவே. ஆனால் இதை மற்றவர்மீது பலவந்தமாகத் திணித்தால் அது பயன் தருவதில்லை. குருதேவர் பலவந்தமாகத் திணிப்பதை நான் ஒருபோதும் பார்த்ததில்லை.

1944-ல், குருதேவர் ரிஷிகேசத்திலிருந்து பம்பாய்க்குப் போகும் வழியில், டில்லி ரயில் நிலையம் வழியாகச் சென்று கொண்டிருந்தார். அப்போது டில்லியில் பணி செய்து கொண்டிருந்த சில இளைஞர்கள், தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் டில்லி கிளையை நடத்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள் குருதேவரைச் சந்திப்பதற்காக ரயில் நிலையத் திற்குச் சென்றார்கள். குருதேவர் அங்கு வந்து சேர்ந்து எங்களிடம் ஆற்றலும் உற்சாகமும் பொங்க உரையாடிக் கொண்டிருந்தார். பொலிவுள்ள ஆளுமை என்பதன் பொருளை ஒருவர் அறிந்து கொள்ளவும் பாராட்டவும் விரும்பினால் அவர் குருதேவரைப் பார்க்க வேண்டும். அவர் எங்கள் அனைவரிடமும், ''நீங்கள் எப்படி இருக்கிறீர்கள், நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கின்றீர்கள்'' என்பன போன்ற செய்திகளைக் கேட்டு நலம் விசாரித்தார். எங்களிடையே, திருமணம் ஆன ஒருவரும் இருந்தார்; அவரிடம் குருதேவர், ''தங்கள் மனைவி எப்படி இருக்கிறார்கள்?'' என்று வினவினார். ''அவள் தற்போது இங்கு இல்லை. அவள் சென்னைக்குச் சென்றிருக்கின்றாள், சுவாமிஜி'' என்று அவர் பதில் கூறினார். குருதேவர், ''அவர்கள் அங்கேயே இருக்கட்டும். தாங்கள் தனி வாழ்வை, சுதந்திர வாழ்வை நடத்துங்கள். அவர்கள் அங்கேயே தங்கி இருக்கட்டும்'' என்று கூறினார். ஆனால் அவர் தம் மனைவியின்மீது மிகுந்த பிரியம் வைத்திருந்தார். அவர், ''சுவாமிஜி! நான் எவ்வளவு நாட்கள் தனித் திருப்பது? அதனால் எனக்கு அவ்வளவு மகிழ்ச்சி இல்லை'' என்று கூறினார். ''ஓ! அப்படியா? அப்படியிருந்தால் அவரை விரைவில் வரவழைத்துக் கொள்ளுங்கள்'' என்று குருதேவர் அறிவித்தார். தாம் விரும்பியதை அவர் தெரிவித்தார்; ஆனால் நீங்கள் வேறு எண்ணம் கொண்டிருந் தால், அவர் தம் கருத்தை உடனே மாற்றிக்கொள்ளுவார். இப்படி நிகழ்வதைக் கண்காணிப்பதற்கு மிகவும் ஆச்சரிய மாக இருக்கும்.

மற்றொரு நிகழ்ச்சி. ஏற்கனவே துறவியாகவும், பிக்ஷை ஏற்று உண்பவராகவும் இருந்த ஓர் அழகிய இளைஞர்

ஆசிரமத்திற்கு வந்தார். அவர் அற்புதமான அலேபாயும் தாடி வளர்த்திருந்தார். அவர் குருதேவரிடம், ''தங்கள் சந்நியாசச் சீடராக நான் இங்கு தங்க விரும்புகின்றேன்'' என்று தெரிவித்தார். ''அப்படியானல் நீங்கள் உங்கள் தலே முடியையும் தாடியையும் மழித்துக்கொள்ள வேண்டும்'' என்று குருதேவர் கூறினர். அவர் தயக்கத்துடன் ஒத்துக் கொண்டார். இதைக் கவனித்த குருதேவர், ''ஆனல் நீங்கள் அதன் பிறகு வளர்த்துக் கொள்ளலாம், மழிப்பது தீட்சைச் சடங்குக்காகத்தான்'' என்று உடனே அறிவித்தார். அதுதான் அழகு. குருதேவர் தாம் சொல்ல விரும்பியதைத் தெரிவிப்பார்; ஆனல் நீங்கள் அதை எப்படி எடுத்துக் கொள்ளுகிறீர்கள், மகிழ்ச்சியாகவும் உற்சாகமாகவும் ஆகவா அல்லது கட்டாயப்படுத்தப் படுவதாக நீங்கள் உணர்வதனலா என்பதை மிக மிகக் கவனமாகவும் மிகவும் எச்சரிக்கையாகவும் கண்காணிக் கின்றார்; வற்புறுத்தப்படுவதுபோல் நீங்கள் உணர்வதாகத் தென்பட்டால் உடனே அவர் பின்வாங்கி விடுவார். இதைக் காண்பதற்கு மிகவும் அற்புதமாகவும் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகவும் இருக்கும்.

எந்த ஒரு பயிற்சியைக் குருதேவர் உங்களுக்குப் பரிந்துரை செய்தாலும் அது முதலில் உங்கள் உள்ளத்தில் நுழைந்துவிடும்; பிறகு உள்ளத்தினுள் அது மலர்களேப் போல் பூத்து விளங்கும். மரத்தினுள் இருந்தே மலர்கள் மலர்ந்து பின் வெளியே தோற்றம் தருகின்றன. நீங்களும் நானும் ஒரு கொத்துப் பூக்களே வாங்குவதற்கு ஒரு பூ வியாபாரியினிடம் செல்ல வேண்டும்; மரம் அப்படிச் செல்வதில்லே. இயற்கைக்கும் செயற்கைக்கும் இடையே யுள்ள ஒரு வேறுபாடு இதுதான். செயற்கையான பயிற்சி நிர்ப்பந்தம் காரணமாக இடம் பெறும்போது நீடித்து நிற்பதில்லே; அஞ்சத்தக்க ஓர் எதிர்ச் செயலுக்கே அது இட்டுச்செல்லுவது வழக்கம். குருதேவரின் வழி நிச்சயம் இதுவன்று.

சிறிதுகாலம் வரைக்கும் அவர் உலக இன்பங்களைத் துறப்பதில் எல்லைமீறிய துறவியாக இருந்தார். பின்னர் ஏதோ வந்துசேரவே அதையும் எல்லா நேரங்களிலும் ஏற்றுக் கொள்ளத் தயாரானார். அவர் தரையிலும் உறங்கமுடியும்; நீங்கள் ஒரு சிறிய பாயைத் தந்தால் அதன் மீதும் சமஅளவு அதே மகிழ்ச்சியோடும் உற்சாகத்தோடும் உறங்குவார். அங்கு மிகவும் வசதியான படுக்கை இருந்தால் அதிலும் அவர் உறங்கமுடியும். வரம்புமீறல்களைப் போலவே கண்டிப்பையும் நான் குருதேவரிடத்தில் ஒருபோதும் கண்டதில்லை. அவ்வாறே, சபதங்களும் எடுத்துக்கொள்ளப்படவில்லை. நீங்கள் வளர்க்க விரும்பும் பயிற்சிகளையும், நற்குணங்களையும் பற்றிப் பிரார்த்தனை செய்யும் பாவனையில் நீங்கள் தியானம் செய்கின்றீர்கள். பிரார்த்தனை செய்யும் பாவனையில் நீங்கள் தியானம் செய்து, ஒவ்வொருநாள் காலையிலும் நீங்கள் இந்தச் செய்திகளை நினைவில் கொள்ளுகின்றீர்கள். பிறகு அவற்றை உங்கள் உள்ளத்தில் வளரவிடுகின்றீர்கள். இது அழகான, அற்புதமான போதனையாக இருந்தது.

## இயம நியமங்கள்

அஷ்டாங்க யோகத்தின் முதல் இரண்டு அங்கங்களைக் (உறுப்புக்கள்) கொண்டுள்ள தெய்வீக குண நலன்களைக் குருதேவர் பிறவியிலேயே பெற்றிருந்தார். சாதகர் ஒருவர் ஒவ்வொரு குணத்தையும் பெறுவதற்குப் பல பிறவிகள் பிறக்க வேண்டியிருக்கும்; ஆனால் அவை யாவும் அவருக்குப் பழைய இயற்கையாக அமைந்திருந்தன; அவற்றிற்குரிய செயல்கள் அக்குணங்களில் அடைவதற்குரிய நிறை நிலையைப் படம் பிடித்துக் காட்டின. சான்றாக, அகிம்சை, அவரால் தவிர்க்க முடியாததாக இருந்தது. யாருடைய உணர்வுகளையும் புண்படுத்த அவரால் முடியாதிருந்தது. அவருடைய சொற்கள் தேனும், அமிர்தமும் நிறைந்தவை என்பதை அவரைச் சந்தித்தவர்கள் அறிவார்கள். கடுமையான ஒரு சொல்லோ அல்லது இரக்கமற்ற ஒரு குறிப்போ அவருடைய உதடுகளிலிருந்து ஒருபோதும் தப்பிக் கூட வந்ததில்லை; ஏனெனில் அவருடைய உள்ளத்தில்

அவை ஒரு சிறிதும் இருக்கவில்லை. யார்மீதும் அவரால் பகைமையோ, பகைமை பற்றிய எண்ணத்தையோ பாராட்ட முடியவில்லை. தாம் சொன்ன நல்ல பொருள் பொதிந்த சொல்லைத் தவருகப் புரிந்து கொண்ட சீடரின் மனம் புண்பட்டிருக்குமோ என்று எண்ணும் எண்ணத்தைத் தவிர, இவ்வுலகத்தில் வேறெதுவும் அவரது உள்ளத்தைக் கலங்கச் செய்யக்கூடியது இல்லை என்பதை நான் பார்த்திருக்கின்றேன். குருதேவருடன் நான் இருந்த காலமெல்லாம் ஒரே ஒரு முறை நிகழ்ந்த நிகழ்ச்சி — ஒரு சீடரின் குற்றமுள்ள நெஞ்சு, குருதேவர் வழங்கிய புனிதம் மிகுந்த நல்ல ஓர் அறிவுரையால் புண்பட்டுவிட்டது. அவருடைய உள்ளம் உறுதி பெறுவதற்காகக் குருதேவர் எந்த எல்லைவரை சென்ருர் எனில்; அவர் அச்சீடரைப் பற்றி மிக உயர்ந்த கருத்தையே கொண்டுள்ளார் என்றும், தாம் வாழ்வதே அந்தச் சீடருக்குப் பணிவிடை செய்வதற்காகவே என்றும் வாக்குறுதி தந்தார்; இது மிகவும் ஆச்சரியத்தை விளைவிப்பதாகும்.

குருதேவர் எழுதியுள்ள கட்டுரைகளில் கண்டனங்கள் நிறைந்துள்ளன என்பதிலும் அவருடைய சொற்பொழிவுகளில் கூட அவை சிலவாக இடம் பெற்றுள்ளன என்பதிலும் சிறிதும் ஐயமில்லை. எனினும் உரையாடும்போது அவர் எப்போதும் நிறை அன்பாகவும், நிறை புகழ்ச்சியாகவும், நிறை உற்சாகமாகவும் இருந்தார்.

''மற்றவர்களின் உணர்வுகளைப் புண்படுத்தாதீர்கள், அனைவரிடத்தும் அன்பாக இருங்கள்'', இது குருதேவர் மிகவும் வலியுறுத்தி, வற்புறுத்திய போதனைகளில் ஒன்ருகும்; அவரைக் காட்டிலும் அதை நிறைவாகப் பயிற்சி செய்தவர் யாரும் இல்லை. ஏனைய குருமார்கள் தண்டனை தர வேண்டும் என்று விதித்து அதை நியாயப்படுத்த விரும்பும் ஒரு வழக்கில் கூடக் குருதேவர் அறம் சார்ந்த கண்டனம்கூட வேண்டாம் என்று நடைமுறையில் பின்பற்றி வந்தார், ''சேவை செய்க; அன்பு செலுத்துக; கொடை வழங்குக; தியானம் செய்க''

என்று அவரே எங்கள் முன்வைத்த போதனையைத் தவிர அவர் வேறு எதையும் செய்கையில் பின்பற்றவில்லை. யாரை நீங்கள் திருத்தவேண்டும்என்றும், நல்லபடியாக உருவாக்கவேண்டும் என்றும் விரும்புகிறீர்களோ அவருக்கு நீங்கள் சேவை செய்யுங்கள்; அவரிடம் அன்பு செலுத்துங்கள்; அவருக்காகத் தியானமும் பிரார்த்தனையும் செய்யுங்கள். இதுவே அகிம்சையின் வழியாகும். குருதேவரிடத்தில் அகிம்சை, அகிலத்தையும் நேசிக்கும் உடன்பாட்டுக் குணமாகவும், மன, மொழி, செயல்களால் செலுத்தும் அன்பாக வும், அன்றாட வாழ்வில் நாள்தோறும், நிமிடந்தோறும், சுவாசிக்கும் ஒவ்வொரு மூச்சிலும் பொருந்தியதாகவும் அமைந்தது. அவர் செல்லும் வழியில்கூட அது ஊடுருவி வியாபித்தது. அவர் கம்பீரமான பெரிய உடம்பைப் பெற்றிருந்தார் எனினும் காலடிகள் மிகவும் மெதுவாகவும், மென்மையாகவும் நிலத்தில் விழுந்தன. காலடியோசையைக் கேட்கவும்கூட யாராலும் முடியாது. குருதேவர் சாலையில் நடக்கும்போது அக் காட்சியை நின்று காண்பது, களிப்பைத் தருவதாகும். சில சமயங்களில் அவர் ஒரு கையில் பையையும், மற்றொரு கையில் ஹரிக்கேன் விளக்கையும் ஏந்தி வருவது வழக்கம். நடையில் அகிம்சை இருக்கும்; காலடி வீழ்ச்சியில் அன்பு இருக்கும். அங்கே உலர்ந்துபோன இலை கிடந்தாலும் அவரால் மிதிபட்டாலும் நசுங்கிவிடாது; எறும்புகளின் மீது அவருடைய காலடிபட்டு விட்டாலும் அவற்றிற்குக் காயம் ஏற்பட்டுவிடாது; அவர் நடந்து செல்வது அவ்வளவு மென்மையாக இருக்கும்.

ஒருவர் அகிம்சையில் உறுதியாக நிலைபெற்றுள்ளார் என்பதை அறிவிக்கின்ற உரைகள் மற்றவர்களின் துன்பங் களைக் கண்டால் ஒரு கணமும் சகிக்க முடியாமையும், அவர்களுடைய வருத்தத்தைப்போக்க உண்மையாகவே ஓடிச்சென்று உதவுவதும் ஆகும். குருதேவர் கங்கையில் குளிக்கும்போது ஏதேனும் ஒரு பூச்சி தத்தளித்தவாறு உயிருக்குப் போராடி நீரில் மிதந்து வந்தால், வேறு எண்ணம்

இன்றி உடனே தம் உள்ளங்கையில் ஏந்திக் கரையின் மீது இடுவார். ஒரு முறை அவர் தம் முகத்தில் வெறுப்பின் அடையாளம் சிறிதும் இல்லாமல், எங்களிடம், ''மலத்தில் விழுந்து உயிருக்காகத் தத்தளிக்கும் ஒரு புழுவோ அல்லது பூச்சியோ இருந்தால் நான் அதை அதிலிருந்து மீட்டு எடுத்துக் காப்பாற்றி விடுகின்றேன்'' என்று தெரிவித்தார். உலகத்தில் எந்த ஓர் உயிருக்கும் தீங்கு செய்ய அவர் மற்றவர்களை அனுமதிக்க மாட்டார்.

நான் இதை என் கண்களால் கண்டிருக்கின்றேன். ஆசிரமவாசி ஒருவர் குருதேவர் வழக்கமாகப் படுத்து உறங்கும் கட்டிலைக் காற்றில் உலரவைப்பதற்காகக் கொண்டு சென்றார். அக்கட்டில் மூட்டைப் பூச்சிகளின் உறைவிடமாக இருப்பதை அவர் கண்டறிந்தார். குருபக்தி அவருடைய உள்ளத்தில் அலைமோதியது; எனவே அவர் அவற்றை அழிக்க முற்பட்டார். ஆனால் குருதேவர் அங்கே தோன்றி, ''அன்பரே! அருள்கூர்ந்து இதைச் செய்ய வேண்டாம். இதற்குப் பதிலாகக் கட்டிலைக் கொண்டு போய்ச் சில நாட்களுக்குக் காட்டில் வைத்துவிடுங்கள்; அதுவரைக்கும் எனக்கு வேறொரு படுக்கை தந்துவிடுங்கள்,'' என்று கேட்டுக்கொண்டார்.

தம் குடிலில் அடைக்கலம் அடைந்துள்ள எலிகளை அவர் பாதுகாத்ததும் இவ்வாறே இருந்தது. அவற்றுட் சில அங்குள்ள காகிதங்களைத் தின்னவும், படுக்கையையும் உடைகளையும் சேதப்படுத்தவும் தொடங்கியிருந்தன. அங்கே பணிசெய்து கொண்டிருந்த பணியாளர் சமாளித்து அவற்றைப் பிடித்தார்கள்; ஆனால் அவர்கள் அந்த எலிகள் ஓர் உல்லாசப் பயணம் செய்யுமாறு அவற்றை ஒரு சுகமான சாக்குப்பையில் இட்டு கொண்டுபோய்க் காட்டில் விட்டுவிட்டு வருமாறு மட்டுமே கட்டளை பெற்றனர்; அவை மீண்டும் குருதேவர் குடிலுக்கே அன்று மாலையே திரும்பி வந்து சேர்ந்தன. அவை இரவில் குருதேவரின் விரல் நுனிகளைத் தம் முன்பற்களால் கடிப்பதன் வாயிலாக

அவருடைய கருணையை வேண்டிநின்றன. நீரிழிவு நோயாளி யாக இருக்கும் ஒருவருக்கு இது மிகவும் ஆபத்தானதாகும். ஒரு நிபுணர் ஆசிரமத்திற்கு வந்து எலிகளின் தொல்லையை ஒழித்துக் கட்டுவதற்குத் தம் நிபுணத்தவம் வாய்ந்த அறிவுரை தந்தார்; உண்மையில் அது, எலிகளை நஞ்சூட்டி ஒழிப்பதாகிய எளிய வழிதான். பேசப்படும் பொருள் எது வாக இருந்தாலும் மகிழ்ச்சி தந்தாலும் அல்லது வெறுப்பை யூட்டினாலும்; சமயம் பற்றியதாக இருந்தாலும் அல்லது உலகியல் பற்றியதாக இருந்தாலும், எப்போதும் அனுதாபத்துடன் கேட்பார். இப்போதுதான் முதல்முறை யாகக் கேட்பதற்கும் கூட மறுத்தார். மறுப்பின் அடை யாளமாக அவர் தம் தலையை வேகமாக இருபுறமும் ஆட்டி ஞர், ''எலிகள் கொல்லப்படக் கூடாது. மாறாக, எலிகள் அழித்துவிடக்கூடும் என்று நாம் கருதும் பொருள்களுக்குத் தகுந்த பாதுகாப்பை ஏற்படுத்துவோம். கையெழுத்துக் காகிதங்களை இரும்பு பீரோவில் வைப்போம்; படுக்கையை யும் உடைகளையும்கூட அவை அணுகாதவாறு தகுந்த பாதுகாப்பில் வைப்போம். எலிகளைக் கொல்லக்கூடாது'' என்று அவர் கூறினார். நிபுணர் இன்னும் அதிகமாகப் பேசி யிருந்தால் அவர் எலிகளுக்கு உணவாகத் தருவதற்காக நாள்தோறும் ஒழுங்கான உணவு விநியோகத்தைப் பெற்றிருப்பார். ஆசிரமத்தின் சுற்றுப் புறங்களில் உள்ள குரங்குகளை ஓட்டிவிடவேண்டும் என்று இதுபோலத்தான் கேட்டுக் கொள்ளப்பட்டது. குரங்குகளுக்கு ஒழுங்காக கொட்டைகளை உணவாக வினியோகம் செய்ய அனுமதி தந்து குருதேவர் அந்த யோசனையை நிராகரித்து விட்டார்.

மக்கள் அனைவரும் பின்பற்றுவதற்குரிய ஒரு முன்மாதிரி யாகத் தம் சொந்த உயர்ந்த வாழ்வையே காணச் செய்து அவர்களிடையே ஒற்றுமையைப் பரப்புகின்ற, அன்பு, அமைதி ஆகியவற்றின் தூதுவராகக் குருதேவர் இருந்தார். வாய்ப்பு நேர்ந்த போதெல்லாம் அவர் மேடைமீது ஏறி, மிக உயர்ந்த தத்துவக் கொள்கைகளைப்பற்றி விளக்கிப் பேசாமல், அனைவருள்ளும் வியாபித்திருக்கும் ஒரு பொது

மன உணர்வைப் புரிந்துகொள்ளுவதற்கான நடைமுறைப் பயிற்சியை எப்படிப் பயன்படுத்துவது, அதாவது தன்னல மற்ற சேவையையும் அகிலத்தையும் நேசிக்கும் அன்பையும் பற்றியே விளக்கினூர். அவருடைய தூது இயக்கம் மேடைப் பேச்சுடன், அறிக்கைகள் வெளியிடல் என்பவற்றுடன் மட்டும் நின்று விடவில்லை; ஆனுல் அவருடைய அணியில் வந்து சேர்ந்தவர்கள், அவருடைய செய்திகளை எட்டுகின்ற வர்கள் ஆகிய அனைவரையும், எல்லோரையும் நேசிக்கவும், எல்லோருக்கும் சேவை செய்யவும் வல்லவராக ஆக்கு வதற்கான நடைமுறைப் பயிற்சிகளைப் பயன்படுத்துவதாக அமைந்தது. இவ்வாறு இந்த இறைவனின் அவதாரம் அகிம்சையின் கொள்கைகளை ஒளி பரப்பியதனுல், அன்புக் கதிர்கள் பாய்ந்து இருளாகிய வெறுப்புணர்வு, வேற்றுமை, பகைமை ஆகியவற்றை விரட்டி விட்டன. அகிம்சையின் மிக உயர்ந்த அளவின் நிறைநிலைக்கு ஒருவர் தம்மை பணித்துக்கொண்டால், எல்லா நற்குணங்களின் உறைவிட மாக அவர் ஆவது இயற்கையாகத் தானுகவே நிகழும் என்று குருதேவர் எங்களுக்கு உறுதியாகத் தெரிவித்தார். அதற்கு அவரே நிருபணமாகவும் விளங்கினூர்.

சத்தியம், மனம், மொழி, மெய்களில் முற்றிலும் உண்மையுள்ளவராக இருத்தல் குருதேவரின் மூச்சாகவே இருந்தது. உண்மை என்பது நீங்கள் ஒவ்வொன்றைப் பற்றியும், உங்கள் வாழ்வைப் பற்றியும், உங்கள் சூழ்நிலையைப் பற்றியும், பொய் பேசாமல், உண்மைகளை மட்டுமே எதிர்நோக்கி, உண்மையே பேசுவது என்று மட்டும் பொருள்படவில்லை. வாழ்வைப்பற்றிய உண்மை என்ன? வாழ்வு, மரணத்திற்கு உரியது. வாழ்வு பலவீனத்துக்கும், நோய்க்கும், உயர்வு, தாழ்வுகளுக்கும், வெற்றி தோல்விகளுக்கும், இன்ப துன்பங் களுக்கும் உரியது. அதை நீங்கள் எதிர்கொள்ள வேண்டும்.

குருதேவரின் கட்டுப்பாடு வாழ்வில் மரணத்தைக் கொண்டுவந்து சேர்த்தது. ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு

நிமிடமும் அவர் இறந்தார்; அவர் நிலையான இளமை யுடன் விளங்கியதற்குரிய இரகசியங்களில் இதுவும் ஒன்றாகும். எப்போதும் ஒருவர் இறந்து கொண்டிருக் கின்றார்; எனவே திடீர் மரணம் என்று எதுவும் கிடையாது. உடம்பு எல்லா நேரங்களிலும் மரணத்தை நோக்கி முன்னே செல்வதாகவும் தொடர்ந்து மூப்படைந்து கொண்டும் இருக்கின்றது. நீங்கள் இதை அறிந்து கொண்டால் நோய்வாய்ப்படுவது பற்றியோ, அல்லது மூப்படையும் வயது பற்றியோ அல்லது மரணத்தைப் பற்றியோ அஞ்சமாட்டீர்கள். நிச்சயம் சிரியுங்கள்; புன்னகை பூத்து மகிழுங்கள். ஆனால் இவை எல்லாம் நிகழும் உண்மைகள் என்பதையும் நினைவில் கொள்ளுங்கள். அப் போது நீங்கள் உடனே விடுதலை பெற்றவர் ஆகின்றீர்கள். உண்மை என்பது மிக மிக எளிய கட்டுப்பாடு. உண்மை அல்லது வாழ்க்கையின் உண்மையைப் பற்றிய விழிப்புணர் வுடன் இருங்கள்; அப்போது நீங்கள், இன்ப துன்பங்களுக்கு அப்பால், ஏதோ ஒன்று, வாழ்வில் மிகவும் மதிப்புயர்ந்த ஒன்று, இருப்பதையும் காண்பீர்கள்.

குருதேவர் பாடினார்:

''உண்பதும், பருகுவதும், உறங்குவதுமாகிய செயல் களைக் காட்டிலும் புனிதமான வேலை வேறு எதுவும் இல்லையா?''

இரவும் பகலும் உண்பதிலும், பருகுவதிலும், உறங்கு வதிலும் உங்கள் வாழ்க்கை கழிகின்றது என்ற உண்மையை முதலில் நீங்கள் எதிர்கொள்ள வேண்டும். நீங்கள் செய்யும் எதுவும் இவற்றால் உந்தப்படுவதாக உள்ளது! இதை உணரும் வரையில் உங்கள் மூக்கின் நுனியை நோக்கியவாறு நீங்கள் அமர்ந்து, ''நான் அமரத்துவமுள்ள ஆத்மா'' என்று சொல்வதில் பொருள் இல்லை. நீங்கள் அமரத்துவமுள்ள ஆத்மா அன்று. நீங்கள் பெரும்பாலும் உடம்பாக இருக் கின்றீர்கள். எதற்காக உண்ண வேண்டும்? எதற்காக வாழ

வேண்டும்? வாழ்க்கை என்பதன் பொருள் யாது? மரணம் என்பதன் பொருள் யாது? என்றெல்லாம் நீங்கள் உங்களையே கேட்டுக் கொண்டதுண்டா? வாழ்க்கையைப் பற்றிய உண்மையைத் தெரிந்துகொண்டால் மாத்திரமே நீங்கள் இவற்றுக்குரிய விடைகளைக் காண்பீர்கள்; இல்லையெனில் இல்லை.

குருதேவர் பரப்பிரம்மத்தில் தம் இருப்பை இருத்திக் கொண்டு இவ்வுலகில் வாழ்ந்தார், இயங்கினார். எனவே பிரம்மச்சரியத்தின் (புலனடக்கம்) மிக உயர்ந்த வகையைப் பயிற்சி செய்தார். சத்தியம், புலனடக்கம் ஆகியவற்றைத் தொடர்ந்து வரும் நற்குணங்களாகிய அஸ்தேயம் (கள்ளாமை); அபரிக்கிரஹம் (பேராசை இன்மை) ஆகியவை குருதேவரிடத்தில் இயற்கையாக அமைந்திருந்தன; அவர் உண்மையான அற்புதமான ஒரு திருட்டைச் செய்தார் — அவர் நம் உள்ளங்களைக் கொள்ளை கொண்டு, நம்மிடமிருந்த பாவங்கள் எல்லாவற்றையும் கொண்டுபோய்விட்டார். இது நமக்கு வாய்த்த வரப்பிரசாதமாகும்.

நியமங்கள், பகவத்கீதை 17-ஆம் அத்தியாயத்தில் 14–16 சுலோகங்களில் கண்ணபிரான் விளக்கும் மூன்று வகையான, கடுமையான விரதங்களுக்குக் குருதேவர், உயிர் வாழும் ஓர் சிறந்த இலக்கியமாக விளங்கினார். சான்றாகப் பேச்சைப் பற்றிய விரதத்தைப் பற்றிப் பார்க்கும் போது, அவர், உண்மையான பயன் தரும் சொற்களாக இருப்பினும் கசப்பைத் தருவனவாக இருப்பின் அவற்றைப் பேச மாட்டார். பதிலாக அவர் தமக்கே உரிய பாணியில், ''இறைவனுடைய பொறுப்பில் விட்டு விடுங்கள்'' என்று கூறுவார். குருதேவர் பேச்சைத் தம் முழுமையான கட்டுப் பாட்டில் வைத்திருந்தார். ஒரு சொல்லைக் கூட அவர் வீண் செய்யமாட்டார். கேட்பவர் கல்வி பெற்றுத் தம் உள்ளத்தை உயர்த்திக் கொள்ளுமாறு குருதேவரின் சொற்கள் அளந்து, வரையறுத்துப் பேசப்பட்டன.

பயனற்ற தத்துவத் தர்க்க வாதங்களும் உலகியல் வீண் பேச்சுக்களும் அவருடைய மூச்சு சக்தியை வீணாக்கத் துணிந்ததில்லை. தம்முடைய அறிவாற்றலை ஒரு காட்சிப் பொருளாக ஆக்க அவர் விரும்பியதில்லை; பேச்சின்போது குறுக்கிடும் வித்தியா கர்வம் உள்ள ஒருவரைத் தம்முடைய ஆழ்ந்த மௌனத்தால் நாணம் அடையச் செய்வார்.

அவருடைய தன்னடக்கத்தைப் பற்றிப் பார்க்கும்போது அவருள் அது ஏற்கனவே ஒவ்வோர் அணுவும் கட்டுப்படல் என்ற அளவுக்கு அமைந்திருந்தது. தன்னிச்சைக்கு உட் படாத எதுவும் இல்லை. அவருடம்பில் இருந்த ஒவ்வோ ரணுவும் அவருக்குக் கீழ்ப்படிந்தது. நள்ளிரவு நேரத்தைக் கூடக் கடந்துவிடுமாறு நிகழ்ச்சிகள் நீண்டு அமைகின்ற சத் சங்கத்தில் கலந்து கொண்டு மணிக்கணக்கில் அவர் அமர்ந்து தங்கியிருப்பதைக் காண்கின்ற ஒருவர் அவருக்குக் கடுமை யான வயிற்றுப்போக்கு அல்லது நீரிழிவு அல்லது இடுப்பில் வாயுப் பிடிப்போ உண்டென்று நம்பமாட்டார்; உறக்க மோ அல்லது களைப்போ அவரை ஓய்வு கொள்ளக் கட்டாயப் படுத்த முடியாது.

அவர் பின்பற்றிய மிக உயர்ந்த விரதம், பெரும்பாலும் (அவரைப்போன்ற உயர்வு வாய்ந்த ஞானியரிடையேயும்) அவர் மட்டுமே பயிற்சி செய்து வந்த அதை மிக உயர்ந்த யோகம் என்று சொல்லப்படும்; ''இகழ்ச்சியைப் பொறுத்துக்கொள்க; தீங்கைப் பொறுத்துக்கொள்க'' என்பதே அது. இதைக்காட்டிலும் உயர்ந்த விரதம் எதுவுமில்லை. நீங்கள் இதைப் பயின்றால் இதுவே உண்மையான விரதம் என்று தெரிந்து கொள்ளுவீர்கள்; உள்ளத்தின் உள், பயங்கரமான நெருப்பு ஏற்படுகின்றது. வெளியே புகைச்சல் வராமல், உள்ளேயே அதை அணையும் படியாக விட்டுவிட்டால், உங்களுடைய தீய பதிவுகள், மனச்சார்புகள் ஆகிய எல்லாவற்றையும் எரித்து ஒழித்து விடும்; அகந்தை, ஆணவம் ஆகியவற்றையும் எரித்து ஒழித்துவிடும். நான் இதைக் கண்ணாரப் பார்த்திருக் கின்றேன், அவருடைய பாதரட்சைகளைக் துடைக்கவும்

தகுதியில்லாத மக்களும், சீடர்களும் அவரை இகழ்ந்து அவருடைய உணர்வுகளைப் புண்படுத்தியபோதும் அவர் புன்முறுவல் பூத்தவாறு அவர்களை ஆசீர்வதித்திருக்கின்றார். இதை எண்ணினாலும் எனக்கு நடுக்கம் ஏற்படுகின்றது.

குருதேவருடைய விரதம், அவருடைய ஒவ்வொன்றையும் போலவே, நிறைவாகவும், பரந்து விசாலமானதாகவும் இருந்தது. இறைவனுடைய விருப்பத்திற்கு முற்றிலும் சரணாகதியடைவதே அவருடைய மிக உயர்ந்த குண நலமாக இருந்தது. இதுவே அவருடைய ஒவ்வொரு செயலிலும் விளக்கமாக அமைந்தது; ஒவ்வொரு சொல்லிலும் ஒலித்தது; ஒவ்வொரு எண்ணத்திலும் ஒளி விட்டது. இவ்வாறு அவர் இறைவனுடன் இரண்டறக் கலந்து விளங்கினார். அவருடைய செயல்கள்; மனித இனத்துக்கு நலத்தை உண்டாக்கக்கூடியனவாக இருந்தன; அவருடைய சொற்கள் கண்டிப்பாகவும், வாழ்வைத் திருத்தி அமைப்பனவாகவும் இருந்ததைப் போலவே ஆறுதல் தருவனவாகவும், பயன் ஊட்டுவனவாகவும் இருந்தன. அவருடைய எண்ணங்கள் எப்போதுமே தெய்வீகத் தன்மையுள்ளனவாக இருந்தன.

## துறவு

கட்டுப்பாடுகள் அனைத்துக்கும், அவை எப்படி இருப்பினும், அவற்றுக்கெல்லாம் அடிப்படையாக இருப்பது ஒரே ஒரு கட்டுப்பாடு; ஒரே ஒரு நற்குணம் ஒன்று உள்ளது. பகவத் கீதையில் கண்ணபிரான், அப்பியாசம், வைராக்கியம் என்ற இரண்டு சொற்களை மட்டும் குறிப்பிட்டு வரையறை செய்கின்றார். அப்பியாசம் என்பது தொடர்ச்சியாக, மீண்டும் மீண்டும் செய்யும் பயிற்சியாகும். வைராக்கியம் (பற்றின்மை அல்லது துறவு) என்பது இன்ப நாட்டத்திலிருந்து திரும்பி விடுவதாகும், இன்ப நாட்டமுடைய மனத்தை அடக்குவதாகும், ஆசையை அல்லது ஆவலைத் தன்மீதே திருப்புவதாகும்.

உலகத்தை நீங்கள் துறந்தாலன்றித் தன்னைப்பற்றிய மெய்யுணர்வையோ அல்லது இறைவனைப் பற்றிய மெய்யுணர்வையோ நீங்கள் பெற முடியாது. உலகத்தின்பால் உள்ள உங்களின் பற்றுதலை விட்டாலன்றி நீங்கள் உங்கள் ஆன்மீக இலக்கை அடையமுடியாது. குருதேவர் இதைத் தம் பாடலில் வெளியிட்டுள்ளார். "பொருள்களிலிருந்து உங்கள் மனத்தைப் பிரித்து, இறைவனிடம் அதைச் சேர்த்துவிடுங்கள்". உங்கள் மனத்தை உலகியல் விருப்பங்கள், ஆவல்கள், அடைய விரும்பும் பதவிகள் ஆகியவற்றிலிருந்து பிரித்து இறைவனிடம் அதைச் சேர்த்துவிடுங்கள். எவ்வகையான ஆன்மீக வாழ்க்கைக்கும் இத்துறவு அடிப்படையாகும், துறவு இல்லை எனில் ஆன்மீக வாழ்க்கையும் இல்லை. இவ்வகையிலும் குருதேவர் மறுக்கக் கூடாத கட்டாயக் கொள்கைகள் என எவற்றையும் கொண்டிருக்கவில்லை. தம் வாழ்விலும் தம் போதனைகளிலும் கூட அவர் இவ்வாறே இருந்தார். இவற்றின் மீது அவருக்கு விருப்பம் இருக்கவில்லை.

ஒரு புனித மகான், ஒரு துறவி, சுவாமி சிவானந்தர் ஆகியோரைப் பற்றி நீங்கள் நினைக்கும்போது உங்களுக்குத் தோன்றும் அடிப்படை எண்ணம் அவர் ஒரு துறவி என்பது தான். "சுவாமி சிவானந்தர் உலகத்தைக் துறந்தார்" என்று நாம் வழக்கமாகச் சொல்லுகின்றோம், ஆனால் அது முற்றிலும் சரியன்று. டாக்டர் குப்புசாமிதான் உலகத்தைத் துறந்தார். துறவு என்பது ஒருவர் உலகத்தை துறந்த பின் எஞ்சி நிற்பது; துறவு பற்றிய உணர்வு பக்குவமடையும் போது ஒருவர் துறவியாகின்றார்.

சுவாமி சிவானந்தரின் வாழ்வில், துறவு பற்றிய உணர்வு குழந்தைப் பருவத்திலிருந்தே தோன்றியிருந்தது. நாம் அனைவரும் செய்வதுபோல, ஒரு படிநிலையில் அவர் ஏதேனும் ஒன்றைத் தவிர்த்துவிட்டு இன்னொன்றைப் பற்றிக்கொள்வது என்று பொருள்பட்டது. நீங்கள் உங்கள் பொம்மைகளைத் தவிர்த்துவிட்டுப் பிறிதொன்றை — உங்கள் நண்பர்களைப்

பற்றுகின்றீர்கள்; மீண்டும் நீங்கள் உங்கள் நண்பர்களைத் தவிர்த்துவிட்டுப் பிறிதொன்றை — குழந்தைகளைப்பற்றிக் கொள்ளுகின்றீர்கள்; மீண்டும் இவ்வாறே அது தொடர்ந்து நடைபெறுகின்றது; முடிவில் நீங்கள் வேறொருவரால் பற்றிக்கொள்ளப்படுகின்றீர்கள், இது ஒவ்வொருவராலும் செய்யப்படுகின்றது; ஆனால் இது துறவு உணர்வு உள்ள ஒருவரால் செய்யப்படும்போது அது மாறுபட்ட ஒரு தன்மையைப் பெறுகின்றது. துறவு உணர்வு என்பது துறவு கோலத்திலிருந்து தெளிவாக வேறுபட்டுள்ளது. அதைப் புரிந்துகொள்ளுவது மிகமிகக் கடினம்.

'நான்' என்ற உணர்வால் துறவு மேற்கொள்ளப்படுவதில்லை. 'நான்' என்ற உணர்வு எதைக் துறக்கின்றதோ, அது துறவு அன்று. வெப்பத்தின் உயர்வுகளையும் தாழ்வுகளையும் குறிப்பிடுகின்ற அளவுகளை அறிவதற்காக வெளியே நீங்கள் வைத்திருக்கின்ற காலநிலை அறியும் கருவியைப் போன்றது. அதில், பாதரசத்தின் அளவு ஒரே அளவுதான். இது ஒன்றில் மேலே சென்றால், அடுத்ததில் கீழே செல்கிறது. நீங்கள் ஒன்றைத் துறந்தால் வேறு ஏதோ ஒன்று உங்கள் உள்ளத்தில் வளர்கிறது, வளர்கிறது, வளர்ந்து கொண்டே இருக்கின்றது. அகந்தை, வீண் டம்பம், பயங்கரமான கற்பனைக்கும் எட்டாத வீண் டம்பம் வளர்ச்சி பெறுகிறது. ''நான்'' உண்மையில் உலகத்தைத் துறந்தால், நான் உலகத்தை மீண்டும் தொடமாட்டேன். 'எனது' என்ற எல்லா எண்ணங்களையும் நான் விட்டுவிட்டால், 'இது எனது அல்ல' என்று நான் சொல்லிக்கொண்டே போகவேண்டியதில்லை. நாம் துறந்த பொருள் பற்றி சொல்லிக்கொண்டே இருந்தால் அவர்கள் அதைத் துறக்கவில்லை என்று பொருளாகும். உண்மையில் நீங்கள் துறந்து விட்டால் அதைப்பற்றி ஏன் பேச வேண்டும்? நீங்கள் அதைச் சொன்னால் பொருள் மீதுள்ள ஆசை இன்னும் உங்களுக்கு இருக்கின்றது; இல்லை என்று நீங்கள் பாசாங்கு செய்தாலும் பகிரங்கமாகச் சொன்னாலும் ஏதோ ஒரு பற்றுதல் இன்னும் உள்ளது. மனப்பூர்வமாகத்

துறவு மேற்கொள்ளுபவர் பொருளை உதறித் தள்ளுவதில்லை. துறவை ஒரு சடங்காக அவர் கருதுகின்றார். தாம் துறந்து விட்டதாகக் கருதும் பொருளை அவர் கடுமையாகத் தவிர்க்கின்றார்.

குருதேவர் தம் துறவைப் பற்றிப் பெருமை பாராட்ட வில்லை. அதற்கு மாறாகச் சாதாரண சாதகர் ஒருவர் செய்த சிறிய துறவையும் எப்போதும் மிகவும் பெருமைப்படுத்து வார். பெரும் அளவு செல்வத்தையும், வளங்கொழிக்கும் தொழிலையும், அரச குடும்பத்தார்க்குரிய வசதிகளையும், மிகப் பெரிய பதவியையும் ஒரே இரவில் துறந்துவிட்டார். எனினும், மாதம் முப்பது ரூபாய் வருமானமுள்ள முக்கியத் துவமில்லாத அடிமை வேலையை ஒருவர் துறந்தாலும் அவருடைய துறவு ஆர்வத்தை அவர் எப்போதும் புகழ்ந்து வந்தார். குளிர் காலத்தில் சட்டை கூட அணியாத விரதமுள்ள சாதகர் தம்மைக் காட்டிலும் உயர்ந்தவர் என்று அவர் சுட்டிக் காட்டுவார்; ஆனால் தாம் சுவர்க்க ஆசிரமத்தில் வாழ்ந்த காலத்தில் இன்னும் தீவிரமான விரதங்களைப் பின்பற்றியதைப் பற்றியும், தம்மிடமிருந்த நல்ல கம்பளிப் போர்வைகளையெல்லாம் பக்தர்களுக்குக் கொடுத்துவிட்டுத் தாம் ஒரு சாக்குப் பையின்மீது படுத்து உறங்கியதைப்பற்றியும் அவர் கூறமாட்டார். தம்மைக் குறைத்துக் கூறும் நோக்கத்துடன் அவர் தம்மை ''மேற் சட்டைச் சுவாமி'' என்று குறிப்பிடுவார், என்றும் அவர் ஒரு மேற்சட்டையை இளச் சீடர் ஒருவருக்கு அன்பளிப் பாகத் தரும்போது, ''மேற் சட்டையை ஓர் உல்லன் போர்வை போல நீங்கள் ஏன் கற்பனை செய்து கொள்ளு கிறீர்கள்? போர்வைக்குள் ஒருவர் தம்மைச் சுருட்டிக் கொள்வது அழகன்று; மேலும் ஒருவர் சுறுசுறுப்பாகச் சேவை செய்வதற்கு அது தடையாக உள்ளது. நாம் அதே போர்வையை அங்குமிங்கும் நடமாடவும், திறமையாக நம் பணிகளைச் செய்யவும் ஏற்ற வகையில் வெட்டித் தைத்து அணிந்து கொண்டிருக்கின்றோம்'' என்று விளக்குவார்.

அஞ்சத்தக்க சந்நியாசி — அபிமானத்தை (ஆண்டியாக அல்லது துறவியாக இருப்பதன் அகந்தையை) வெற்றி கொள்ள இதுவே வழி. இது ஒரு கடுமையான பயிற்சி; குருதேவருடைய கருணையும் இறைவனுடைய நல்லாசிகளுமே ஒருவருக்கு ஆன்மீகப் பயிற்சி எப்போதும் முடிகின்றது; அகந்தை எப்போது தொடங்குகின்றது; அகந்தை இல்லை என்ற போர்வைக்குள் மறைந்துகொண்டு தாக்கும் படைகள் எப்போது முற்றுகை செய்கின்றன என்று அறியும்படியாக உதவுகின்றது.

தொடர்ந்து நிகழும் துறவு ஆர்வத்தின் தோற்றமாகவும் உருவமாகவும் குருதேவர் இருந்தார். இத்தகைய ஞானியுடன் வாழ்வது, அவருடைய நேர் முன்னிலையில் இருப்பது, ஒருவரைத் துறவு என்றால் என்ன என்று காணச் செய்கின்றது, பெரும்பாலும் கண்டு, புகழச் செய்கின்றது; அதனால் கிளர்ச்சி பெறுதல் அரிதாக நிகழ்கின்றது. 'கிளர்ச்சி' பெறுதல் என்பது சுவாசிப்பது. நீங்கள் உணர்வுடன், விழிப்புடன், பக்குவத்துடன் இருந்தால் அன்றி, கிளர்ச்சி பெறுதலால் அல்லது சுவாசிப்பதனால் உங்களுக்கு எந்தவிதமான பயனும் இல்லை.

குருதேவர் தவிர்க்க வேண்டிய முதற் பொருள் — தாம் பிராம்மணர் என்ற அகந்தை; அக்காலத்தில், தாம் பிறந்த சாதியைப் பற்றிய தற்பெருமையையும் அகந்தையையும் தவிர்ப்பது மிகவும் கடினமாக இருந்தது. குருதேவர் இளைஞராக இருந்தபோது மற்போரில் பயிற்சி பெற விரும்பித் தகுந்த வல்லவர் ஒருவரிடம் சென்றார்; அவர் பிறப்பினால் தீண்டத்தகாதவராக இருந்தார். குருதேவர் சைவ அந்தணர்களின் (சிவபெருமானை முழுமுதற் பரம் பொருளாக வழிபடும் இந்து சமுதாயத்தின் மிக உயர்ந்த சாதியார்) வைதீகக் குடும்பத்தைச் சேர்ந்தவர்; அவர் ஒரு பறையரை (தீண்டத்தகாதவர்) அணுகுவதொன்றே, குடும்பத்தில் இருந்த பெரியவர்களின் சினத்தை வருவிக்கக் கூடியதாகும். சில நாள் பாடங்கள் முடிந்தவுடனே

குருதேவர் தம் ஆசிரியருக்கு மலர் மாலை அணிவித்து விலையுயர்ந்த வெகுமதிகளைக் குரு தக்ஷிணையாக (ஆசிரியருக்குப் பணிவுடன் வழங்கும் காணிக்கை) வழங்கி தாழ்ந்த சாதியினராகிய அவரை அடி பணிந்து வணங்கினுர். இந்த உழவரிடம் அவருடைய காலடிகளில் வீழ்ந்து பணிந்து வணங்குவதின் பொருள், குருதேவரைப் பொறுத்த வரைக்கும், சமுதாயத்தின் மிகையான வற்புறுத்தலையும். கட்டுப்பாட்டையும் துறப்பதாகும். தியாகம் செய்யப்பட வேண்டிய முதற்பொருள் இதுவே — சாதியைப் பற்றிய, பரம்பரையைப் பற்றிய தற்பெருமை. இத்துடன் கூட குருதேவர், ஆசிரியருக்குச் சேவை செய்வதையும், வழிபாடு செய்வதையும் எவ்வளவு உயர்வாக மதித்தார் என்பதையும் இந்நிகழ்ச்சி காட்டுகின்றது.

குருதேவர் எல்லை மீறிய அன்புள்ளவராக இருந்தார்; மற்றவர்களால் எல்லை மீறிய அன்புடன் நேசிக்கப்படுபவராகவும் இருந்தார்; தம் இளமைக் காலத்தில் அவர் மிகுந்த பாசத்துடன் பழகினுர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. பிள்ளைப் பிராயத்தில் அவருடைய நண்பர்களாக இருந்த மூப்படைந்த சிலரை அவர் சந்திக்கும்போது சிலர் ஆசிரமத்திற்கு வந்தார்கள். அச்சந்திப்பைக் கவனித்தவர், குருதேவர் அவர்களிடம் எவ்வளவு அன்பு வைத்திருந்தார் என்பதை உணரமுடியும். ஏனெனில் ஏறத்தாழ அரை நூற்றுண்டு கழித்த பின்னரும் அவர்களைச் சந்தித்தபோது அவருடைய தொடர்பின் நெருக்கத்தை உணர முடிந்தது. குருதேவருக்கு 65 வயதானபோது அவருடைய பள்ளி ஆசிரியர் வந்தார். அவருடைய பிறந்த ஊரைச் சேர்ந்த 75 வயதுள்ள பழைய அஞ்சலதிகாரி வந்தார்; எவ்வளவோ பலரும் வந்தனர்; தாம் ஒரு துறவியாக ஆகிவிட்ட நிலையிலும், ஐம்பதாண்டுகள் கழிந்துவிட்ட நிலையிலும், குருதேவர் அவர்களுக்கு மிகுந்த பழக்கம் உள்ளவராகவும், மிகுந்த அன்புள்ளவராகவும், நெருங்கிய நட்புள்ளவராகவும் காணப்பட்டார். அவர் அவர்களுடன் உரையாடி நகையாடி மகிழ்ந்ததைப் பார்க்கும்போது அவர்

அவர்களுக்கு முன்னமே எவ்வளவு பாசத்துடன் பழகி யிருப்பார் என்பதை எளிதில் கண்டு கொள்ள முடிந்தது. அவர்களை எல்லாம் திடீரென்று விட்டுவிட்டு அவர் மலேயாவுக்குச் சென்றது மிகவும் அற்புதமான துறவு நிகழ்ச்சியாகும்.

மலேயாவிலும் அப்போதிருந்த டாக்டர் குப்புசாமி ஒரு நல்ல நண்பர் குழுவை உருவாக்கியிருந்தார். செல்வங் கொழிக்கும் தொழில் அவருக்கு ஆச்சரியமான புகழை ஈட்டித்தந்தது. அவர் அனைவரிடமும் சுமுகமாகப் பழகி அனைவரையும் நட்பாக்கிக் கொள்பவர். மலேயாவிலிருந்தும் அவருடைய நண்பர்கள் ஆசிரமத்திற்கு வந்தனர்; நானும் பிற்காலத்தில் மலேயாவுக்குச் சென்றபோது அவர்களில் சிலரைச் சந்தித்தேன்; அவர்கள் இன்றும் அங்கு இருக் கின்றனர். அவர்கள் அவரைப்பற்றித் தெளிவாக நினைவு கூறுகின்றனர். குருதேவருடைய நண்பர்களில் ஒருவருக்கு ஒரு பெண் குழந்தை 4 அல்லது 5 வயதில், குருதேவர் மலேயாவில் இருந்தபோது இருந்தாள்; அவள் குருதேவரை ஞாபகம் வைத்திருந்தாள். ஆதலால், குருதேவர் அங்கு இருந்தபோது தொழில் செய்யவும், சேவை செய்யவும், நட்புச் செய்யவும் நிறைய வாய்ப்புக்கள் இருந்தன. தம் இளமைக் காலத்தில் உயர்ந்த ஆடைகள் மீதும், அணிகலங் கள் மீதும் கூடப் பற்றுதல் அதிகமாக இருந்ததென்று குருதேவர் ஒருமுறை கூறியுள்ளார். அவர் மலேயாவில் மிகவும் சிறந்த வாழ்வு வாழ்ந்தார். அனைவருக்கும் மகிழ்ச்சி யூட்டும் இளைஞராக அவர் இருந்ததைப் பற்றி அவருடைய ப ழைய சமையற்காரர் எங்களுக்குக் கதைகதையாகச் செல்லுவார்.

குருதேவர் தம் இளமைக் காலத்திலேயே மருத்துவத் தொழில் செய்து வந்தார் என்பது உண்மை; இதனால் அவர் அக்காலத்தில் பெரும் உ த வி க ளை ப் பெற்று வந்தார். நோய்வாய்ப்பட்டோர் உடனும், இறந்து கொண்டிருப் போருடனும், இறந்துவிட்டவருடனும் பழகும் மக்கள்,

அவற்ருல் பாதிக்கப்படாதவர் ஆதலின் நிறைவு பெற்று விடுகின்றனர். அவர்கள் பாதிக்கப்படாதவராகின்றனர். அல்லது சுவாமி சிவானந்தரைப்போல ஆகிவிடுகின்றனர். ஒரு டாக்டர் என்ற முறையில் குறிப்பிட்ட ஒரு கால கட்டத்தில் அல்லது வேருெரு காலகட்டத்தில் இந்தக் கேள்வி எப்படியும் தோன்றி விடுகின்றது. "இவற்ருல் எல்லாம் என்ன பயன்? நான் இவற்றையெல்லாம் எதற் காகச் செய்கின்றேன்? நான் எதற்காகப் பொருள் ஈட்ட வேண்டும்? வாழ்க்கையை நன்கு அனுபவிப்பதற்காக நான் பொருள் ஈட்டுகின்றேன். இது என்ன அனுபவித்தல்?" ஒரு டாக்டர் ஒரு நோயளிக்குச் சிகிச்சை செய்தால், அவர் குணமாகி விட்டாலும்கூட, அவருக்கு மற்ருெரு நோய் வந்து விடுகின்றது. ஆக இந்த முன்னேற்றம் கேட்டிலிருந்து பெருங்கேட்டுக்குச் செல்வதாக இருக்கின்றது. ஒவ்வொரு வரும் இறந்தேயாகவேண்டும். எந்த டாக்டரும் இதைத் தடுக்க முடியாது,

பொருளற்ற இத்தகைய வாழ்க்கை துறக்கப்பட வேண்டும். குருதேவர் அங்கிருந்த பணிவிடையையும் வேலையையும் விரும்பினுர். அவர் மக்களிடமும் பாசம் வைத்திருந்தார். இவையெல்லாம் துறக்கப்பட்டது. அனைவரிடமும் சுமுகமாக பழகிக் கொண்டிருந்த இத்தகைய ஒருவர் திடீரென்று எல்லாவற்றையும் தவிர்த்துவிட்டுப் போவது, துறவின் மிகப் பெரிய நிலையாகும். மலேயாவில் அவர் தம் தொழிலைத் துறந்தமைக்குரிய காரணம், ஏமாற்றமோ அல்லது தோல்வியோ அல்லது வருத்தமோ அன்று. அவர் எல்லாவற்றிலும் வெற்றிமுகமாக இருந்தவர். மன ஆற்றல் பெறவோ, ஆன்மீக வளர்ச்சி அடையவோ, அல்லது ஒரு பெரிய துறவியாக ஆகவோ அவருக்கு எந்த விதமான ஆசையும் ஏற்படவில்லை. பெரும் புகழ் பெறவோ, பேரும் சீரும் அடையவோ அல்லது ஒரு பெரும் சீடர் கூட்டத்தை உருவாக்கவோகூட ஆசை ஏற்பட்டதில்லை; மலேயாவிலிருந்து அவரை இவற்றுள் எதுவும் இழுத்துவர வில்லை. அது தாஞக சரணுகதி அடையும் மிக உயர்ந்த

செயலாகும். புத்தரைப்போல, அவர் தம்மைச் சுற்றிலும் என்ன நடைபெறுகின்றது என்பதை — வாழ்க்கையைப் பற்றிய உண்மையைக் கண்டறிய முடிந்தது. மெய்யுணர்வின் பொருட்டுத் துறவு தற்செயலாக நிகழ்ந்தது. துறவு பற்றிய இந்த ஆர்வம் குருதேவருடன் வாழ்வின் முழுவதும் நீடித்து, உடன் இருந்து வந்தது.

குருதேவரின் வாழ்க்கை வரலாற்றை எழுதியவர்களில் ஒருவராகிய ஸ்ரீ இந்திரஜித் சர்மா அவர்கள் எழுப்பிய ஒரு வினாவுக்கு விடைதரும்போது, குருதேவர், ''நான் இந்தியாவுக்குத் திரும்பி வரும்போது என்னை அரித்துக்கொண்டிருந்த எண்ணம், ''நான் இப்போதே இறைவனைப்பற்றிய மெய்யுணர்வு பெறவேண்டும்'' என்பதேயாகும் என்று கூறினார். ''நான் ஒரு ஆசிரமத்தை நிறுவவேண்டும் என்றோ, ஒரு சங்கத்தைத் தோற்றுவிக்கவேண்டும் என்றோ ஒருபோதும் விரும்பியதில்லை. 'நான்' என்ற உணர்வை முற்றிலும் அழித்து, ஒரு மரத்தின் அடியில் அமர்ந்து இறைவனுடைய புகழ்களைப்பாடவும், ஜெபம் செய்யவும் நான் விரும்பினேன்'' என்று மேலும் அவர் தெரிவித்தார்.

அந்தக் கணத்தில் குருதேவர் அது வரைக்கும் தம் வாழ்வை ஊக்கிவந்த இலட்சியங்கள், ஆசைகள், குறிக்கோள்கள் ஆகிய எல்லாவற்றையும் இறைவனுடைய கமல பாதங்களில் சரண் செய்து விட்டார். இறைவனைப் பற்றிய மெய்யுணர்வை அடையவேண்டும் என்ற வேட்கைத் தீயில் மனித இச்சை தானாகவே எரிந்து போகின்றது. சரணாகதி என்ற பெருநெருப்பில், நோயாளிகட்கும், துன்புற்றோர்க்கும் செய்யும் தன்னலமற்ற சேவைகூடத் தற்காலிகமாகச் செய்யப்பட்டதாகின்றது. அனைத்தும் இறைவனுடைய விருப்பத்துக்கு விடப்பட்டுவிட்டன. தம்மையே இவ்வேள்வித் தீயில் ஆகூதியாக வழங்கியவர், இறைவனாகவே வெளிப்படுகின்றார். இறைவனைப்பற்றி மெய் உணர்வு என்ற தொடரின் உண்மையான பொருள் இதுவே அப்போதிருந்து இறைவன் ஒருவரே உண்மைப்பொருள்

ஆனுர். இறைவனுடைய மன உணர்வு, குருதேவரின் மன உணர்வு, ஆயிற்று. இறைவனுடைய விருப்பமே அவருடைய விருப்பமாயிற்று. அவருடைய வாழ்க்கை தெய்வீக வாழ்க்கை ஆயிற்று.

குருதேவர் தம்முடைய தொழில் வாடிக்கையையும், தொழிலேயும் செல்வத்தையும் துறந்துவிட்டார். அவர் தம்முடைய ஊருக்குத் திரும்பிவந்தார். ரயில் நிலேயத்தில் இறங்கினுர்; ஒரு மாட்டுவண்டியை வாடகைக்கு அமர்த்திக் கொண்டார். அவரிடம் சுமை மிகுந்த மூட்டைகள் பல இருந்தன, அவருடைய சொந்தச் சாமான்களாகிய (அவர் இந்தியாவுக்குக் கொண்டுவந்த மலேயச் செல்வத்தின் ஒரு சிறிய பகுதி) பெருஞ்சுமையைச் சுமந்துகொண்டு மாட்டு வண்டி வந்தது. தென்னிந்தியாவில் இருந்த அவருடைய முன்ஞேருடைய பழைய வீட்டின் முன்னுல் அந்த வண்டி நின்றது. மூட்டைகளே எல்லாம் அவிழ்க்குமாறு தம் உறவினர்களிடம் விட்டுவிட்டு அவற்றைச் சரிபார்ப்பது போலப் பாசாங்கு செய்தார். இடையே அவர் ஒரு சிறிய துணிப்பையைத் தம் பக்கத்தில் வைத்துக்கொண்டார்; அதில் சில மாற்றுடைகளேயும் சில ரூபாய்களேயும் திணித்து வைத்திருந்தார். யாரும் கவனிக்காதபோது அவர் அமைதியாக அந்த இடத்தைவிட்டு நழுவி, ரயில் நிலேயத்திற்குத் திரும்பி நடந்தார். அவர் கோயிலுக்கோ அல்லது பக்கத்து வீட்டாரைப் பார்க்கவோ சென்றிருக்கக் கூடும் என்று அவர்கள் நினேத்தபடியால் அவர்கள் எதையும் கவனிக்கவில்லே. அவர் ஒரு ரயிலேப்பிடித்து ஊரைவிட்டுப் புறப்பட்டார். தமக்குச் சுமையாக இருந்த எதையும் அவர் விட்டுவிட்டார்; துறந்துவிட்டார். இத்தொடரின் பொருளேப் புரிந்துகொள்வது மிகமிக முக்கியம். தம்மைச் சுமையாக அழுத்திய எதையும் அவர் துறந்தார். நான் ஒரு டாக்டர்; புகழ்மிக்க டாக்டர்; பெரும் செல்வந்தர்; ''நான் இது நான் அது'' என்ற அனேத்துமே துறக்கப்பட வேண்டியிருந்தன.

அவர் ரயிலில் காசிக்குச் சென்ருர். இமயமலைக்குக் காசி மிகவும் அருகில் இருப்பதாக அவர் எப்படியோ நினைத்தார். தவம் செய்யவும் தியானம் செய்யவும் அவர் இமயமலைக்குச் செல்ல விரும்பினுர். தம்மிடம் எஞ்சியிருந்த சிறு தொகையையும் அவர் தானம் செய்துவிட்டார். அப்போது மிகவும் கடுமையான குளிர் இருந்தது. அத்தகைய குளிர் அவருக்குப் பழக்கம் இல்லை. தென்னிந்தியாவிலும், மலேயாவிலும் நிலவிய வெப்பமான பருவமே அவருக்குப் பழக்கம். வட இந்தியக் குளிர் எப்படி இருக்கும் என்பதைப்பற்றி அவருக்கு எதுவும் தெரியாது. அவரிடம் ஒரு போர்வை மட்டும் இருந்தது. அது முற்றிலும் போதுமானது அன்று. 1950-ல் அவர் மேற்கொண்ட புகழ் மிக்க அகில இந்தியப் பயணத்தின்போது குருதேவரே, மலேயாவில் இருந்த ரயில் நிலையத் தாழ்வாரத்தைச் சேர்ந்த அறைக்குப் பதிலாக வசதியான வீட்டுக்குத் தம் குடி இருப்பை மாற்றிக் கொண்டதைப்பற்றித் தெரிவித்தார். அவர் இப்போது உலகத்தையும் தம் சொத்துக்களையும் துறந்துவிட்டார். அவரிடம் தற்போது ஒன்றும் இல்லை. ரயில் நிலையத் தாழ்வாரத்தின் அடியில் உடம்பைக் கூனிக் குறுக்கிக் கொண்டு நடுங்கிக்கொண்டு இருந்தார். ஆனுல் அவருடைய உள்ளம் மண்ணுலக நிலைக்குமேல் உயர்ந்து சென்று கொண்டிருந்தது; குளிரைப் பொருட்படுத்தாதவாறும்; பசியைத் தவிர்த்திருக்குமாறும் அவருடைய உன்னத உடம்புக்கு உதவிக் கொண்டிருந்தது. தவத்தின் முதற்படி நிலை தொடங்கிவிட்டது. ஆனுல் குருதேவருக்கு உடம்பைப் பற்றிக் கவலைப்படுவதைக் காட்டிலும், இலட்சியத்தை அடைவது மிகவும் முக்கியம் வாய்ந்ததாக இருந்தது.

குருதேவருக்கு உள்ளூர் மக்களின் மொழி தெரியாது. அவருக்கு ஆங்கிலமும், தமிழும் மட்டுமே தெரியும். குளிரால் நடுங்கிக்கொண்டே ஆனுல் அதைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல், யாரிடமும் ஒரு போர்வை வேண்டும் என்று கேளாத இந்த அற்புதமான மனிதரை ஒரு 'நல்ல சமாரியன்' பார்த்து, ''இதோ! இந்தப் போர்வையால் தங்களைப்

போர்த்திக்கொள்ளுங்கள்; இல்லையென்றால் நிமோனியா காய்ச்சல் ஏற்பட்டு இறந்துவிடுவீர்கள்'' என்று கூறினார். குருதேவர் பெற்றுக்கொண்ட முதல் தருமம் ஒரு போர்வை. எல்லோருக்கும் ஏராளமாக வாரி வழங்கிய கை முதல் முறையாகப் பிக்ஷை ஏற்றுக்கொண்டது. தவத்தின் பெருமையைப் புரிந்து கொள்வதற்கு இத்தகைய அனுபவம் ஏற்பட்டாக வேண்டும். ''எனக்கு அது வேண்டாம்; நான் ஒரு துறவி'' என்று சொல்வது எளிது. துறவி என்ற பெயரில் விளங்கும் ஒரு கண்ணிதான் அது. அத்தகைய கெடுபிடியை அவர் சற்றே ஒதுக்கி வைத்துவிட்டு அந்தப் போர்வையைப் பெற்றுக்கொண்டார்.

அடுத்த சிக்கல் அதன் பிறகு வந்தது. கண்ணியம் மிகுந்த குடும்பத்தில் உதித்த ஒரு செல்வந்தர் அவர். உணவுக்காகப் பிக்ஷை பெற என்ன செய்ய வேண்டும் என்று அவருக்குத் தெரியாது; யாரும் அவரிடம் வரவுமில்லை; உணவை வழங்கவுமில்லை. அவர் தோற்றத்தில் திடகாத்திரமிக்க உடல் நலம் சிறந்த ஓர் இளைஞர்; அவருக்கு ஏன் யாரேனும் உணவு படைக்க வேண்டும்? எனவே சில நாட்கள் வரையில் அவர் துன்புற்றார். ஆதலால் அவர், தாம் தங்கியிருக்க விரும்பிய இடம் இதுவன்று என்று முடிவு செய்தார்; பக்தர்கள், யோகியர் முதலியோர் தங்கி இருந்த புகழ்மிக்க தலமாகிய பண்டரிபுரத்திற்குச் செல்லுமாறு யாரோ ஒருவர் ரயில் டிக்கட் எடுத்துத் தந்து வழிப்படுத்தி அனுப்பினார். தமக்கு அன்னியமாக இருந்த இந்த இடத்தில் அன்னியருக்கு நடுவே அவர் இங்கும் அங்கும் திரிந்தார்; படித்த, திடகாத்திரம்மிகுந்த இந்த இளைஞரின் பேச்சையோ போக்கையோ அங்கிருந்த யாரும் புரிந்து கொள்ள முடியவில்லை. பசி வருத்தியபோது சில நாட்கள் வரையில் அவர் வீட்டுக்கு வீடு சென்று பிக்ஷை எடுத்தார். ஆனால் இதை எப்படிச் செய்வது? எப்படி பிக்ஷை எடுப்பது? அவர் தாமாக ஒரு வாய்பாட்டை ஏற்படுத்திக் கொண்டார். அவர் யாராவது ஒருவரின் வீட்டின் முன்பு நிற்பார், ''நான் சென்னையில் இருந்து வந்துள்ள ஓர் அந்தணன்; எனக்குப்

பசியாக இருக்கிறது; தயவு செய்து எனக்குச் சிறிது உணவு தாருங்கள்'' என்று கேட்பார். அவர் ஒரு போதும் அதிகாரம் செய்ததில்லை; முணுமுணுத்ததும் இல்லை. தரப்பட்டதைப் பணிவுடன் ஏற்று, தந்தவரை மனத்தால் வாழ்த்தி அப்பால் சென்றுவிடுவார். இத்தகைய தவத்தைப் புரிந்து கொள்வதற்கு அறிவுள்ள இதயம் வேண்டும்.

அவருக்கு ஏற்பட்ட உண்மையான வருத்தம், ஒன்றும் இல்லை என்று சொல்லி மறுப்பதைப் பற்றியது அன்று; ஆனால் உரியவர் ஒருவருடைய இல்லத்தின் முன்னால் நின்று அவர் தம் உணவை இரக்கும்படியாகச் செய்வதைப் பற்றியது ஆகும். அவர் இதைப் பற்றி எங்களிடம் அடிக்கடி கூறுவது வழக்கம். ''உங்களுக்குத் தகுதியில்லாதபோது யாரேனும் ஒருவரிடத்திலிருந்து தர்மத்தை ஏற்றுக் கொள்வது எப்படி?'' என்று வினவுவார்; துறவியாக இருப்பவர் தம் உணவின் பொருட்டு பிக்ஷை ஏற்கலாம் என்பது சாஸ்திர சம்மதமாக இருப்பினும், குருதேவருடைய இயல்புக்குப் பிக்ஷை ஏற்பது அன்னியமாக இருந்தது. தாமும் பதிலுக்கு ஏதும் தராமல் பிக்ஷை ஏற்பது அவருக்குச் சிறிதும் அமைதியைத் தரவில்லை அல்லது அவருக்கும் பொருத்தமாகத் தோன்றவில்லை. எனவே அவர் துறக்க வேண்டிய அடுத்த கருத்தாக இருந்தது. ''நான் பிக்ஷை ஏற்கும் ஆண்டியாக இருக்கப்போகிறேன்'' என்பதாம். அந்த எண்ணமும் தவிர்க்கப்பட வேண்டியதே. பிக்ஷைக்‍காக அலைந்து திரியும் ஆண்டி வாழ்க்கை ஒரு தடையாக ஆகிவிட்டபோது அவர் அதைத் துறந்துவிட்டார். பிற்காலத்தில் அவர் அதைப் பற்றி வேடிக்கையாக பேசுவது வழக்கம். ஆசிரம கட்டுப்பாடுகளுக்கு எதிராக அவருடைய சீடர்களில் யாரேனும் ஒருவர் கிளம்பி, ''நான் இவ்விடத்தை விட்டுச் சென்று அலைந்து திரியப்போகின்றேன்'' என்று கூறும்போது, குருதேவர், ''இங்குள்ள இருவர் அல்லது மூவர் உங்களுக்கு ஆணையிடும்போது, அவர்களுக்குக் கீழ்ப்படிய நீங்கள் விரும்பாமல், ஆசிரமத்தை விட்டே ஓடி விட நினைக்கிறீர்கள். இதுவே சுதந்திரம் என்று நீங்கள் கருது

கின்றீர்கள். இது சுதந்திரம் அல்ல என்பதை நீங்கள் விரைவில் கண்டு கொள்வீர்கள். ஏனெனில் காலையிலிருந்து இரவு வரை, அடுத்த வேளை உணவை யார் தருவார்கள் என்பதைப் பற்றியே நீங்கள் தியானம் செய்து கொண்டிருப்பீர்கள். அந்த வாழ்வு தொல்லைக்குரியது; ஒரு தடையாகவும் இருப்பது'' என்று கூறுவார். ஆதலால் குருதேவர் அலைந்து திரியும் வாழ்வைத் துறந்தார்.

''அங்கும் இங்கும் சுற்றித்திரிவதற்குப் பதிலாக நான் சென்று ஒரு பணியில் அமரலாம்'' என்று குருதேவர் கருதினார். மலேயாவில் துறக்கப்பட்ட ஒன்றை இங்கு மீண்டும் மேற்கொள்ள வேண்டியதாயிற்று. துறவு ஆர்வம் இன்னும் இருக்கின்றது; ஆனால் அது கெடுபிடியாக இல்லை. உயிர்ப்புடன் இருக்கின்றது. மூண்டெரியும் நெருப்பைப் போல அது வளர்ந்துகொண்டே இருக்கின்றது. எந்தப் பொருளை நீங்கள் அதில் இட்டாலும் எரித்து விடுகின்றது. ''அந்தப் பணி தன் பரிவாரங்களுடன் சேர்ந்து என்னைக் கீழே அழுத்திக் கொண்டிருந்தமையால் நான் அதைத் துறந்து விட்டேன். பிக்ஷை ஏற்பது என்பதன் பொருள் நான் சமூகத்தின்மீது ஒட்டுண்ணியாக இருக்கின்றேன் என்பதாகும். எனவே இதுவும் துறக்கப்பட வேண்டும். மிகவும் மெய்வருத்தமில்லாத ஒரு பணியை நான் ஒப்புக் கொள்ள வேண்டும்''. ஆதலால் அவர் ஒரு அஞ்சலக அதிகாரியின் குடும்ப வேலைக்காரராக அவர் ஒரு பணியை ஒப்புக்கொண்டார். துறவு பற்றிய சாத்திரத்திற்கு ஓர் அழகான புதிய அணுகு முறையை நீங்கள் இங்கே காணுகின்றீர்கள். துறக்கப்படுவது எது? உணவன்று; உடையன்று; தங்கும் இடமன்று; மருத்துவச் சிகிச்சையன்று; படிப்பன்று; சேவையன்று. உங்களை உலக வாழ்வுடன் கட்டிப் பிணைத்து உங்களைக் கீழே இழுத்துக் கொண்டு போவது எதுவாயினும் சரி, அதைத் துறக்க வேண்டும். அஞ்சலக அதிகாரிக்குச் செய்யும் நேர் பணிவிடைகளாகக் குருதேவர் தண்ணீர் இறைக்க வேண்டும்; விறகு வெட்ட வேண்டும். இதற்காக அவருக்குச்

சிறிது தொகை தரப்பட்டது. வாழ்க்கை நடத்துவதற்கு அது போதுமானதாக இருந்தது.

இப்பணியில் களைப்பைத் தரக்கூடிய பொறுப்புக்கள் இருக்கவில்லை. தம் குடும்ப வேலைக்காரருடைய பெருமையை அஞ்சலக அதிகாரி எப்படியோ உணர்ந்து கொண்டார். குருதேவர் ஒரு பிச்சைக்காரரல்ல; ஒரு டாக்டர் என்ற செய்திகளை அவர் கண்டு கொண்டார். அவருக்குச் சிறிது குழப்பம் உண்டாயிற்று. அவர் ரிஷிகேசத்தின் அமைப்பைப் பற்றி விளக்கிக் குருதேவரை அங்கே செல்லுமாறு அனுப்பினார். ''நீங்கள் எளிய உணவும், உடையும், இருப்பிடமும் மட்டுமே, உங்களைத் தொல்லைப் படுத்திக் கொள்ளாமல், அடைய விரும்புகின்றீர்கள். குடும்ப வேலைக்காரராக இராமலே, ரிஷிகேசத்தில் நீங்கள் வேண்டும் என்று விரும்புகின்ற இவை எல்லாவற்றையும் பெறுவீர்கள்'' எனவே அடுத்த வேலை அங்கே செல்வதாக இருந்தது.

ரிஷிகேசத்தில் உள்ள ஓர் ஆசிரமத்தில் குருதேவர் சேர்ந்தார்; அந்த ஆசிரமத்தின் நோக்கம் துறவிகளுக்கு இலவச உணவும், உடையும், இருப்பிடமும் வழங்கு வதாகும். எனினும் அங்கும், அந்த நிறுவனத்தின் நன்மைக் காக அவர் தம்மால் முடிந்தவற்றை, முடிந்த வழிகளில் செய்து வந்தார். உலகைத் துறப்பது என்றால் சேவையையும் துறப்பது என்று பொருளாகாது. அவர் ஒரு டாக்டராக இருந்தமையால் அவருடைய மருத்துவத் திறமைகளைப் பயன்படுத்திக்கொள்வது தெய்வீக விருப்பமாக இருந்தது. நோயால் வருந்துபவர்க்குச் சிகிச்சையும், குணமும், ஆறுதலும், மீண்டும் வழங்குமாறு இறைவனுடைய குணப்படுத்தும் கருணை குருதேவரின் கரங்களில் பாய்ந்து அவற்றைத் தன் கருவிகளாக ஆக்கிக்கொண்டது.

குருதேவர், சுவர்க்காசிரமம் தங்குவதற்கு வசதியாக இருப்பதை கண்டு அங்கேயே நிலையாகத் தங்கினார்.

அங்கேயே அவர் எளிதாக நீடித்து வாழ்ந்திருக்கலாம். அந்த இடம் மிகவும் வசதியாக இருந்தது; அவருக்கு எந்தச் சிக்கலும் சிறிதும் இருக்கவில்லை, அதனை ஓர் இலட்சியத் தலம் என்று அவர் அடிக்கடி கூறியுள்ளார். அங்கு வாழ்ந்த துறவிகள் தங்களுக்கென்று எந்த ஒரு பொருளையும் வைத்திருக்க வேண்டியதில்லை, எதையும் சொந்தமாகவும் வைத்திருக்க வேண்டியதில்லை; எந்த ஒரு வேலையையும் சிறிதும் செய்யவேண்டியதும் இல்லை. மருத்துவ வசதிகளும் அங்கு கிடைத்து வந்தன. அங்கு தனித்திருக்கவும் வசதிகள் உண்டு; இது சம முக்கியத்துவம் வாய்ந்தது. ''நான் எங்கிருந்தாலும் சிறிது நேரத்திற்காவது, கூட்டத்தினின்றும் விலகித் தனித்திருக்கும் வசதி எனக்கு அவசியம் வேண்டும்'' என்று குருதேவர் கூறுவது வழக்கம். கடைசியாக, அங்கு ஒரு நூலகம் மிகவும் பக்கத்திலேயே இருந்தது; எனவே உள்ளமும் அறிவும் பசித்திருக்க வேண்டியதில்லை. ஒரு நல்ல இலட்சியத் தலத்தில் இவையாவும் இருக்க வேண்டும் என்று அவர் கூறுவார். இவையாவும் சுவர்க்க ஆசிரமத்தில் இருக்கின்றன என்று கண்டறிந்து அவர் தம்முடைய தவங்களை எல்லாம் பயிற்சி செய்வதற்காக அங்கு நிலையாகத் தங்கினார். வடமொழியில் 'சுவர்க்கம்' என்ற சொல், பேரின்ப விண்ணுலகைக் குறிக்கும்; சுவாமி சிவானந்தரைப் பொறுத்தவரையில் அந்த இடம் பேரின்ப விண்ணுலகாகவே இருந்தது, அவருக்கு எவ்வகைப் பொறுப்புக்களும் இருக்கவில்லை; அவரைக் கீழே அழுத்தக் கூடியதும் எதுவும் அங்கே சிறிதளவும் இருக்கவில்லை.

இக்காலத்தில், குருதேவர் தவத்துக்குரிய பொதுவான வகைகள் யாவற்றையும் நிறைவேற்றினார். கங்கையின் பனி உறைந்த நீரில் நின்று இறைவனுடைய திருநாமங்களை உச்சரித்தல்; வெறுந்தரையில் படுத்துறங்கள், வார இறுதியில் உண்ணா நோன்பிருத்தல் முதலியன இவற்றுள் அடங்கும். எனினும் பிற்காலத்தில் இத்தகைய பயிற்சிகள் ஆன்மீக வளர்ச்சிக்குப் பெரும் அளவில் பயன்படும் மதிப்புடையன அல்ல என்று அவர் குறை கூறியுள்ளார்.

அவருக்குத் தேவையான பொருள்களைத் தந்து உதவக் கூடிய பக்தர்களும், புகழ்வோரும் ஆகிய சிலர் அவர் பால் கவர்ந்து இழுக்கப்பட்டார்கள்; இதை நீங்கள் இறைவனுடைய விருப்பம் என்றோ அல்லது கன்மத்தின் பயன் என்றோ அல்லது இறைவனுடைய கருணை என்றோ கூறலாம். அவருடைய சீடர்களாகச் சில இளைஞரும் கூட வந்து சேர்ந்தனர். இவர்கள் அவருடைய தேவைகளை நிறைவேற்றக் கூடியவர்கள். சுவர்க்க ஆசிரமத்தின் விதிகள், அங்கு வாழும் மூத்த துறவிகள் ஒவ்வொருவருக்கும் அவ்வவர் தேவைகளைக் கவனிப்பதற்காக இரண்டு சீடர்களை அமர்த்திக்கொள்ள அனுமதி தந்தன. ஆசிரமம் அவர்களைப் பேணிப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருந்தது, எனவே அவர்கள் கவலையில்லாமல் தங்கள் குருவுக்குச் சேவை செய்து வந்தனர். குருதேவருக்கு இரண்டு சீடர்கள் இருந்தனர்; அதுவரைக்கும் சிக்கல் இருக்கவில்லை; ஆனால் விரைவில், இருவர், நால்வராயினர்; நால்வர் எண்மராயினர். அந்த நிறுவனத்தில் இது ஒரு சிக்கலை உண்டாக்கிற்று.

குருதேவர் தாமாக இதைப்பற்றிக் குறிப்பிடவில்லை என்றாலும், ஏதோ தொல்லை ஏற்பட்டது. ஒரு முறை குருதேவர் வெளியூருக்குச் சென்றிருந்தபோது. சீடர்கள் அவருக்கு, ''தொல்லை ஏற்பட்டுள்ளது அருள் கூர்ந்து திரும்பிவாருங்கள்'' என்று அவசரமாக எழுதினார்கள். குருதேவர் தந்திவடிவில் ஒரு கடிதம் எழுதி அனுப்பினார். ''தீமையிலிருந்து நன்மை தோன்றுகின்றது, சகித்துக் கொள்ளுங்கள். அமைதியாக இருங்கள்''. குருதேவர் திரும்பிவந்தவுடன், வாதாடாமல், எதிர்க்காமல், தம் செயல்கள் சரி என்று பேசாமல், கண்டனம் தெரிவிக்காமல், நிறுவனத் தலைவரிடம் சென்று கைகூப்பி வணங்கி. ''ஆற்றின் மறுகரைக்கு நான் செல்லுகின்றேன்'' என்று அமைதியாகக் கூறினார். அது அழகாக இருந்தது. சுவர்க்க ஆசிரமத்தில் சுதந்திரம் இருந்தது, ஆனால் அளவான சுதந்திரம்; வரையறை செய்யப்பட்ட சுதந்திரம்

(வரையறைக்கு உட்பட்டதாக இருப்பின் அது சுதந்திரம் ஆகாது) என்வே அவர் அதையும் துறக்கவேண்டி நேர்ந்தது. அதிருப்தியின் அடையாளம் ஒரு சிறிதுகூடக் குருதேவரின் உள்ளத்தில் ஒரு கணமும் நிலவவில்லை. இதன் விளைவாக அவர் தம் சொந்த ஆசிரமத்தை நிறுவிக்கொண்ட பின்னும், சுவர்க்க ஆசிரமத்துடன் மிக உயர்ந்த நட்புறவுத் தொடர்பைக் கொண்டிருந்தார்.

1948-ல் குருதேவரும் நாங்களும் அவருடைய பழைய ஆசிரமத்திற்குச் சென்றோம். குருதேவர் தற்போது எண்ணற்ற சீடர்களைக்கொண்ட உலகப் புகழ்பெற்ற துறவியாகவும், தமக்கென ஓர் ஆசிரமத்தை நிறுவிக் கொண்டவராகவும் விளங்குகின்றார். அந்த ஆசிரமம் வளர்ச்சி பெற்று வளம் செறிந்து காணப்படுகின்றது. சுவர்க்க ஆசிரம நிர்வாகிகள் அவருக்கு நல்வாழ்த்துக்களைத் தெரிவித்து நல்வரவு கூறினர். நாங்கள் அங்கு இரண்டுமணி நேரம் தங்கியிருந்தோம். அவர் அங்கு இருந்ததை நீங்கள் பார்த்திருக்க வேண்டும். அவர் பல்வேறு கருத்துரைகளை அவர்களுக்கு வழங்கினார். அவர்களுக்குப் பல்வேறு வழிகளிலும் உதவி செய்யுமாறு எங்களைக் கேட்டுக் கொண்டார். அது மிகவும் அற்புதச் செயலாக இருந்தது.

குருதேவர் ஆற்றின் மறுகரைக்குச் சென்று தங்கினார்; மீண்டும் அங்கு சிறிது பிக்ஷை ஏற்றல் நடைபெற்றது. ஆனால் முன்புபோல் அவ்வளவு கஷ்டமாக இருக்கவில்லை, ஓரளவு சுதந்திரம் இருந்தது; ஓரளவு வசதியான அறை இருந்தது. ஆனால் அப்போது அவருடன் இருந்த நான்கைந்து பேர்களும் சிறிதளவு உணவைப் பெறுவதற்காக மூன்று, நான்கு மைல்கள் நாள்தோறும் இருமுறை நடக்க வேண்டியிருந்தது. இந்த நிலைமையில் குருதேவர், தமக்கென்று சொந்தமாக ஓர் அறை இருந்தால் தாம் சிறிது நிலையான பணியைச் செய்யலாம் என்று கருதினார். புறக்கணிக்கப்பட்ட ஓர் மாட்டு கொட்டில் இருந்தது; அவ்வறையைத் துப்புறவு செய்து அதில் போய்த் தங்கலாயினர்.

யாரும் ஆட்சேபிக்கவில்லையாதலால் அவர்கள் அது யாருக்குச் சொந்தம் என்பது பற்றி விசாரிக்கவில்லை. அது பயன்படுத்தப்படாமல் துறக்கப்பட்டது; எனவே தவறான பயன்பாட்டுக்கு ஆளாகியது. ஆதலால் அதைத் துப்புரவாக்கி அங்கு அமர்ந்து ஏதேனும் பணி செய்வது நல்லது ஆயிற்று. அவர்களுக்குத் தளர்ந்த ஒரு தட்டச்சுப்பொறி கிடைத்தது; பணியும் தொடங்கப்பட்டது.

இப்போது மீண்டும் இது உங்களுக்குத் திகைப்பையூட்டும். யாராவது ஒருவர் விடுமுறைக்காக அல்லது யாத்திரைக்காக வெளியில் சென்றிருக்கும்போது நான் சென்று அவருடைய அறையில் புகுந்துகொள்ளலாமா? ஆனால் அவர்களுடைய கண்ணோட்டத்தில் பார்க்கும்போது அது துறவு ஆர்வத்தின் தூய்மையான தோற்றமாகும். ''நாங்கள் இந்த இடத்தைச் சொந்தம் ஆக்கிக்கொள்ளவில்லை; நாங்கள் பயன்படுத்தல் மட்டுமே செய்கின்றோம். சொந்தக்காரர் வந்து உரிமைபாராட்டும்போது, நாங்கள் அவரிடம் ஒப்படைத்து விட்டு வெளியேறிவிடுவோம்.'' அதுவே சரியான பாவனை. அவர்கள் போராட்டம் நடத்தித் தங்கப்போவதில்லை. தங்களுக்கே அது சொந்தம் என்று அவர்கள் உரிமை கொண்டாடப்போவதும் இல்லை. நாம் இந்த உடம்பைப் பயன்படுத்துவதுபோல அவர்களும் அதைப் பயன்படுத்தல் மட்டுமே செய்கின்றனர்.

புதிய இடத்திற்குத் தங்கள் குடியிருப்பை மாற்றிக் கொண்டவுடனே, குருதேவரும் அவருடைய முதற் சீடர்களும் தங்கள் இயக்கத்தை ஏற்கனவே தொடங்கியிருந்தனர். அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டுத் தம் பணிகளைத் தொடங்கினர். இன்று ஆசிரமத்தில் நமக்கு முதல் தரமான அச்சகம் இருக்கிறது. அழகான நூல்கள் உள்ளன; பதிவு நாடாக்களும் உள்ளன. ஆனால் இவையெல்லாம் எந்தச் சூழ்நிலையில் தொடங்கின என்று அறிந்தால் நீங்கள் நிலைகுலைந்து போவீர்கள். இந்த நிலையில் தாள்கள் வாங்கப் பணமில்லை. அவர் என்ன செய்தார்? அவர் மக்கள் தமக்கு எழுதிய கடிதங்கள் அடங்கிய உறைகளை வெட்டி மடிப்புகளை

நீக்குவார். அவற்றை நேராக வெட்டி எடுப்பார். எழுதப் படாத உள்ளிடங்கள் உள்ள பக்கங்களை எழுதும் தாளாகப் பயன்படுத்தித் தம் சிந்தனைகளை எழுதிப் பதிவு செய்வார். இரவு நேரங்களில் அவர்கள் பணி செய்யலாம். ஆனால் விளக்கொளிக்கு என்ன செய்வது? 1952-53 ஆம் ஆண்டுகள் வரையில் அங்கு மின்வசதி இருக்கவில்லை. ஒரு நல்ல விளக்கை வாங்குவதற்குக்கூடப் போதிய அளவு பணம் இருக்கவில்லை. எனவே அவர்கள் பழைய காலத்து வகையைச் சேர்ந்த கார்க் மூடிகளுடன் கூடிய பாட்டில்களை எடுத்துக் கார்க் நடுவில் துளையிட்டுக் கந்தைகளால் திரியமைத்து உள்ளே செலுத்திப் பாட்டில்களில் மண் ணெண்ணெயை நிரப்பினர். இதுவே விளக்காக அமைந்தது.

இப்பெருந்தகையாளர் தம் முதல் நூல் வெளியிட்டனர். அதை எப்படிக் கண்டுகொண்டார்? அவருக்கு யாரையும் அறிமுகம்இல்லை. குருதேவர் வழக்கமாகச் சில குறிப்புக் களையும், சில போதனைகளையும் துண்டுக் காகிதங்களில் எழுதுவார்; ஒன்று சேர்ப்பார்; அவற்றை யாருக்கு அனுப்பு வார்? ஏதேனும் ஓர் ஊரின் அஞ்சலக அதிகாரிக்கு அனுப்பு வார். ஒவ்வோர் இடத்திற்கும் ஓர் அஞ்சலக அதிகாரி, அந்த இடம் எவ்வளவு சிறிய ஊராக இருப்பினும், இருக் கின்றார். அவர் உறையின் மீது முகவரியை எழுதுவார். சான்றாக, "அஞ்சலக அதிகாரி, சென்னை". அத்துடன் ஓர் உட்கடிதம் வைத்திருப்பார். அதில் "எனக்கு நேற்று உதித்த சிந்தனைகள் இவை. அவை, படிப்போருக்கு நல்ல உணர்ச்சிகளை ஊட்டும் என்று கருதுகின்றேன். எனவே ஒரு சிறிய அறிக்கையை அச்சிடுங்கள். நீங்களே அவற்றை வினியோகம் செய்யலாம். எவ்வளவு பிரதிகள் வேண்டுமானா லும் அச்சிடுங்கள்; ஆனால் அருள்கூர்ந்து எனக்கு நூறு பிரதிகள் அனுப்புங்கள்." என்று எழுதுவார். இதைப் பெற்றவருள் ஒருவர் உண்மையாகவே அச்சிட்டுச் சுவாமி சிவானந்தருக்கு நூறு பிரதிகள் அனுப்பித் தங்கள் நம்பிக் கையை மிகவும் பாராட்டுகின்றேன் என்று குறிப்பிட் டிருந்தார்.

அவரைச்சுற்றி ஓர் ஆசிரமம் மெதுவாக வளர்ந்து வருவது காணப்பட்டது; அது வளர்ச்சி பெற்றுக்கொண்டே இருந்தது; அதை வளரும்படிக் குருதேவர் அனுமதித்தார். அதைத் தடுக்கும் அளவுக்குத் துறவின் அகந்தை மிகுந்த கெடுபிடி இருக்கவில்லை. தொடக்க காலத்தில் குருதேவர் ஆசிரமத்தைக் கட்டவும் வேண்டாம்; சீடர்களை ஏற்றுக் கொள்ளவும் வேண்டாம் என்று வற்புறுத்திக் கொண்டிருந் தார். தற்போது இறைவனுடைய விருப்பம் இதற்கு மாருக இருந்தது. எனவே யாவும் நிறைவேறலாயிற்று; குருதேவர் இதை எதிர்த்து நடந்து கொள்ளவில்லை. தனித் திருக்கும் சுகம், சுயேச்சையாக இருத்தல், சுதந்திரமாக இருத்தல் — இவையும் துறக்கப்பட நேர்ந்தன.

நீங்களாகச் செய்துகொள்ளும் தீர்மானங்கள், கொள்கைகள் உங்களைக் கீழே இழுத்துச் செல்வனபோல நீங்கள் உணரும்போது, உங்களுடைய தனித்துவம் செறிந்த சொந்த மனஉறுதி அவற்றைக் கீழே வீழ்த்திவிடும். உங்க ளுடைய சட்டையைத் துறப்பது உங்களுக்கு எளிதாக இருக்கும்; ஆனுல் உங்களுடைய தற்பெருமையைத் துறப்பது உங்களுக்கு மிகவும் கடினமாக இருக்கும். ஞானம் மிகுந்த சாதுக்கள் கூடத் தோல்வியுற்ற அக்கினிப் பரீக்ஷை இதுவே. நற்பெயரை இழந்துவிடுவோம் என்று அவர்கள் அஞ்சி, ஆன்மீகப் பாதையில் குழந்தை தங்களின் குழந்தைப் பருவக் கருத்துக்களாக வெளியிட்டவற்றுடன் ஒட்டிக்கொண்டு, தெய்வீகப் பூஞ்சோலையில் தங்களை வளர்த்துக்கொள்வதைத் தாங்களே தடுத்துக் கொள்ளுகின்றுர்கள்.

துறவு என்பது ஒரு பயிற்சியன்று; ஒரு நல்ல அதி காலையில் நீங்கள் செய்யக்கூடிய ஏதேனும் ஒன்றும் அல்ல. உங்களுடைய சுகவாழ்க்கை, புறவாழ்க்கை ஆகியவைப் பற்றித் தொடர்ந்து, முடிவில்லாமல் நடைபெறும் ஒரு பணியாகும். தொடர்ந்து விளங்கும் இத்துறவு ஆர்வம், உள்ளத்தில் பெரும் நெருப்பாக வளர்ந்து இலட்சியக் கொள் கைகள் எல்லாவற்றையும் முறித்துக் கீழே சாய்த்து

விடுகின்றது. அது தனி மனித சுதந்திரமாக, வைராக்கிய மாக, உங்கள் சொந்த உருவத்தை விட்ட சுதந்திரமாக, உங்கள் அகத்தே இடம் பெற்ற உங்கள் சொந்தக் கருத் துக்கள், கொள்கைகள், திட்டங்கள், நம்பிக்கைகள், அச்சங்கள் ஆகியவற்றிலிருந்து விடுபட்ட சுதந்திரமாக, உங்களாலேயே உங்களை அதிகாரம் செய்வதிலிருந்து விடு பட்ட சுதந்திரமாகத் தோற்றமளிக்கின்றது. மனைவி யையும், மக்களையும், இன்னும் உள்ளவற்றையும் துறப்பது மிகவும் எளிது. ஆனால் நான் என்ற அகந்தையைத் துறப்பது, துறவு ஆர்வத்தைக் கண்டு கொண்டாலன்றி, எளிதன்று; இத்துறவு ஆர்வம் இல்லையேல், அனைத்தையும் துறப்பது இயலாததாகும். புறத்தே உள்ள சுற்றத் தொடர்புகளைக் கருதும்போது கூட இத்துறவு ஆர்வம் உள்ளத்திலிருந்து உதிக்கின்றது. ஆதலின் இது இயந்திரம் இயங்குவது போன்ற, உடலால் செய்யப்படுவது போன்ற, கருவியால் செய்யப்படுவது போன்ற செயலன்று; தனி ஆர்வமே இது. குருதேவரின் பாடல் பின்வருமாறு:—

''கண் ஒரு தளையன்று; உருவம் ஒரு தளையன்று;
ஜெய ஜெய் ராம்!
உணர்ச்சி மிக்க ஆசையே ஒரு தளை சீதாராம்!

இதே வகையாக அவர் இன்னும் பல வழங்கியுள்ளார்; ''ஓசை ஒரு தளையன்று; இசைப் பாட்டு ஒரு தளையன்று; உணர்ச்சிமிக்க ஆசை உங்கள் உள்ளத்துக்குள் இருக்கின்றது; வெளியே இல்லை. நீங்கள் இதைப் புரிந்து கொள்ளவில்லை என்றால், ஒவ்வொன்றையும் நீங்கள் வெளியே துரத்திக் கொண்டிருக்கும்போது, இந்த உணர்ச்சி மிக்க ஆசை மட்டும் இன்னும் மிகுந்த உணர்ச்சியுள்ளதாக, வைத்துக் கொண் டிருக்கின்றீர்கள். 'உணர்ச்சி' மிக்க ஆசையைத் தவிர உங்களைக் கட்டுப்படுத்துவது பிறிது எதுவும் இல்லை.

யோக வாசிஷ்டத்தில் ஓர் அழகிய சிறியபாடல் கூறுவ தாவது, ''தம் பாதங்களைத் தோலால் ஆகிய செருப்புக்களால் மூடியிருப்பவருக்கு, உலகம் முழுவதும் தோலால் மூடப்பட்டி ருக்கிறது'' என்பதாகும். நீங்கள் உலகத்தைச் சீர்திருத்த

வேண்டியதில்லை; நீங்கள் உலகத்தைத் துறக்க வேண்டியதில்லை. உங்கள் உள் உருவத்தைத் துறவு ஆர்வத்தால் போர்த்திக் கொள்ளுங்கள்; உங்கள் வழியில் உள்ள தடைகள் எல்லாவற்றையும் அது அழித்து ஒழித்துவிடும். ஆதலால் குருதேவர் தம்முடைய யோகப் பயிற்சி எதுவாயினும் தமக்குத் தடைகள் எவையும் இருக்கவில்லை என்று ஒரு முறை தெரிவித்தார்.

சுவாமி சிவானந்தர், காற்று விரும்பும் திசையில் அடித்துச் செல்லப்படும், காற்றில் மிதக்கும் இறகு அல்ல. தமக்கு என்ற சொந்த இலட்சியம் உள்ளவர் அவர்; ஆனால், ஏசுநாதர் கூறியவாறு, ''இறைவா! என் விருப்பம் அன்று; தங்கள் விருப்பமே நிறைவேற்றப்படுகின்றது,'' என்று கூற வேண்டும். ''என்ன நிகழ்கின்றதென்று நான் கவலைப்பட மாட்டேன்'' (இது மிகுந்த அலட்சியம்) என்றோ அல்லது, ''இல்லை! நான் இதைச் செய்வதாகச் சபதம் எடுத்துக் கொண்டேன். எனவே அவ்வாறே நடக்கட்டும்'' (இது அகந்தைக்குரியது) என்றோ கூறாமல் நீங்கள் துறவு ஆர்வத்தை ஒவ்வொரு கணமும் உயிர்ப்புள்ளதாக வைத்திருக்க முடியுமா? குருதேவரின் இரகசியம் இதுவே.

முற்றிலும் சரணாகதி அடைதல் என்பதன் பொருள், குருதேவரின் வாழ்க்கை ஒருபோதும் இந்திய இயக்கம் போன்றதன்று; திரும்பத் திரும்ப ஒன்றையே செய்வதாகவும் ஒருபோதும் இருக்கவில்லை; அப்படி இருப்பின் உண்மையில், மிகப் பெரும் அளவில் அது முரண்பாடுகளின் தொடர்களாக அமைந்துவிடும். சான்றாக, நீங்கள் 1944-ல் அல்லது '45-ல் நீங்கள் ஆசிரமத்திற்கு வந்து ''சுவாமிஜி! நான் ஒரு ஜோடி கைத் தாளங்கள் (சிறிய ஜால்ராக் கட்டைகள்) கொண்டு வந்துள்ளேன். சத் சங்கத்தின் போது நான் தாளம் போடட்டுமா?'' என்று நீங்கள் கூறினால், அவர் ''வேண்டாம், நீங்கள் கீர்த்தனம் பாடும் போது தியானத்தில் அமர்ந்திருப்பதுபோல அமர்ந்து, தியான பாவனையில் நீங்கள் நுழைய வேண்டும்,'' என்று கூறுவார்.

எனினும், நீங்கள் 1953-வாக்கில் திரும்பவும் வந்தால், அவர்கள் அனைவரும் தபலா, ஆர்மோனியம் முதலிய எல்லா இசைக் கருவிகளுடனும் பாடிக்கொண்டும் ஆடிக் கொண்டும் இருப்பதைக் கண்டிருப்பீர்கள். 'நான்' 'எனது' என்ற உணர்வுகள் சிறிதும் இல்லாத போது வாழ்க்கை என்ற ஆறு முழுவதும் பெருக்கெடுத்தோட அனுமதிக்கப் படுகின்றது; குறுக்கீடு எதுவும் இல்லை; எங்கும் நிறுத்தப் படுவதும் இல்லை; முன்னே செல்லுமாறு தள்ளப்படுவதும் இல்லை. ஆசிரமம் வளர்ச்சி அடைந்த போது, குருதேவர் ஒவ்வொரு புதிய சூழ்நிலை உருவாகும் போது நாளுக்குநாள், கணத்துக்குக் கணம், மிகப்பெரும் அளவில் மாற்றங் களைச் செய்ய வேண்டி இருந்தது.

குருதேவரின் இயக்கம் முழுவதும் சங்கீர்த்தன மாநாடு களுடன் தொடங்கியது; ஆனால் விரைவில் முழு அளவில் மாற்றம் ஏற்பட்டது. குருதேவர் கண்டு கொண்ட ஓர் உண்மையாதெனில், தனிச்சிறப்பை எந்த வடிவில் பெற்றாலும் அது அகந்தைக்கே — மேன் மேலும் வளரும் அகந்தைக்கே இட்டுச்செல்லுகின்றது; ஆனால் துறவு என்பதோ அகந்தையைக் குறைக்கவேண்டும்; மெலிந்து போகச் செய்யவேண்டும்; இதயத்தைப் (பளிங்கு போல் உள்ளே என்ன இருக்கின்றது என்று காணும்படியாகத்) தெளிவு பெறச் செய்யவேண்டும். எனவே குருதேவர், ''சங்கீர்த்தனம் மட்டும் போதுமானதன்று; இன்னும் அதிகமாக நாம் சேர்க்க வேண்டும்; சேவை, சாஸ்திரப் படிப்பு, தியானம் ஆகியவற்றை நாம் உடன் சேர்த்துக் கொள்ளவேண்டும்'' என்று தீர்மானித்தார். ஆதலால் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் உருவாக்கப்பட்டது. தன் முதல் விதியில் அது, சங்கம் இந்துசமய அறிவைப் பரப்ப வேண்டும் என்று கூறியது; இதுவே முதலில் செய்யப் பட வேண்டிய முக்கியப் பணி என்ற எண்ணமும் ஆர்வமும் நிலவின; எனவே அது ஏற்றுக்கொள்ளப்பட்டது; ஆனால் நீண்ட காலம் வரை அல்ல. குருதேவரின் ஒளிமிக்க ஆளு மையும், போதனைகளும் பிற மதத்தவரைக் கவர்ந்தபோது

அவ்விதியை மாற்றி விரிவாக்கித் திருத்தியமைத்தார், இதைப் புரிந்துகொள்ள விரும்புவோர் அவரோடு உடன் வாழவேண்டும், நாளுக்கு நாள் எங்கிருக்கிறோம் என்று எங்களுக்கே தெரியாது; ஏனெனில் அத்துறவு முற்போக்கு உள்ளது மட்டுமன்று; ஆக்கிரமிக்கக் கூடியதாகவும் நிலையான தாகவும் இருந்தது. எதுவும் தேங்கியிருப்பதற்கு அவர் சிறிதும் அனுமதிக்கவில்லை.

தெய்வீக வாழ்க்கைச் சங்கம் 1936-ல் தொடங்கப் பட்டது; 1947 வாக்கில் குருதேவர் யோக வேதாந்த வனப் பல்கலைக்கழகத்தைத் தொடங்கக் கருதினார். இதற்காக அவர் சில அறிக்கைகளை அச்சிட்டிருந்தார். கடிதப் போக்கு வரத்தில் பொறுப்பேற்றிருந்த எங்களிடம் அவர், ''இனி மேல் தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் அறிக்கைகளைப் பயன்படுத்த வேண்டாம்; இதையே பயன்படுத்துங்கள். யோக வேதாந்த வனப் பல்கலைக்கழகச் செய்திகளை நீங்கள் பரப்பவேண்டும்'' என்று கூறினார்.

புதிய முடிச்சு எங்கே விழுகிறது என்பதையும் பழைய முடிச்சு உடனுக்குடன் அறுத்தெறியப்படுவதையும் நீங்கள் கவனிக்கவேண்டும்; பார்க்கவேண்டும். இத்துறவு ஆர்வம் அல்லது உள்முக விழிப்புணர்வு, பந்தத்தின் எல்லா வடிவங் களையும் எதையும் விட்டு வைக்காமல் நிறுத்திவிடுகின்றது; நெருப்பு, எதையும் விட்டு வைக்காமல் எரித்துவிடுவதைப் போன்றது, அது. குருதேவரைப் பொறுத்தவரைக்கும் இந்த நெருப்பு அணையாமல், முடிவில்லாமல், எல்லா இலட்சியங்களையும் எல்லா எல்லைகளையும் — அவை எவை யாக இருப்பினும் அவற்றையெல்லாம் அழித்து ஒழித்து விட்டன.

ஒருமுறை குருதேவர் ஆசிரமத்தில் தங்குவதற்குப் பெண்களை அனுமதிக்கக் கூடாது என்று கூறினார்; ஆனால் ஒரு பெண்மணி தங்குவதற்காக வந்தபோது, ''சரி, சரி விதியை மாற்றுங்கள்'' என்று தெரிவித்தார். கிறிஸ்துவின் சொற்களின்படி, ''சடங்கு மனிதனுக்காக ஏற்படுத்தப் பட்டது; சடங்குக்காக மனிதன் அல்ல.''

குருதேவரின் துறவு, பற்றற்ற வைராக்கியத்தின் தனிச் சிறப்பாகவும் விளங்கிற்று. எங்களில் பெரும்பாலோருக்கு அன்புக்கும் பற்றுக்கும் உள்ள வேறுபாடோ அல்லது வைராக்கியத்துக்கும் அலட்சியத்துக்கும் உள்ள வேறுபாடோ தெரியாது. ஒரு வேளை, இதை விளக்கிச் சொல்வது இயலாத தாக இருக்கலாம்; ஒருவர் இதை அனுபவபூர்வமாகக் கவனித்துப் பார்த்து இதன் அழகைப் பாராட்டலாம். சுவாமி சிவானந்தர் மனித சமுதாயத்தினிடம் அன்பு பாராட்டியதைப் போல், பாராட்டிய ஒருவரை நான் ஒரு போதும் பார்த்ததில்லை. தம் சீடர்கள்பால் அவர் கொண் டிருந்த மனப்பான்மையே இதை மிகவும் தெளிவாகக் காட்டியது. அவர் செய்யாத எதுவும் உண்மையில் இல்லை; அனுசரிக்காத எதுவும் உண்மையில் இல்லை......

இதயபூர்வமாகப் பணி செய்த ஒரு துறவி, ஆசிரமத்தில் இருந்தார். அவர் இல்லையென்றால் ஆசிரமம் நடைபெறாது என்று நாங்கள் அனைவரும் கருதினோம். அவர் அவ்வளவு வேண்டியவராக, முக்கியமானவராக இருந்தார்; அவர் குருதேவரிடம் ஆழ்ந்த பக்தி பூண்டிருந்தார்; குருதேவரும் பதிலுக்கு அவரை மிகவும் புகழ்ந்து கொண்டிருந்தார். ஒருநாள் இத்துறவியை ஒரு வெறி நாய் கடித்து விட்டது. தலையிலிருந்து கால் வரைக்கும் காயம் ஏற்பட்டிருந்தும்கூட அந்த இளம் துறவி இரண்டு, மூன்று வாரங்களில் குண மடைந்துவிட்டார்; அவருடைய வலிமையும், சக்தியும் அத்தகையதாக இருந்தது. இச்சிகிச்சைக் காலத்தில் குரு தேவர் எப்படி அவரைக் கவனித்து பேணி வந்தார் என்பதை விளக்கப் போதிய சொற்கள் இல்லை. இத்துறவி, மீண்டும் பணி செய்யத் தொடங்கியபோது, திடீரென்று இடது தோளில் வலி ஏற்பட்டது. யாரோ ஒருவர் குருதேவரிடம் சென்று தெரிவித்தார். உடனே ஒரு வாடகைக் கார் அமர்த்தப்பட்டது; இத்துறவி ஒரு டாக்டருடன், இரு நூறு மைல் தொலைவில் உள்ள ஒரு தனி மருத்துவ மனைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். குருதேவரே, டாக்டரிடம், ''உங்களால் முடிந்த அனைத்தையும் அவருக்குச் செய்யுங்கள்.

செலவைப் பற்றிப் பொருட்படுத்த வேண்டாம்'' என்று கூறினர். அடுத்த நாளே எங்களுக்கு ஒரு தந்தி வந்தது. ''துறவி முன்னேற்றம் அடைந்துக் கொண்டிருக்கின்றார்''. நாங்கள் அதைக் குருதேவரிடம் தந்தோம், ஆகா! எவ்வளவு மகிழ்ச்சியடைந்தார்! எத்தகைய மகிழ்ச்சி அவருடைய முகத்தில் ஒளி பரப்பியது. அவருக்கு மிகுந்த கிளர்ச்சி ஏற்பட்டது. இரண்டு, மூன்று மணி நேரத்திற்குப் பிறகு, குருதேவர் நீராடி முடித்துத் தம் உணவைத் தயார் செய்து கொண்டிருந்தார். மற்ரெரு தந்தி வந்தது. அத்தந்தியைக் கொண்டு வந்தவர் அதைப் படிக்க முடியாமல் தொண்டை அடைத்துப் போய்த் திணறினர். அவர் குருதேவரிடம் அதைக் கொடுத்தார். குருதேவர் தம்முடைய மூக்குக் கண்ணுடியையும் அணியாமல் அதைப் பார்த்தார், இத்தகைய ஆழ்ந்த அதிர்ச்சியை நான் யார் முகத்திலும் பார்த்ததில்லே. 'ஆ! அவர் காலமாகிவிட்டார்' என்று அவர் அலறினர். அவர் இறந்துவிட்டார் என்று தந்தி பேசிற்று. மெய்யுணர்வு பெற்ற ஞானி, ஒரு பெரும் யோகி, மனிதத் தன்மையற்றவர் அல்ல. யோகியரும், ஞானியரும் கற்சிலேகள் போல நடந்து கொள்வார்கள் என்று நாம் அவர்களேப் பற்றி விநோதமாகக் கருதி வருகின்ருேம். மனிதருக்குள் மிகத் தூய்மை வாய்ந்தவர் ஒரு யோகிதான் என்றும், ஒரு வேளே அவர் மட்டுமே ஒரு மனிதர் என்றும், நீங்கள் குருதேவரைப் பார்த்தால், பாராட்டிக் கூறுவீர்கள். முதல் அதிர்ச்சிக்குப் பிறகு அவர், ''சரி, அவருடைய உடலே இங்கே கொண்டு வருமாறு டாக்டருக்குத் தெரிவியுங்கள். கங்கைக்கு நாம் அதை உணவாக்குவோம். அதுதான் அவருடைய விருப்பம்'' என்று அறிவித்தார். திடீரென்று ஒருவர், ''குருதேவர் பற்றுக் கொண்டுள்ள ஒரு ஆள் இங்கே இருக்கின்ருர்; அவர் பால் குருதேவர் அவ்வளவு அன்பு கொண்டுள்ளார்'' என்று கருதக்கூடும். அடுத்த நாள் காலேயில் வாடகைக் கார் அந்த உடலேச் சுமந்து கொண்டு வந்து சேர்ந்தது. குருதேவர் தம் அலுவலகத்துக்குச் சென்று கொண்டிருந்தார். அவர் பார்ப்பதற்காகத் திரும்பவும் இல்லே. அந்த ஆள் உயிருடன்

இருந்தவரைக்கும் தம்மால் முடிந்த எல்லாவற்றையும் செய்தார். அவர் இறந்துவிடவும், குருதேவர் எந்தவிதமான கவனிப்பையும் செலுத்தவில்லை.

ஓரிரு நிமிடங்களுக்குள், எதுவுமே நடவாதது போல், குருதேவர் அலுவலகத்தில் அமர்ந்து தம் பணியைச் செய்து கொண்டிருந்தார். இந்தப் புனித மகான்தான் இருபத்தி நான்கு மணி நேரத்துக்கு முன்பு வரையில், இந்த ஆளின்மீது தம் கவனத்தையெல்லாம் செலுத்தி நன்கு பேணிக் காப்பதற்காகத் ஒவ்வொன்றையும் தாம் தவிர்த்தவர்; சிம்லாவுக்கு அவருடன் உடன் செல்லத் தம் சொந்த டாக்டரையே அனுப்பியவர்; அதே குருதேவர், அந்த ஆள் இறந்தவுடனே, மாலை நேரத்துச் சத் சங்கத்தில், பிரிந்த ஆன்மா சாந்தியடைவதற்காகப் பிரார்த்தனை செய்தது தவிர, அவரைப் பற்றி மீண்டும் நினைக்கவில்லை. பற்றற்ற நிலையில் நேசிப்பவராகவும், அலட்சியப்படுத்திவிடாமல் பற்றற்று இருப்பவராகவும் உள்ள உயிர் வாழும் ஓர் உதாரணமாக விளங்கும் இவரை நீங்கள் பார்க்க வேண்டியது மிகவும் அவசியம்.

துறவு ஆர்வத்தினுல் உண்மையான பணிவு தோன்றுகின்றது; ஏனெனில் இத்துறவு, புறம்பே இருப்பதை (மற்றவர்கள்பால் நீங்கள் கொண்டுள்ள பற்றை) எரிப்பதுடன் நில்லாமல், உங்கள் உள்ளத்தின் ஆழத்தில் தொடர்ந்து எரிந்து, உங்களிடத்திலிருந்தும் உங்களை அது விடுவிக்கின்றது.

அவர் எழுதிய அகில உலகச் சமரசப் பிரார்த்தனையில் நாம் அடிக்கடி திரும்பத் திரும்பச் சொல்வது இதுவே; ''அகந்தையிலிருந்தும் (இது முதலில் செய்யப்பட வேண்டியது) காமம், பேராசை, சினம், பகைமை, பொறாமை ஆகியவற்றிலிருந்தும் எங்களை விடுவியுங்கள். இவ்வாறு நீங்கள் ''அகந்தை காமம், பேராசை, சினம், பகைமை, பொறாமை ஆகியவற்றிலிருந்து என்னை விடுவியுங்கள்'' என்று பிரார்த்தனை செய்யும்போது; இவையாவும்

உங்களுக்குள் உள்ளன என்றும் ஒருவேளை தோற்றம் தரக் கூடிய நிலையில் அல்லது சக்தியுடன் ஒளிந்துகொண்டுள்ள அல்லது மறைந்துள்ள தோன்ரு நிலையில் அவை இருக்கலாம். அகந்தையை வெற்றிகொள்வதற்காகச் செய்யும் தொடக்க முயற்சியும்கூட அது அங்கே உள்ளதென்ற நேரான உண்மையுணர்வினுல் அமைவதாகும்; அதை உண்டென்று ஒத்துக்கொள்வதில்தான் உண்மையான பணிவு இருக் கின்றது. அடிக்கடி குருதேவர் தமிழில் உள்ள அற்புதமான சொற்களில் இவற்றைக் குறப்பிடுவது வழக்கம். ''கடைசி வரைக்கும் உஷாராக இருக்கணும்.'' இறுதிவரையில் நீங்கள் விழிப்புடன் இருக்கவேண்டும். உடம்பு இருக்கும் வரைக்கும் அகந்தையும் தன் சக்தியுடன் இருக்கின்றது என்ற அறிவு, உண்மையான பணிவுடன் பாசாங்குடன் கூடியதாகவோ அல்லது எல்லைமீறிய பணிவாகவோ அன்று; உண்மையான பணிவுடன் இருக்கக்கூடிய வல்லமையைத் தருகின்றது; துறவு ஆகிய பெருநெருப்பினுல் ஒருவர் முழுமையாக ஆட்கொள்ளப்படும் போதுதான் இந்த உண்மையான பணிவு ஒருவரிடம் ஏற்படுகின்றது.

அகில இந்தியச் சுற்றுப்பயணத்தின் கடைசி நாளன்று இந்த நிகழ்ச்சி நிகழ்ந்தது. குருதேவர் இந்தியா, இலங்கை ஆகியவற்றின் எல்லா இடங்கட்கும் சுற்றுப்பயணம் செய்தார். கோடிக்கணக்கான மக்கள் அவரைத் தெய்வ மாக வணங்கிப் போற்றினர். தம்மைச் சுற்றியும் கூட்ட மாகத் திரண்ட கோடிக்கணக்கான மக்கள் ஒவ்வொரு வருடைய காலடிகளில் விழுந்து வணங்கக் குருதேவரால் அவர் விரும்பினுலும்கூட, முடியாது என்பதை நீங்கள் நிச்சயமாக உணர்வீர்கள். கடைசி நாளன்று அவர் டில்லியில் இருந்தார். அவர் உடல் நலம் குன்றியதால் நிர்வாகிகள் ஏற்பாடு செய்த இடத்தில் தங்கிவிடாமல் தம் பக்தராக இருந்த ஒரு ராணுவ அதிகாரியின் இல்லத்தில் தங்கி ஓய்வு எடுத்துக்கொண்டிருந்தார். பகல் உணவுக்குப் பிறகு அவர் உறங்கிக்கொண்டிருந்தார். 3-15 மணிக்குப் பிற்பகலில் அவர் யாரையோ சந்திப்பதாக இருந்தது.

3-05 மணிக்குக் குருதேவர் தொண்டையைக் கனேக்கும் சத்தத்தை நாங்கள் கேட்டோம். அவர் எழுந்திருந்து, ''நாம் செல்லவேண்டிய நேரம் வந்து விட்டதல்லவா? கார் வந்ததா?'' என்று கேட்டார். நாங்கள், ''ஆம்! சுவாமிஜி! கார் இதோ வந்துள்ளது'' என்று தெரிவித்தோம். உடனே அவர் எழுந்து நின்ருர்; தமது பையையும், துடைக்கும் துண்டையும் எடுத்துக்கொண்டு காரில் ஏறிஞர். காருக்குள் இருந்தவாறு அவர் வீட்டின் மண்டபத்தைப் பார்த்தார்; அங்கே ராணுவ அதிகாரியின் துணேவியார் கதவருகில் நிற்பதைக் கண்டார், அவர், ''நாம் இங்கே திரும்பி வருகிருேமா?'' என்று எங்களேக் கேட்டார், நாங்கள் திரும்பிப் வரப்போவதில்லே. குருதேவர் அந்த அம்மையாரின் பக்கம் திரும்பிப் பார்த்துக் கைகூப்பி வணங்கி விடை பெற்ருர். கார் சென்றது, இரண்டு, மூன்று நிமிடங் களுக்கு பிறகு அவர், ''வீட்டுக்குத் திரும்பிச் செலுத்துமாறு ஓட்டுநரிடம் கூறுங்கள்'' என்ருர். வீட்டு வாசலில் கார் வந்து நின்றது. அங்கு ஓர் அழகான காட்சி நிகழ்ந்தது. காரிலிருந்து இறங்கி அவர் வீட்டுக்குள் நுழைந் தார். முன்புற அறையில் அம்மையார் இருக்கவில்லே; சமையலறையில் இருந்தார்; எனவே அவர், அழைக்காமலும் குரல் கொடுக்காமலும் நேராக அங்கேயே சென்ருர். அவர் அம்மையாரின் முன்ஞல் கைகூப்பி வணங்கி, ''அருள்கூர்ந்து என்னே மன்னியுங்கள்,'' என்று வேண்டிஞர். அது மறக்க முடியாத ஒரு நிகழ்ச்சியாகும். அவர் உயரமாகவும் பருத்தும் இருந்தார். அம்மையார் குள்ளமாகவும் ஒல்லியாகவும் மெலிந்தும் இருந்தார். அவர் தலேவணங்கி, ''அருள்கூர்ந்து என்னே மன்னியுங்கள்'' என்று வேண்டிஞர்; கண்களில் கண்ணீர் சொரிய நின்று திரும்பத்திரும்ப, ''அருள்கூர்ந்து என்னே மன்னியுங்கள்'' என்று வேண்டிஞர். அம்மையார் எதுவும் பேசமுடியல்லே; அழத்தொடங்கிஞர். குருதேவர், ''நான் உங்களிடம் வந்து முறையாக விடை பெற்றிருக்க வேண்டும். நான் காரிலிருந்தவாறே தங்களுக்கு நன்றி கூறினேன். நான் உள்ளே வந்து முறையாக விடை பெற்றிருக்கவேண்டும். அருள் கூர்ந்து என்னே மன்னியுங்

கள்'' என்று வேண்டினர். பாவம்! அந்த அம்மையார் கண்ணீர் விட்டு அழுதார். அப்பெண்மணி, என்ன செய்வது என்று அறியாதவராய் மனம் உடைந்து அவருடைய திருவடிகளைப் பற்றிக் கொண்டார். பின்னர் குருதேவர் திரும்பி வந்து காரில் அமர்ந்தார். 'சரி நாம் போகலாம்' என்றார். நாங்கள் செல்லத்தொடங்கிய பின் ஐந்து நிமிடங்கள் வரையில் அவர் எதுவும் பேசவில்லை. பின்னர் என்பால் திரும்பிப்பார்த்து, ''எங்கிருந்தோ சிறிது அகந்தை உள்ளே நுழையப்பார்த்தது, நாம் மிகவும் விழிப்பாக இருக்க வேண்டும்'' என்று கூறினர். அதைச் செய்ய முடிந்தால் புறம்பே உள்ள பொருள்களில் உள்ள பற்றுதலிலிருந்து விடுபட்டிருத்தல் மாத்திரம் அன்று, மிக முக்கியமாக, ஒருவர் தம்முடைய அகந்தை, தற்பெருமை ஆகியவற்றிலிருந்தும் விடுபட்டிருக்க முடியும்.

குருதேவரின் உள்ளத்திலோ, நடத்தையிலோ பலவீனம் எதுவும் இருக்கவில்லை. அவரைப் பொறுத்தவரைக்கும் பணிவுடைமைகூட ஒரு கண்ணியாகவோ அல்லது ஒரு சிறையாக இருக்க முடியாதவாறு அவரால் உறுதியாகவும், மனம் நெகிழாமலும் இருக்கமுடியும். குருதேவரின் பணிவுடைமை, ஞானமும் விவேகமும் கலந்த கலவையாக இருந்தது.

உலகப் புகழ் வாய்ந்த ஆன்மீகத் தலைவர் ஒருவருடன் அவர் நிகழ்த்திய ஒரு சொற்போரில் இதைக் கண்டோம். அத்தலைவர் மிகவும் உண்மையாக, உலகம் முழுவதும் உள்ள கோடிக்கணக்கான மக்களின் தலைவராக இருந்தார்; அவர் மறைவதற்கு முன்பேகூட அவரைத் தெய்வத்தின் அவதாரமாக மக்கள் வணங்கி வந்தனர்.

1953-ல் குருதேவர் கடுமையான வாத நோயால் பாதிக்கப்பட்டுப் படுக்கையில் இருந்தார். படுக்கையில் அவரால் உட்காரக்கூட முடியவில்லை; ஆனல் அவருடைய மனம், முழுவதும் செப்பமாகவும் விழிப்புடனும்

இருந்தது. ஆகா! அப்போது அவர் இருந்த நிலையைப் பார்ப்பதே ஓர் ஆனந்தமாக இருந்தது. தலையணைகளைத் தாங்கும் துணையாகக்கொண்டு அழகாக உணவருந்துவார்; பேசுவார்; பணிசெய்வார். அவருக்குப் பருத்த கால்களும் தொடைகளும் இருந்தன; அவற்றை அவர் மேசையாகப் பயன்படுத்தினார். தம் பணியைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தார். அவர் "நான் செய்யமுடியாத வேலை, என்னுடைய இடுப்பைத் திருப்புவது தான்" என்று கூறினார். துரதிர்ஷ்டவசமாக இந்த ஆன்மீகத் தலைவர் இத்தகைய சமயத்தில் வந்து சேர்ந்தார். எனவே சுவாமி சிவானந்தர் சரியான முறையில் வணக்கம் செலுத்த முடியாமல் போனது இந்த ஒரே புனித மகானுக்குத்தான். குருதேவரின் முகத்தில் இருந்த ஆழ்ந்த வருத்தத்தை நீங்கள் காணமுடியும். "உலகப் புகழ்பெற்ற இத்தகைய ஆன்மீகத் தலைவர் வந்துள்ளார்; நானோ எழுந்து நின்று வணக்கம் செலுத்தமுடியாமல், சரியான முறையில் வரவேற்கவும் முடியாமல் இருக்கின்றேன்." அத்தலைவர் தம் சீடருடன் உள்ளே வந்தார். அவர் வந்து அருகில் நிற்கவும், குருதேவர் படுத்திருந்தவாறே தம்முடைய நெற்றிக்கு நேரே கைகளை உயர்த்திக் கூப்பி வணங்கி, 'ஜெய பகவான், ஜெய பகவான்' என்று கூறினார். இவர் ஏற்றுக்கொண்டதற்கு அறிகுறியாகத் தம் தலையை மாத்திரம் அசைத்தார். அவர் மிகவும் கடுமையான நோக்கத்துடன் வந்திருந்தார். சீடர் செய்தியைத் தெரிவித்தார். "ஒருசமயம் என்னைப்பற்றி நீங்கள் மிகவும் இழிவாகப் பேசினீர்கள் என்று அறியவந்தேன்". சுவாமி சிவானந்தர் அவரைப் பார்த்தார்; இச்சந்திப்பு இருமகான்களிடையே நடைபெறும் அன்பான சந்திப்பு அன்று, இது ஒரு போராட்டத்துக்கு விடுக்கும் அழைப்பு என்று உணர்ந்துகொண்டார். குருதேவர் அவரைப்பார்த்து "எனக்கு நினைவில்லை...... தங்களுக்கு எதிராக நான் எதையும் பேசியதாக எனக்கு நினைவில்லை என்று கூறினார். அம் மனிதர், நீங்கள் என்னை நிந்தித்துப் பேசியதற்குச் சாட்சி வைத்திருக்கிறேன் என்றார். குருதேவர் எனக்கு நினைவில்லை, மற்றவர்களைப்

பற்றிக் குறை கூறுவது என் பழக்கம் அல்ல'' என்றார். மற்றவர் தொடர்ந்து ''எனக்கு உலகம் முழுவதும் சீடர்கள் இருக்கின்றார்கள். நீங்கள் ஒரு பழிதூற்றும் பேர்வழி என்று அவர்கள் எல்லோரும் அறியச் செய்கின்றேன் என்று மிரட்டினார். உடனே குருதேவரின் முகம் கடுமையாகியது. ஒருசில வினாடிகளுக்குள் அன்பைப் பொழியும் மென்மையான முகம், கடினமாயிற்று. அவர், சரி நீங்கள் விரும்பியதைச் செய்யுங்கள். போங்கள் என்று கடுமையாகக் கூறினார். நாங்கள் அனைவரும் திகைப்படைந்து நின்றோம். சுவாமி சிவானந்தர் பலவீனமானவரல்ல; அவர் மிகவும் கெடுபிடியாகவும் இருக்கமுடியும், ''கடவுளை அனைவருள்ளும் காணுங்கள்'' என்பது அவர் ஒவ்வொருவருக்கும் போதித்த போதனையாகும். அவரும் அவ்வாறே செய்து வந்தார். இந்த நிகழ்ச்சியிலும்கூட என் இறைவா! நீங்கள் என்னுடன் சண்டையிட விரும்பினால் நல்லது, வாருங்கள் சண்டையிடுவோம் என்ற உணர்வைக் காண்கின்றோம். இத்தலைவர் ஒருவர்தான் குருதேவரால் வரவேற்கப்பட்டு உடனே அனுப்பப்பட்டவர் ஆவார்.

ஆகையால், பணிவுடைமை வேறு; பலவீனம் வேறு; இரண்டையும் ஒன்றாகக் கருதிக் குழப்பமடையக் கூடாது. இறைவன் அனைவருள்ளும் இருக்கின்றார் என்றும்; இறைவன் அனைவருள்ளும் இருக்கின்றார் என்பது மட்டும் அன்று; இறைவன் மட்டுமே அனைவருள்ளும் இருக்கின்றார் என்றும் உணரும் மெய்யுணர்வின் இரட்டிப்புப் பலங்களுடன் கூடிய முழுமையான துறவு ஆர்வம் இருந்தால் மட்டுமே பணிவுடைமை தோன்ற முடியும்.

தம்முடைய பிறந்த நாள் விழாவைக் கொண்டாடுவது பற்றிக் குருதேவர் மிகவும் மகிழ்ச்சியுடன் இருந்தார். உண்மையில் இந்த நிகழ்ச்சி முழுவதையும் அவரே தொடங்கி வைப்பது வழக்கம்; சரியாக ஏப்ரல் மாதம் ஒரு நாட் காலையில் அலுவலகத்துக்கு அவர் வந்து, ''வெங்கடேசானந்த சுவாமி! பிறந்த நாள் விழா மலருக்கான கட்டுரை

களை வரவேற்கும் சுற்றறிக்கைகளைத் தயார் செய்து விட்டீர்களா? முதற் சுற்றறிக்கை இப்படி இருக்கவேண்டும்; இரண்டாவது சுற்றறிக்கை இப்படி இருக்கவேண்டும்...... இசைவாணர் சிலரை அழையுங்கள். இதைச் செய்யுங்கள்; அதை செய்யுங்கள் என்று தெரிவிப்பார். எல்லாவற்றையும் அவரே தொடங்கி வைப்பது வழக்கம்.

ஏன்? குருதேவரே இதன் காரணங்களைத் தெரிவித்துள்ளார். ''விழாவைக் கொண்டாடும் எந்த ஒரு வாய்ப்பும் நல்லதே. அதற்கு நீங்கள் எந்தப் பெயரைச் சொன்னாலும் — பிறந்த நாள் விழா, குரு பௌர்ணமி அல்லது சிவராத்திரி — என்று எந்தப் பெயரை இட்டாலும் அதைப் பற்றிக் கவலை இல்லை. மக்கள் ஒன்று கூடும்போது நமக்கு அழகான சத்சங்கம் கிடைக்கின்றது. இந்த உடல் வணங்கப் பட்டாலும் அல்லது வணங்கப்படவில்லை என்றாலும் யாருக்கு அதில் அக்கறை இருக்கப்போகின்றது?'' பிறந்தநாள் விழாவின் போது நாங்கள் இருபது அல்லது முப்பது பேர்கள் ஒரு பெரிய தட்டைச் சுற்றியும் அமர்ந்து கொண்டு அவருடைய திருவடிகளில் மலர்களைத் தூவுவோம். நாங்கள் பாதபூசை செய்யும்போது அவர் சுற்றிலும் உள்ள யாரையாவது பார்த்து நலம் விசாரித்த வண்ணம் அமர்ந்திருப்பார். பிறந்த நாள் விழாவைக் கொண்டாடவில்லையென்றால் மக்கள் ஆசிரமத்திற்கு வருவார்களா? வரமாட்டார்கள். ஆதலால், அவர்கள் அங்கு வருமாறு செய்ய இது ஒரு வாய்ப்பாகும்.

குருதேவர் தம் வாழ்க்கை வரலாறு பற்றிய நூல்களை வெளியிட வேண்டும் என்பதிலும் மிகுந்த ஆர்வம் கொண்டார். ஒரு பெரிய அரசியல் தலைவரின் துணைவியார் ஒருமுறை ஆசிரமத்திற்கு வந்திருந்தார். வழக்கம்போல் அந்த அம்மையாருக்கு நல்ல வரவேற்பு வழங்கப்பட்டது; நல்வாழ்த்துக்கள் கூறப்பட்டன; பழங்களும், காப்பியும் பரிமாறப்பட்டன. வரும் விருந்தினர் ஒவ்வொருவருக்கும் அங்குள்ள நூல்கள் எவையிருப்பினும் — சிறப்பாகப் புதிதாக

வெளியிடப்பட்டவை — அவை யாவும் சேர்ந்த ஒரு கட்டு வழங்குவதும் சுவாமி சிவானந்தரின் வழக்கமாகும். பல்வேறு மக்களால் எழுதப்பட்ட, குருதேவரின் வாழ்க்கை வரலாற்று நூல்கள் மட்டுமே அச்சமயம் அங்கு இருந்தன. போதனை நூல்களின் ஒரு பகுதியாக வாழ்க்கை வரலாறு இருப்பதுபோல இந்த வாழ்க்கை வரலாற்று நூல்களிலும் ஒவ்வொரு பகுதி போதனைகள் அடங்கியதாக இருந்தன. எனினும் தலைப்புக்கள் யாவும், ''சிவானந்தர்—உலகின் பாது காவலர்'', ''சிவானந்தர் — தெய்வத்தின் அவதாரம்''; ''சத்குரு சிவானந்தர்''; —''ஜகத்குரு சிவானந்தர்''—இவை போல இன்னும் பல அமைந்திருந்தன. அந்த அம்மையார் இந்த நூல்கள் எல்லாவற்றையும் பார்த்தார்; சிறிதும் திருப்தியடையவில்லை. குருதேவரைப் பார்த்து அவர், '' சுவாமிஜி! இந்த நூல்களையெல்லாம் — தற்பெருமை பாடும் இவற்றையெல்லாம் ஏன் உங்கள் சொந்த ஆசிர மத்தில் வெளியிட அனுமதிக்கின்றீர்கள்?'' என்று வினவினார். அந்த அம்மையாரின் முகத்தில் அதிருப்தி நிலவியது. அவருடைய விடையோ சிறிது விநோதமாக இருந்தது; இத்தகை எளிய விடையைச் சொல்ல வேறு யாரும் முன்வர மாட்டார்கள். அந்த அம்மையாரைத் தம் சொந்த மகளைப் போல், தம் சொந்தக் குழந்தையைப்போல் பார்த்து, ''இது தான் உங்களை இங்கே கொண்டு வந்து சேர்த்திருக்கிறது என்று நினைக்கின்றேன்'' என்று அவர் தெரிவித்தார். உள்ள படியே அதுதான் உண்மையாகும். ''மலர், மலரும்போது வண்டுகள் வந்து சுற்றிலும் மொய்கின்றன'' என்று ஒரு பழமொழி உண்டு. ஆனால் நீங்கள் ஒரு வண்டாக இருந்தால் மட்டுமே அது உண்மையாகும். இங்கு சுவாமி சிவானந்தர் என்ற பெயருள்ள ஒருவர் இருக்கின்றார் என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? இதோ இந்த நூல்களால்தான். அம்மை யாருக்கு ஆழ்ந்த கருத்துப் பதிந்தது. பெருமையும் அதிகாரமும் உள்ள இத்தகைய ஒருவர் இந்த அம்மையார் அப்போது பணிவுடன் வணங்கியதுபோல் வணங்கியதை நான் ஒருபோதும் பார்த்ததில்லை; பின்னர் அவர் ஒருபோதும் இன்னொரு வினாவைக் கேட்டதில்லை. குருதேவர் தம்

பெருமைமிகு புன்னகை மட்டும் செய்தார்; தவருக் விளைவைக் கருதவில்லை. இங்கும் கூட அகந்தையும் இருக்க வில்லை; பணிவுடைமை என்னும் அகந்தையும் இருக்கவில்லை.

அகந்தை இருவடிவங்களை எடுத்துக் கொள்ள முயலும். முதலில் குரு இவ்வாறு நினைக்கின்றார் அல்லது பேசுகின்றார்: "நான் எவ்வளவு பெரிய மனிதன் என்று பாருங்கள், எவ்வளவோ பேர்கள் என் வாழ்க்கையைப்பற்றி எழுதி யுள்ளனர்". இரண்டாவதாக, இன்னொரு வகையான அகந்தை இருக்கிறது. "என்னுடைய ஆசிரமத்தில் இத்தகைய பொருளற்ற நிகழ்ச்சி எதுவும் நடக்க நான் அனுமதிக்க மாட்டேன். மக்கள் என்னைப் பெருமைப்படுத்தி பேசுவதை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. என்ன? என்னு டைய படத்தை வெளியிட்டுள்ளனரா? கிழித்தெறியுங்கள்!" குருதேவர் இதை 'மகா அகந்தை' (மிகப்பெரிய அகந்தை) மகாயோகம் எனப்படும் பாணியில், குறிப்பிடுவது வழக்கம். குருதேவரிடம் இவற்றுள் எவ்வகை அகந்தையும் இல்லை. அவரைப்பற்றி நீங்கள் விரும்பியவாறு எழுதலாம்.

மேலும் ஒரு நிகழ்ச்சி; இது எங்களை அதிர்ச்சியடையச் செய்ததோடு இல்லாமல் மிகுந்த கவலையையும் தந்தது. சென்னையிலிருந்த யாரோ ஒருவர் மதிப்புரைக்காகப் பகட்டான தலைப்புக்கள் உள்ள இரண்டு நூல்களை அனுப்பி யிருந்தார். விலைகூட மிகவும் அதிகம்; ஒன்றின் விலை ரூ. 25/-, மற்றொன்றின் விலை ரூ. 40/- அந்தக் காலத்தில் நூல்களின் விலை மிகவும் மலிவாக இருந்தது. எங்களுடைய வெளியீடுகளில் எதுவும் ரூ. 10/-க்குமேல் இருக்கவில்லை. குருதேவர், "தெய்வீக வாழ்க்கை மாத இதழில் அழகான மதிப்புரை எழுதுங்கள்" என்று கூறினார். நூல்களை நான் என் அறைக்கு எடுத்துக்கொண்டு சென்றேன்; ஒரு நூலை அங்கும் இங்குமாகத் திறந்து பார்த்தேன்; நடை எனக்கு மிகவும் பழக்கமானதாக இருந்தது. முழுப் பக்கத்தையும் இதற்குமுன்பு நான் எங்கேயோ படித்திருக்கின்றேன். சுவாமி சிவானந்தரின் நூல்கள் அடங்கிய ஒரு புத்தக

அலமாரி என்னிடம் அங்கு இருந்தது. எனவே 'ஹடயோகம்' என்ற நூலை எடுத்தேன். சொல்லுக்குச் சொல் அப்படியே அந்த நூலில் இருந்தது. சுவாமிஜியின் நூலைப்பார்த்து அது காப்பியடிக்கப்பட்டது. பிறகு புதிதாக வந்த நூலை மீண்டும் பார்த்தேன். தலைப்புப் பக்கத்தின் மறுபக்கத்தில் பெரிய தடித்த எழுத்துக்களில் பின்வருமாறு அச்சிடப்பட்டிருந்தது, ''இந்நூலின் எந்த ஒரு பகுதியையும் மற்றவர்கள் திரும்பவும் வெளியிடுவது தடைசெய்யப் பட்டுள்ளது; ........ உரிமை முழுவதும் ஆசிரியருக்கே'' எனவே அடுத்தநாள் அந்த நூலை எடுத்துக்கொண்டு குரு தேவரிடம் சென்றேன். அவருடைய கணிப்புரை ''என்ன அருமையான, முதல் தரமான தலைப்பை அவர் தந்துள்ளார். அவர் அழகானதாக ஏதோ ஒன்றை வெளியிட்டுள்ளார், எப்படியும், இதுகூட அறிவைப் பரப்பும் ஒரு நல்ல செயலே, அதனால் என்ன, பரவாயில்லை,'' என்பதாம். 'நான்' 'எனது' என்ற உணர்வுகள் முற்றிலும் இல்லாத பொழுது மட்டுமே இப்படிச் செய்யமுடியும்; எனவே அங்கு என் பெயர் உள்ளதா அல்லது உங்கள் பெயர் உள்ளதா என்பது பொருட்படுத்தப்பட வேண்டியது இல்லை. அப்பொழுது தான் ஒருவர் நிச்சயமாகத் துறவு ஆர்வத்தின் அனுபவத்தை நுகரமுடியும்.

மக்கள் ''ஓம் நமோ பகவதே சிவானந்தாய'' அல்லது ''ஜெய ஜெய ஆரதி சிவானந்தா'' என்று உச்சரிக்கத் தொடங்கும்போது அவரும் கூடவே சேர்ந்துகொள்வார். ''இந்தப் பெயரோடும் உருவத்தோடும் ஒன்றென்று என்னை நான் ஏன் கருத வேண்டும்? துறவு பற்றிய ஓர் எண்ணத் தாலோ அல்லது 'இது பயங்கரமாக இருக்கின்றது; ஆகவே இது துறக்கப்படவேண்டும்'' என்ற உணர்வினாலோ, துறவு தோன்றிவிடுவதில்லை. 'இது பயங்கரமானது'' என்று நீங்கள் சொல்லும்போது, சிறிதும் மதிப்பில்லாத அதற்கு நீங்களாகவே ஏதோ ஒரு மதிப்பைத் தந்துவிடுகின்றீர்கள். இந்த உடல் நடமாடும் ஒரு பிணம் மாத்திரமே, அதற்கு மூச்சு உள்ள வரையில் அது நடமாடிக்கொண்டிருக்கும்;

மூச்சு இருக்கவேண்டிய காலம் வரைக்கும் அது மூச்சை விட்டுக்கொண்டும் இருக்கவேண்டியுள்ளது. 'நீங்கள்' இந்த உடலா? 'நீங்கள்' அதனுடன் செய்யவேண்டியது எதுவும் உள்ளதா? உடம்புக்குச் சொந்தமாக உள்ள யாவும் 'உங்களுடையதா?'' நீங்கள் இந்த உடம்பாக இருந்தால் மட்டுமே அவையாவும் உங்களுடையதாக இருக்கும். இந்த எண்ணம் ஒழிக்கப்பட்டால் 'நான்' என்ற உணர்வில்லை; இந்த உடம்பை 'நான்' என்று கருதும் எண்ணம் இல்லை; இந்த உடம்புக்குச் சொந்தமான எதுவும் 'என்னுடையது' என்று கருதும் எண்ணமும் இல்லை.

பிறந்த நாள் விழாவைக் கொண்டாடுவதனுல் இன்னும் பல மக்களை நாம் அணுகமுடியுமென்றால், அதை நடத்துங்கள்; கொண்டாடுங்கள். இந்த வாழ்க்கை வரலாற்று நூல்களை வெளியிடுவதனுல் இன்னும் பல மக்கள் கிளர்ச்சி பெறக் கூடும் என்றால், அவ்வாறே வெளியிடுங்கள். பெயரும் புகழும் பற்றிய வரையில் குருதேவர் பற்றற்றவராக இருந்தார்; ஆனுல் பெயரையும் புகழையும் தவிர்க்கும் அல்லது புறக்கணிக்கின்ற முயற்சியில் அவர் சேவை செய்யும் வாய்ப்பைத் தவிர்க்கவில்லை. சேவை செய்யும் களத்தின் எல்லையை விரிவாக்க பெயரும் புகழும் பயன்படுமானுல், மனித சமுதாயத்தின் பெரும் பகுதிக்குச் சேவை செய்ய முடிந்தால், மகுடத்தின் மீது இன்னும் ஒரு வெற்றிமுத்து பதிக்கப்படும் வகையில், மேலும் மக்கள் பலர் தெய்வீகப் பாதைக்கு வருமாறு கவரப்படுவார்களாயின், குருதேவர் அதை வரவேற்பார். களம் எந்த அளவு அகலமாக இருக்கின்றதோ அந்த அளவுக்குச் சேவை ஆழமாக அமையும்; ஆருயிர்கள் அனைத்தின் நலத்திற்காக அமைந்த அவருடைய ஈடுபடும் மனப்பான்மை இன்னும் ஆழமாக அமையும்.

அகந்தையைத் துறக்காத உணர்விலிருந்து தோன்றுவதே மக்கள் குறை கூறுவார்களோ என்ற அச்சம்; இந்த அச்சத்தினுல் இவ்வகையாகச் செய்யும் முயற்சிகள் நின்று

விடுகின்றன. மக்கள் குறை கூறுவார்கள் என்று நீங்கள் ஏன் அஞ்ச வேண்டும்? ஏனெனில் தாக்கப்படக் கூடாது என்று நீங்கள் விரும்புகின்றீர்கள்; அந்த அளவுக்குத் தற்பெருமை மிகுதியாக, உங்களுக்கு இருக்கின்றது. அதையும் நீங்கள் துறக்க வேண்டும். 'நான்' என்ற இச்சிறுமையைக் கொல்லுங்கள் என்று இத்துறவு ஆர்வம் கூறுகின்றது. அப்போது பணிவுடைமை தோன்றுகின்றது; அதே நேரத்தில் அது அனைவருள்ளும் இறைவனைக் காணும் காட்சிக்கு அழைத்துச் செல்லுகின்றது.

## பிரத்தியாகாரம்
## (புலன்களை உள்முகமாகத் திருப்புதல்)

குருதேவர், யோகாசனங்களையும், பிராணாயாமத்தையும் பயிற்சி செய்வதில் எப்படி எல்லை மீறிய ஒழுங்குள்ளவராக இருந்தார் என்பதை ஏற்கனவே பார்த்திருக்கின்றோம். பிரத்தியாகாரத்தைப் பற்றிப்போதிக்கவும், நமக்குச் செய்துகாட்டவும் அவர் சுவையான சிலவற்றை வைத்திருந்தார். ''பிரத்தியாகார யுத்தகளம்'' என்று அவரே அதற்குப் பெயரிட்டார். நாள்தோறும் நம்மைச் சுற்றியும் பூசலும் சந்தைப்பேச்சும், சத்தமும் சச்சரவும், தொந்தரவும் கவனத்தைக் கவரும் நிகழ்ச்சிகளும் வட்டமிட அவற்றுக்கு நடுவே இருக்கும் நீங்கள் குறிப்பிட்ட ஓர் எண்ணத்தின் மீது அல்லது அந்தக் கணத்தில் கைவேலையாக இருக்கும் பணியின் மீது மனத்தை ஒருமுகப்படுத்த வல்லவராக இருக்கவேண்டும். குருதேவர் செய்தது இதுவே. வருகைதரும் சாதகர்கள் அலுவலகத்தில் குருதேவரின் அருகில் அமர்ந்திருப்பார்கள்; எல்லா நாடுகளையும், பல்வேறு குண நலன்களையும் உடைய ஆண்களும் பெண்களும் புடைசூழ்ந்திருக்கவும், அரை டஜன் தட்டச்சுப் பொறிகள் 'தட், தட்' என்று சத்தமிடவும் அங்கிருந்து குருதேவர் எப்படி எல்லா வகையான முக்கியமான பணிகளை நிறைவேற்றுகின்றார் என்று பார்த்து அவர்கள் பெரும் ஆச்சரியமடைவார்கள். மக்கள் பலரும் வந்துகொண்டும்,

போய்க்கொண்டும்; ஓடிக்கொண்டும், சத்தமிட்டுக் கொண்டும் இருக்கின்ற, ஆசிரமத்தின் பணி நெருக்கடி மிகுந்த மையத்தில் இருந்துகொண்டு, தனியே ஒரு குகையில் இருந்தால் எப்படி முழுக்கவனத்தையும் செலுத்துவாரோ அதுபோலக் குருதேவர், மிகுந்த, கூர்மையான, கவனத்தைச் செலுத்தி வந்தார். இதற்குரிய கலைநுட்பத் திறன் ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. கண்களை மூடிக் கொண்டு, மானசீகமாக இறைவனுடைய திருப்பெயரை சில நிமிடங்கட்கு ஒரு முறையாக உச்சரித்துக்கொண்டே இருங்கள்; புறம்பே உள்ள பொருள்களிலிருந்து மனத்தை உள்ளே இழுத்துக்கொள்ள இவ்வாறு கற்றுக்கொள்ளுங்கள்.

## தியானம்

குருதேவருக்குத் தியானத்தின் மீது இருந்த எல்லைமீறிய பிரியத்தைச் சுவர்க்க ஆசிரமத் துறவிகள் நினைவு கூர்ந்து உரைத்தார்கள்; தன்னலமற்ற பணிவிடையில் மிகுந்த அன்பு கொண்டிருந்தும்கூடக் குருதேவர் அடிக்கடி கங்கைக்கரையில் உள்ள ஏதேனும் ஒரு பாறைக்கடியில் மறைந்து கொண்டு பல மணிநேரங்களுக்கு அவர் காணுமற்போய்விடுவார். சில சமயங்களில் அருகில் உள்ள காட்டுக்குச் சென்று மறைந்து கொள்வார்; சில நாட்கள் வரையில் தனித்தே இருப்பார்; பிறகு தாம் மறைந்ததுபோலவே மர்மமான முறையில் திடீரென்று அவர்களுக்கு நடுவே மீண்டும் தோற்றம் தருவார். அவருடைய சொந்த நாட்குறிப்பில் கூடச் சில குறிப்புக்கள் உள்ளன. அவை, ''நான் இன்னும் அதிகமாகத் தியானம் செய்யவேண்டும். தொடர்ந்து பதினறு மணிநேரம் ஒரே தடவையில் செய்யவேண்டும்'' என்பது போன்று இருக்கும். தியானப் பயிற்சியில் குருதேவர் மிகவும் ஒழுங்காக இருந்தார். அதிகாலைக்கு முன்பும், இரவில் உறங்கக் செல்வதற்கு முன்பும், தியானம் அவருக்கு மிகவும் அத்தியாவசியம் ஆன ஒன்றாகும். ஆன்மீகக் கூட்டங்கள் அனைத்தும், இறைவனுடைய திருநாமத்தைப் பாடும் பஜனை நிகழ்ச்சிகளும் மாறுபாடின்றி எப்போதும்

இரண்டு நிமிடம் நிகழும் மௌனமான தியானத்துடன் முடியும், இவற்றுடன் கூட, அவ்வப்போது. குருதேவர் தனியே சென்று ஆழ்ந்த தியானத்தில் மூழ்கிவிடுவார்.

எங்களில் பலரும் மிகவும் இளைஞர்களாக இருந்தபோது, சுவாமி சிவானந்தரின் பேனா முனையில் உருவாகிய சுருக்கமான ஓர் அறிக்கை எங்களை மிகவும் கவர்ச்சிகரமாகக் கவர்ந்தது; அதன் பெயர், ''ஆறு மாதத்தில் சமாதி'' என்பதாகும். ஆறு மாதங்களில் சமாதி நிலையை அடைவதற்காக, மக்கள் ஆசிரமத்திற்கு வந்தபோது. அவர், ''அது மிகவும் சுலபம். பத்மாசனத்தில் அமருங்கள் உங்கள் கவனத்தையெல்லாம் இந்த மந்திரத்தின் மீது செலுத்துங்கள்; வேறு எதைப்பற்றியும் நினைக்காதீர்கள்,'' என்று தெரிவித்தார். நீங்கள் இவ்வாறு செய்யமுடிந்தால் ஆறு நிமிடங்கள்கூட ஆகாது. ஆறு மாதங்களில் நீங்கள் சமாதியடையலாம்; சிறிதும் சந்தேகமில்லை; நீங்கள் உங்கள் முழுக்கவனத்தையும் ஒரு மந்திரத்தின் மீது செலுத்தவும், நினைப்பை நிறுத்தவும் வல்லவராக இருக்கவேண்டும், பின்னர் குருதேவர், ''இதை உங்களால் செய்யமுடியவில்லை என்றால், நீங்கள் ஏதேனும் சேவை செய்யலாம்; ஒருசில ஆண்டுகளில், சமாதியை அடைவதற்கான எதையேனும் உங்களால் செய்யமுடியும்'' என்று கூறுவார்.

நீங்கள் அவரிடம் சென்று, ''சுவாமிஜி! நீங்கள் எனக்கு தியானத்தைக் கற்பிக்க முடியுமா?'' என்று வினவினால், அவர் என்ன கூறுவார்? ''இறைவனுடைய திருநாமத்தை உச்சரியுங்கள்'' என்பார். ஆனால் அவர் அத்துடன் நிறுத்த மாட்டார்; மனத்தில் உள்ள சரக்கு முழுவதும் மந்திரத்தில் கரைந்து விடவேண்டும். அல்லது இதற்கு நேர்மாறாக, மனம் முழுவதும் மந்திரத்தில் கலந்து விடவேண்டும் என்று கட்டளை இடுவார். அதை ஒருவர் எப்படிச் செய்யமுடியும்? மனத்தில் உள்ள சரக்கைப் பற்றி நமக்கு என்ன தெரியும்? மந்திரத்தில் மனத்தைக் கரைப்பது என்பது என்ன? மனம் பிறவற்றில் செல்லாதபோது, மந்திரத்தை உச்சரிப்பதாகிய,

சுவாமி சிவானந்தரின் வழியை நீங்கள் பின்பற்றினாலும் கூட, மனம், மந்திரத்தில் விரைவில், கரைந்து விடும்.

மந்திரத்தில் மனத்தைக் கலப்பது என்பது என்ன? அல்லது இறைவனைப்பற்றிய மெய்யுணர்வில் மனத்தை முழுவதும் கரைப்பது என்பதன் பொருள் யாது? இதன் விளக்கம் யாது? ஒருவர் இதை எப்படி அடைகின்றார்? இது தான் தியானம் என்று சொல்லப்படுகிறது. தியானத்தைச் சொல்லித்தர இயலாது. குருதேவர் கூடத், தியானத்தைப் பற்றிக் கற்பிக்க முயலவில்லை; எனினும், மற்றவர்களைப் போல அல்லாமல், தியானத்தைப் பற்றிக் கற்பித்தலாகிய கொள்கையிலிருந்தோ, அந்தச் சொல்லைக் கேட்பதிலிருந் தோ நாணி விலகியதில்லை. அவர் ஒரு கலை நுட்பத்தை, ஒரு வழியைத் தெரிவித்து, "ஆனால், மிக விழிப்பாக இருங்கள். இதுவே முழுமைப் பாடம் அன்று" என்று கூறுவார். நீங்கள் அவருடைய நூலாகிய, "மன ஒருமைப் பாடும், தியானமும்" என்ற நூலை எடுத்துப் பார்த்தீர் களாயின், அங்கே கலை நுட்பங்களும், வழிகளும் டஜன் கணக்கில் தரப்பட்டுள்ளன; அத்துடன் மற்ற செய்திகளும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. சான்றாக, மனோ சக்தி யையும் ஞாபக சக்தியையும் வளர்த்துக் கொள்வதற்கான பயிற்சிகள். இவை எல்லா வழிகளினுடைய குறிக்கோளும் மனத்தைப் பண்படுத்தப் பயில்வதேயாகும்.

நீங்கள் தியானம் செய்யப் பழகும்போது, முழுமையாக, மனத்தின் சரக்கு முழுவதும், முழுக்கவனமும் ஒன்றின்மீது அது எதுவாக இருப்பினும், பாய்ந்து கொண்டிருக்க முடியுமா? முடிந்தால், அதுவே மன ஒருமைப்பாடு; அதன் பின்னர் நிகழ்வது, தியானம். தியானம் என்பது விளக்கிச் சொல்ல முடியாத உள்முக அனுபவம் அல்லது ஆன்மாவைக் கண்டு கொள்வதாகும். நாங்கள் குருதேவரிடம், "தியானம் என்றால் என்ன?" என்று வினவியபோது, அவர், "அது தைல தாரைபோல, உள்ளத்தில் இறையுணர்வின்மீது இடையறாது தொடர்ந்து ஓடும் வெள்ளமாகும்" என்று கூறினார்.

முப்பது வயது உடைய இளைஞர் ஒருவர் தென்னிந்தியாவிலிருந்து எங்களுடன் தங்குவதற்காக வந்தார்; தம்முடைய நேரத்தின் பெரும் பகுதியையும் அவர் தியானத்திலேயே செலவழித்தார்; ஒவ்வொரு நாள் காலையிலும் குறைந்தது 4 மணியிலிருந்து 7 மணி வரையிலும், கங்கையாற்றின் கரையில் உள்ள ஒரு பாறையின்மீது அவர் சிறிதும் அசையாமல் ஆணித்தரமாக, நிமிர்ந்து அமர்ந்திருப்பதைக் காணலாம், நாள்தோறும் எங்களுக்கு வகுப்பு காலையில் 6-30 மணிக்கு முடியும். ஆனால் ஒரு நாள் காலையில் 7 மணி வரைக்கும் குருதேவர் பேசிக் கொண்டிருந்தார்; உணவு உண்ணும் மண்டபத்தில் நாங்கள் அமர்ந்திருந்த இடத்திற்கு இம்மனிதர் வந்தார்; குருதேவரை மிகவும் பக்தியுடன் அணுகினர்.

குருதேவர் அவரிடம் திரும்பி, ''ஓம் நமச்சிவாய! நீங்கள் தியானம் செய்து கொண்டிருந்தீர்களா?''

''ஆம், சுவாமிஜி!'' குருதேவர் தம்மைப் பாராட்டுவதாக அவர் நினைத்தார்.

''ஆ! நீங்கள் ஒழுங்காகச் செய்கிறீர்களா?''

''ஆம், சுவாமிஜி!'' குருதேவர் உற்சாகமடைந்தவர் போல் காணப்பட்டார்.

குருதேவருடைய கருணையைப் பெறவில்லையென்றாலும், குறைந்தது, அவருடைய பாராட்டைப் பெற்றுவிட்டதாக இம்மனிதர் நினைத்தார்.

சுவாமிஜி அவரை மீண்டும் கேட்டார்.

''நீங்கள் தியானத்தில் எவ்வளவு நேரம் அமர்ந்திருந்தீர்கள்?''

நான் நான்கு மணிக்குச் சென்று அமர்கின்றேன்; ஏழு மணிக்குத்தான் எழுந்திருக்கின்றேன்''.

''மூன்று மணி நேரமா?''

''ஆம், சுவாமிஜி! கோடைக்காலமாக இருந்தாலும், குளிர் காலமாக இருந்தாலும், வசந்த காலமாக இருந் தாலும் அல்லது இலையுதிர்காலமாக இருந்தாலும், பனி பெய்தாலும், ஆலங்கட்டி பெய்தாலும் எது நிகழ்ந்தாலும், 4 மணியிலிருந்து 7 மணி வரையில் நான் அமர்ந்திருக் கின்றேன்'',

ஆ! அது மிகவும் நல்லது. நீங்கள் ஆழ்ந்த தியானத் தை அனுபவிக்கின்றீர்களா?'' வழக்கம்போலக் குருதேவர்; இரு கண்களையும் மூடிப் பிறகு ஒரு கண்ணைத் திறந்தார். அதற்கு மிகவும் முக்கியமான அர்த்தம் உண்டு; அதை நாங்கள் அறிந்திருந்தோம்- குருதேவர் தொடர்ந்து, ''ஆழ்ந்த தியானம், சமாதி'' என்று வினவினார்.

''ஆம்! சுவாமிஜி!'' குருதேவர் தம்மைப் புகழ்வதாகவே இம்மனிதர் இன்னும் நினைத்துக் கொண்டிருந்தார். ஆனால் குருதேவர், ''நல்லது, மிகவும் விழிப்பாக இருங்கள். இல்லை யென்றால் நீங்கள் கங்கையில் விழுந்து முழுகிவிடுவீர்கள்'' என்றார். இவர் சிறிது குழப்பமடைந்தார்; குருதேவர் கூடவே, ''பேரின்ப நிலையில் மிக விரைவில் நுழையும் வழி உங்களுக்குத் தெரியுமா? நான் உங்களுக்குச் சொல்லுகின்றேன். எருமைப் பாலில் உறைய வைத்த தயிரையும், சிறிது பழைய சாதத்தையும் சாப்பிடுங்கள். நல்ல மிருதுவான தலையணைகள் உள்ள அழகான படுக்கையில் கால் நீட்டிப் படுத்துக் கொள்ளுங்கள். கொஞ்சம் உரத்த ஒலியுடன் கூடிய ஆழ்ந்த மூச்சை விடுங்கள். உடம்பைத் தளர்த்திக் கொள்ளுங்கள். நீங்கள் உடனே பேரின்ப நிலையில் உறக்கத் தில் நுழைவீர்கள். தியானம் என்றால் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா? தியானம் என்பது இறைவனைத் தொடுதல்; பிரம்மத்தைத் தொடுதல்; எல்லாம் வல்ல இறைவனுடன் தொடர்பு கொண்டு உரையாடுதல், எங்கும் வியாபித்துள்ள, எல்லையற்ற இறைவனைத் தொடுவதாகும், என்று கூறி குருதேவர் இரண்டு கண்களையும் திறந்தார்.

ஆனால் நீங்கள் தூக்கத்தில், தூக்க மயக்கத்தில் இருக்கிறீர்கள். எல்லையற்ற அந்தப் பேருணர்வை நீங்கள் தீண்டினால், இந்த உலகத்தையே நீங்கள் மாற்றிவிடலாம். அற்புதங்களைச் செய்யலாம்; இந்த அகில லோகத்தையும் நீங்கள் கையில் எடுத்துக்கொள்ளலாம்; வியாபித்துள்ள முழு இடத்தையும் ஒரு துண்டுத் தோலைப் போலச் சுருட்டி விடலாம்; இத்தகைய சக்தியை, ஆற்றலை நீங்கள் பெறுவீர்கள். இங்கே நீங்கள், சோர்வுடன் தூக்கக் கலக்கத்துடன் தியானத்திலிருந்து வெளியே வருகின்றீர்கள். ஆ! என்ன இது? என்றார். (ஒரு வேளை, நீங்கள் குழந்தைகள் தம் பாவனையை மாற்றிக்கொள்வதைப் பார்த்திருப்பீர்கள். அந்த ஐந்து நிமிடங்கள் வரையில் அதுபோல்தான் இருந்தது. ஒருகனம் அவர் இகழ்வார், நகையாடுவார், ஒருகனம் குறுக்கு விசாரணை செய்வார், சினம் கொள்வார். கெடுபிடியாகவும் கடுமையாகவும் இருப்பார். உடனே மறுகனம் அவர் மிக உயர்ந்த அன்பையும் கருணையையும் பொழிவார்).

''ஓ ஜி, உங்கள் நேரத்தை வீணாக்க வேண்டாம். கற்பாறையின் மீது ஒரு கல்லைப்போல உட்கார்ந்திருப்பது, காலத்தை வீணாக்குவதாகும். அதைத் தவிர்த்துவிடுங்கள். அங்கே அமர்ந்திருந்து சிறிது நேரம் ஜெபம் செய்யுங்கள். அரைமணிநேரம் அல்லது ஒரு மணி நேரம் போதும். எஞ்சிய நேரத்தில் பயனுள்ள பணி எதையாவது செய்யுங்கள். இரண்டு வாளிகளை எடுத்துக்கொள்ளுங்கள். தண்ணீரை மொண்டுவந்து சமையலறையில் உள்ள தண்ணீர்த் தொட்டிகளை நிரப்புங்கள். (அந்த நாட்களில் குழாய் வசதி இல்லை. ஆதலால் நாங்களே ஆற்றிலிருந்து சமையலுக்கு வேண்டிய தண்ணீரைச் சுமந்து கொண்டுவர வேண்டியிருந்தது.) அப்போது சமாதி என்பதன் பொருள் உங்களுக்கும் புரியும்''.

''சுறுசுறுப்பாக இருங்கள். சேவை செய்யுங்கள், உங்களின் சோம்பல் விலகிவிடும். அப்போது தூய்மையின்

பொருள் உங்களுக்குப் புரியும். உங்கள் உள்ளம் தூய்மை யாக இருந்தால்தான் உங்களால் தியானம் செய்யமுடியும். ''குருதேவர் சுவர்க்க ஆசிரமத்தில் இருந்த நாட்களில் ஆற்றல் மிகுந்த தன்னலமற்ற சேவையும் முற்றிலும் தனித் திருந்து தியானம் செய்வதுடன் ஏன் இணைத்தார் என்பதை இப்போது நம்மால் புரிந்துகொள்ள முடிகின்றது. ஒன்று மற்றொன்றின் அக்கினிப் பரீட்சையாக இருக்கின்றது. சேவையில் தன்னலமில்லாத தன்மை ஆழ்ந்த தியானத்தின் உரைகல்லாக அமைகின்றது. இயல்பான, எளிமையான, தானாக கைகூடும் தியானம், நல்ல நோக்கத்துடன் செய்யப் படும் உண்மையான சேவைக்கு உரைகல்லாக அமை கின்றது. குருதேவர், ஒவ்வொருவரையும் பயிலுமாறு சொன்னது இதுவே.

நூல்களில் சொல்லப்பட்டுள்ள கலை நுட்பங்களில் எதை யேனும் தேர்ந்தெடுத்துக் குருட்டுத்தனமாக அதை நீங்கள் பின்பற்றத் தொடங்கினால் உறக்கத்திற்கும் சமாதிக்கும் இடையே உள்ள வேறுபாட்டை உங்களால் புரிந்துகொள்ள முடியாமல் போகலாம். நீங்கள் உங்கள் சுவாசத்தைக் கண் காணிக்கலாம். அதன் ஒலியையும் நீங்கள் கேட்கலாம். கொள்கை ஒன்றே எனினும் குருதேவர் ஏதோ ஒரு சிறிய வேறுபாட்டைத் தெரிவித்திருந்தார். சுவாசத்தின் ஒலியைக் கேட்பதற்கு பதிலாக சுவாசத்துடன் இணைத்து இறைவனை நினைக்கலாம். மந்திரத்தை உச்சரிக்கலாம். மந்திரத்தை நீங்கள் மானசீகமாக உச்சரித்துக்கொண்டே இருந்தால் முழு அளவில் மனத்தை ஒரு முகப்படுத்தினால் உங்களின் எல்லாக் கவனத்தையும் குவியச் செய்தால், அந்த ஒரே இடத்தின் மீதி உங்கள் மனத்தின் எண்ணக் கதிர்களை யெல்லாம் ஒன்றாக்கி குவியச் செய்தால் அது உங்களைத் தியானத்திற்கும் சமாதிக்கும் அழைத்துச் செல்லும்.

## சித்திகள் (நிறைநிலை அல்லது மனோசக்திகள்)

யோகத்தின் உன்னதமான வெகுமதியாகிய, இறைவனைப் பற்றிய மெய்யுணர்வை அடைவதைக் காட்டிலும் இந்த

உலகத்தில் மிகப்பெரிய சாதனை ஏது? குருதேவர் தம்முடைய மெய்யுணர்வைத் தாமே பறைசாற்றிக்கொள்ளவும் இல்லை. தம்முடைய அற்புதமான தெய்வதரிசனத்தைப் பற்றித் தாமே பாராட்டை பரப்பவும் இல்லை. தமக்கும் மற்ற மக்களுக்கும், உலகில் உள்ள ஏனையோருக்கும், பொருந்துமாறு அவர் அனுசரித்த தத்துவம் ''இறைவனை அவனுடைய பணிகளைக் கொண்டு அறிக'' என்பதாம். கைரேகை நிபுணர்களும், மனோ சக்திகளில் வல்லவர்களும், தொலைவில் உணரும் ஆற்றல் வாய்ந்தவர்களும் எங்கும் நிறைந்துள்ள இறையுணர்வில் குருதேவர் நிரந்தரமாக நிலைப்பதற்கு முன்பேயே தெய்வ தரிசனத்தை நேருக்குநேர் அவர் குறைந்தது நிச்சயம் மூன்று தடவைகள் பெற்றார் என்றும், அவர் மலேயாவை விட்டுத் துறவு பூணுவதற்கு முன்பே கூட முதல் தரிசனத்தைப் பெற்றார் என்றும் எங்களிடம் உறுதியாகத் தெரிவித்துள்ளனர்.

எனினும் நாங்கள் கவனித்ததெல்லாம், எங்களுக்காக அவர் என்ன செய்யக்கூடும் என்பதையும், மனித சமுதாயத்திற்கு அவரால் செய்யக் கூடிய உதவியின் மிக உயர்ந்த வகை யாது என்பதையும் மட்டுமே. தாம் கண்டது வெறும் கானல்நீர் என்ற கற்பனை தவிர வேறு ஏதும் இல்லாத மக்கள் பலர், தாங்கள் இறைவனை தரிசனம் செய்ததாகக் கூறிக்கொண்டு தெருக்களில் அணிவகுத்துச் சென்றனர். அவர்களால் மனித சமுதாயம் வஞ்சிக்கப்படுகிறதே தவிரக் காப்பாற்றப்படவில்லை. மனித சமுதாயம் தன் பாது காவலரை குருதேவரின் உருவத்தில் கண்டது.

அற்புதங்களையும் மனோசக்திகளையும் மிகப்பெரிய தடைகள் என்று குருதேவர் கருதினார்; அவற்றுக்கு எதிராக ஆன்மீகச் சாதகரை அவர் எச்சரித்தார். மிக உயர்ந்த வகையைச் சேர்ந்த அற்புத சக்திகள் ஐயத்திற்கு இடமின்றி அவருக்குச் சொந்தமாக இருப்பினும், வெளிப்படையாக அவர், அவை தம்பால் உள்ளன என்று ஒத்துக்கொள்ள

வில்லை; அவருடைய கவனத்திற்கு அவற்றைக் கொண்டு வந்தபோது அவையெல்லாம் தமக்குச் சொந்தம் அல்ல என்று மறுத்தார்; அவர் ''இறைவனே இந்த அற்புதங்களைச் செய்கின்றார்; நாள்தோறும் பெரும் பெரும் எண்ணிக்கையுள்ள மக்கள் நம்பிக்கை கொள்வதற்காக இவை நிகழ்கின்றன'' என்று கூறுவார். மனோ சக்திகளை அவர் விரும்பியதில்லை; அவற்றை நாடிச் செல்லுமாறு ஆத்மீக சாதகரை அவர் ஒருபோதும் ஊக்குவித்ததும் இல்லை.

யாரேனும் ஒருவர், ''சுவாமிஜி! தாங்கள் என் கனவில் வந்து என் வயிற்றின் மீது தங்கள் கையை வைத்தீர்கள்; என் புற்றுநோய் குணமாகிவிட்டது'' என்று கூறினால், அவர் ''ஆ! அதெல்லாம் கடவுளின் கருணை'' என்று சொல்லுவார். தாம் செய்ததாக அவர் ஒருபோதும் ஒத்துக் கொண்டதில்லை. மக்கள் அவரிடம் வந்து. ''தங்களின் திருக்காட்சி எனக்கு வாய்த்தது; உடனே என் உயிர் காப்பாற்றப்பட்டது'' என்று கூறினால், அவர், ஆம்! பகவான் (இறைவன்) இதையெல்லாம் செய்கின்றார்'' என்று கூறுவார். நாம் கருதுவதுபோலத் தவறு ஏதும் நடந்தால் ஒரு வேளை ஆசிரமத்தில் யாரேனும் திருடினால், ஆசிரமத்திற்குத் துன்பம் நேர்ந்தால். அல்லது யாரேனும் தீங்கிழைத்தால், அப்போதும் அவர் ''இதையெல்லாம் செய்பவர் இறைவனே!'' என்று தெரிவிப்பார்.

மலேயாவில் இது நடைபெற்றது. தாந்திரிக யோகி ஒருவர் குருதேவரை (அப்போது அவர் இன்னும் டாக்டர் குப்புசாமியாக இருந்தார்) அணுகி, அனுமாரின் உதவியால் அற்புதங்களை நிகழ்த்தும் வல்லமை பெறுவதற்கான ஓர் மந்திரத்தைக் கற்றுத் தருவதாக உறுதியளித்தார். மந்திரத்தை உச்சரிக்கும் கருத்தைக் குருதேவர் மிகவும் விரும்பினார் என்றும், ஆனால் தம் வினாக்களுக்கு விடை தருமாறு அனுமாரை வரவழைக்க விரும்பவில்லை என்றும் தெரிகின்றது. ''கடவுளை நாம் வணங்க வேண்டும்; நன்கு மதிக்க வேண்டும்; நமக்குச் சேவை செய்யுமாறு அவர்களைச்

செய்யக்கூடாது'' என்று கூறி அவர் அந்த யோகிக்குச் சிறிய தொகை ஒன்றைத் தந்து அனுப்பிவிட்டார்.

தாம் ஏதேனும் அற்புதத்தைச் செய்வதாகக் குருதேவருக்கு உண்மையாகவே உணர்வு இருக்கவில்லை. நீங்கள் அவரைச் சந்திக்கும் போது உங்களின் உள் ஆளுமை, இந்தக் காகிதம் உங்களின் கண்களுக்குத் தெரிவதுபோல், அவ்வளவு தெளிவாக அவருக்கு வெளிப்படையாகத் தெரியும், தனிச் சக்தி எதையும் அவர் செலுத்த வேண்டிய தில்லை. உங்கள் இதயமும் மனதும் அவருக்குத் திறந்து வைக்கப்பட்டுள்ள புத்தகமாக இருக்கும்; நீங்கள் நினைக்கும் எண்ணம் அவருக்கும் ஏற்படும்; உங்கள் இதயத்தில் தோன்றும் விருப்பமும் அவருக்கு மிக எளிதில் புரியும்; அவற்றை அவர் காணவும் கேட்கவும் முடியும். அவை யெல்லாம் ஒருங்கே தற்செயலாக ஒன்றாக நிகழ்ந்து ''நானும் அவ்வாறே நினைத்தேன்'' என்று அவர் கூறுவார்; அல்லது நீங்கள் மானசீகமாகச் செய்த பிரார்த்தனையைப் பற்றி, ''இப்படிச் செய்வீர்கள் என்று நான் நினைத்தேன்'' என்று அவர் வெறும் குறிப்பாக கூறுவார்; உங்களுக்குத் தான் அது ஆச்சரியமாக இருக்கும்; அவருக்கு அல்ல; அவருக்கு அது இயல்பாக இருக்கும்.

ஆசிரமத்தில் குருதேவர் நடத்திய பிரார்த்தனைகளால் அற்புதமான நிகழ்ச்சிகள் உண்டாயின. நம்பிக்கையுள்ள மக்கள் குருதேவரிடம் தங்கள் மனத்தைத் திறந்து பேசிய தாலும், அவரிடம் மனதாரப் பிரார்த்தனை செய்தமை யாலும், பக்தியுடன் அவருக்குச் சேவை செய்தமையாலும் தங்கள் விருப்பத்திற்குரிய பயன்களை அடைந்தனர். ''சிவானந்தரின் அற்புதங்கள்'' என்ற நூலில் இத்தகைய அனுபவங்கள் பலவும் வெளியிடப்பட்டுள்ளன. இது போலவே, அயல் நாடுகளில் உள்ள பக்தர்களாலும் குரு தேவரின் அற்புதங்கள் பலருக்கும் அறிவிக்கப்பட்டுள்ளன. அவையாவும் உண்மையே; அவர்கள் அவரைச் கண்ணாரக் கண்டுள்ளனர்; அவர் பேச்சைக் காதாரக் கேட்டுள்ளனர்.

குருதேவர் தம்மிடம் அன்பு கொண்டுள்ள பக்தர்கள் பலரையும், அவர்களுக்கு நூல்கள் அனுப்புவதற்காகவும், பதில் கடிதங்களை அனுப்புவதற்காகவும் அவர்களைப் பற்றி அடிக்கடி நினைத்து வந்தார். காட்சித்திறம் வாய்ந்த மனோ சக்திகள் வாய்ந்த உன்னதமான உள்ளத்தை அவர் படைத்திருந்தார்; எனவே அவர் எண்ணும் எண்ணம், குருவுக்கும் சீடருக்கும் இடையே மனத்தொடர்பை உடனே ஏற்படுத்தி விடும். இதன் வாயிலாகச் சீடர்களின் தேவைகளைப்புரிந்து கொண்டு, மிகவும் சக்தி வாய்ந்த குருதேவரின் உள்ளுணர்வு ஒரு முகப்படுத்திய ஒளியுடன் பாய்ந்து அற்புதமான காட்சிகளையும் செய்திகளையும் தந்தது. நாம் எண்ணும்மேலே நடைபெறும் ஏதோ ஒரு வகையான செயல் அது; குருதேவருக்கு அச்செயல் இயற்கையாகவும் இயல்பாகவும் நிகழ்ந்தது.

அவரிடத்திலிருந்து தொலைதூரத்தில் வாழும் மக்கள் எவ்வாறு கவர்ந்து இழுக்கப்பட்டார்கள் என்பதையும், அவருடைய காட்சியை எவ்வாறு பெற்றார்கள் என்பதையும் இப்போது புரிந்து கொள்வது எளிதாக இருக்கின்றது. அவர்களுக்கு அவருடைய சேவை தேவைப்பட்டது; எல்லா உடம்புகளும் ஒரு விராட்சொருபத்துக்கு (எங்கும் வியாபித்துள்ள உருவம்) உரியன என்றும், எல்லா மனங்களும் ஒரு ஹிரண்ய கர்ப்பருக்கு (எங்கும் வியாபித்துள்ள மனம்) உரியன என்றும் அமைந்த அடிப்படைத் தத்துவத்தைத் தழுவி குருதேவரும் அவர்களுக்குச் சேவை செய்ய மிகவும் ஆர்வத்துடன் இருந்தார். இந்த மனப்பான்மை அவருக்கு அனுபவமாக (இறையுணர்வை நேரடியாக உணர்வதாக) இருந்தது.

மற்ற துறவிகளின் உணர்ச்சி மிக்க உரைகளைக் கேட்டால் அடையும் திருப்தியைவிட மிகப்பெரும் திருப்தியை, அவருடைய வாய்மொழிச் செய்தியைப் பெறாதவர்களும், அவருடைய உரைகளை அல்லது பாடல்களைக் கேட்காதவர்களும்கூட, அவருடைய திருக்காட்சியை மட்டும் பெற்ற மக்கள் எப்படி அடைந்தார்கள் என்பதைப் புரிந்து

கொள்வதும், அதுபோலவே எளிதாக உள்ளது. அனைவருடைய துன்பங்களையும் நீக்கவேண்டும் என்றும், அனைவருக்கும் சேவை செய்யவேண்டும் என்றும் கொண்டிருந்த நிலையான ஆர்வத்தினாலும், மனித சமுதாயத்தின் நலத்தின் பொருட்டு எந்நேரமும் நிகழ்த்தும் மிகப் பெரிய பிரார்த்தனையாக இந்த ஆர்வமே இருப்பதனாலும் குருதேவர் அனைவருடைய உள்ளங்களையும் கொள்ளை கொண்டார். உன்னதமான மகிழ்ச்சி, அமைதி, வாழ்க்கை, ஒளி ஆகியவற்றைத் தொடர்ந்து நிலையாகப் பரப்பியவாறு அவர் முழு மனித சமுதாயத்துடன் ஒன்றானார். ஆதலால் அவருடைய முன்னிலையில் இருந்தால்கூட மக்கள், நலம்தரும் அதிர்வுகளையும், அமைதி தரும் ஒலியின் வெளிப்பாடுகளையும் அனுபவித்தார்கள். அவருடைய பார்வைகூட அதுபடும் இடத்தில் உள்ள ஒவ்வொரு பொருளையும் உயர்த்தியது; நல்ல மாற்றத்தை அடையச்செய்தது; மேன்மை பெறச் செய்தது. அவரைச் சுற்றிலும் தெய்வீகத் தன்மை நறுமணம் பரப்பியது; குருதேவருடைய கருணை ஒளி ஊடுருவிச் செல்லும் உள்ளத்திலிருந்து நாத்திக இருளும், லோகாயத தன்மைகளும், தெய்வ விரோத இயல்புகளும் மறைந்தன. குருதேவருடைய முகத்திற்கு இத்தகைய ஒளியையும், அவருடைய கண்களுக்கு இத்தகைய சக்தியையும், அவருடைய முழு ஆளுமைக்கும் இத்தகைய, எதிர்க்க முடியாத காந்த சக்தியையும் தியானம் தந்தது; நூற்றுக் கணக்கான குறைகளைத் தெரிவிக்கலாம் என்று கருதி அவரை அணுகும் மக்களை மௌனமடையச் செய்தது அவருடைய பிரபை; அவருடைய முன்னிலையில் இருந்தால்கூடப் பகைமை தூர ஓடிவிடும். குருதேவரின் பக்தர்கள் சிலர் இந்தப் பிரபையை உண்மையாகவே பார்த்துள்ளனர்.

குருதேவர் தம்மை அணுகும் ஒவ்வொரு பக்தரையும் அவரவர் தேர்ந்து கொண்ட மந்திரத்தில் அல்லது வாய்ப்பாட்டில், தயாராக இருந்து உடனே தீட்சை செய்து வைத்தார். தீட்சை பெற்ற பக்தர் இந்த நிகழ்ச்சி தம் வாழ்வில் மிகவும் முக்கியமான திருப்புமுனை

என்று உணர்ந்தார் என்பதற்கும் அந்த நாள் முதலாக அவர் தம் உள்ளத்தின் உள் மிகுந்த அமைதியையும், சொற்களால் விளக்க முடியாத பேரின்பத்தையும் அனுபவித்தார். என்பதற்கும் எண்ணற்ற சான்றுகள் உள்ளன. இது இயற்கையே; ஏனெனில் குருதேவர் எல்லா மந்திரங்களின் இலட்சியமாகிய தெய்வீகத் தன்மையை நேரடியாக, உடனடியாக அடைந்திருந்ததார். எல்லா மந்திரங்களின் நிறைநிலையை இது ஈட்டித்தந்திருந்தது. தெய்வீக சக்தியும், கருணையும் பாய்ந்து வரும் வாயிலாகக் குருதேவரே இருந்தார்; மந்திர தீட்சைச் சடங்கின்போது குருதேவர், சீடரின் வழிபாடு தெய்வத்திற்குரிய மந்திரத்தை உச்சரிப்பார்; சீடர் பின் தொடர்வார்; குருதேவரின் ஆன்மீகச் சக்தியுடன் மந்திரம் உடனே இணைக்கப்படும்; மந்திரம் உயிர் பெற்றுத் தன்னைப் பெறுபவரின் உள்ளத்தின் உள்ளே மைய இடத்தில் சுடர்விடும் சக்தியுடன் பதியும், குருதேவரிடம் இவ்வாறு தீட்சை பெற்றவர்கள் தாமாகவே மிக எளிதில் மந்திரத்தில் நிறைநிலையைப் பெற்று விடுவார்கள்.

கேட்பவர் உள்ளத்தைக் கிளர்ந்தெழச் செய்யும் பாடல்களால் அவர் ஆச்சரியம் மிகுந்த அற்புதங்களைச் செய்து காட்டினர். அந்த நாட்களெல்லாம் நாகரிகப் பகட்டு உன்னத ஆட்சி செய்து வந்த காலம்; படித்தவர்கள், இறைவனுடைய திருநாமத்தை உச்சரிக்க வெட்கப் பட்டார்கள். முடிந்த நிலையில் இறைவன் நாம ரூபங்கள் அற்றவர்; ஆகையால் இறைவனுடைய அவதாரங்களாகிய இராமபிரான், கண்ணபிரான் போன்றோருடைய திருநாமங்களைப் பாடுவதை எதிர்ப்பவர்களும் இருந்தார்கள். அது அவர்களுடைய கருத்து. இத்தகைய மக்களுக்கு வேண்டியிருந்த மருந்தெல்லாம் குருதேவரின் பேச்சைச் சிறிது நேரம் கேட்க வேண்டியதுதான்; அவர்கள் தங்கள் மயக்கத்தையும், அறிவில்லாத நடைமுறைகளையும், கொள்கைகளையும் காற்றில் வீசி எறிந்து விட்டுப் பொது மேடைகளில் அவருடன் சேர்ந்து கொண்டு, சிறிதும் மாற்றமின்றித்

தெய்வீகத் திருநாமத்தைப் பாடவும், ஆடவும் முற்பட்டார்கள். இதைக் காட்டிலும் பெரிய அற்புதம் வேறு என்ன இருக்க முடியும்? தம்முடன் தொடர்பு கொள்ளும் எவரும், தம்மையும் மீறிய வகையில், தெய்வீக அலைகளைப் பெறுமாறு, குருதேவர் இறைவனுடைய கமல பாதங்களில் கொண்டிருந்த உன்னதமான பக்தியில் அமைப்பு இருந்தது.

இறைவனுடைய உண்மையான பக்தர் பொறாமை, பகைமை, சினம், தற்பெருமை முதலான தீய குணங்களிலிருந்து முற்றிலும் விடுபட்டிருப்பார் என்பதற்கு குருதேவரே தம்முடைய பெருமை மிகுந்த வாழ்வை உதாரணமாக வாழ்ந்து காட்டினார். மடங்கள் எல்லாவற்றின் செல்வச் செழிப்பைக் கண்டு குருதேவர் களிப்படைந்தார்; நமக்குப் போட்டியாக உள்ளவை என்று நாம் கருதும் சங்கங்களை அவர் ஆசீர்வதித்து அவற்றின் முன்னேற்றத்திற்கு ஆவன செய்தார்; எல்லா நிறுவனங்களையும் அவர் மிகவும் புகழ்ந்தார். இது மிகவும் அரிதாகக் காணப்படும் ஒரு தெய்வீக குணம்; மிகப் பெரிய மகான்களிடம் கூட இது காணப்படுவதில்லை. குருதேவரிடம் இது ஆக்கபூர்வமான சக்தி மிகுந்த நோக்குடன் காணப்பட்டது; எங்கும் வியாபித்துள்ள தெய்வீகத்தின் பால் ஆழ்ந்த, முடிவில்லாத பக்தியைப் பயிற்சி செய்ததன் பயனாகும் இது.

தெய்வீகம் வாய்ந்த, தெய்வத்தின் அவதாரமாக அமைந்த குருதேவரின், நம்மால் புரிந்து கொள்ள முடியாத மர்மம் மிகுந்த சக்தியைக் கண்ணுற எடுத்துக் காட்டும் நிரூபனங்களாக, குருதேவரின் தெய்வீக வாழ்க்கை இயக்கமும், யோக வேதாந்த வனப் பல்கலைக் கழகமும், ஆசிரமமும், புனிதமான கங்கையின் கரையில் வேகமாக வளர்ந்துள்ள சிவானந்த நகரும், இன்று விளங்குகின்றன.

குருதேவர் போதித்துப் பரப்பிய, யோகங்களின் கூட்டுச் சேர்க்கைக்குச் சிவானந்த ஆசிரமம் ஓர் அற்புதமான,

திறமையுடன் விளங்குகின்ற, நினைவுச் சின்னமாகத் திகழ்கின்றது. அருகே ஓடும் கங்கையாற்றில் நீராடி உங்களைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுங்கள். கங்கையின் கரையில் அமர்ந்து இறைவனுடைய திருநாமங்களை உச்சரியுங்கள். அலுவலகத்தில் குருதேவரின் புனிதமான கூட்டுறவைப் பெறுங்கள். மருத்துவமனையில் உள்ள நோயாளிகட்குச் சேவை செய்யுங்கள். தன்னலமற்ற ஏதேனும் சேவையை அலுவலகத்தில் செய்யுங்கள்; ஞான யக்ஞத்தில் (ஆன்மீக அறிவைப் பரப்புவதில்) பங்கு கொள்ளுங்கள். நூலகத்தில் ஆன்மீக இலக்கியங்களைப் படியுங்கள். பஜனை மண்டபத்தில் இறைவனுடைய திருநாமங்களைப் பாடுங்கள். ஆலயத்தில் இறைவனுக்கு வழிபாடு செய்யுங்கள். யோகத்தில் வல்லமை வாய்ந்தவர்களின் வழிகாட்டுதலைப் பெற்று ஆசனங்களையும், பிராணாயாமத்தையும் பயிலுங்கள். ஆன்மீக மலர்ச்சியும், வளர்ச்சியும் பெற்ற உயர்ந்த மகான்களும் வேதாந்திகளும் வழங்கும் பொலிவுமிக்க பேருரைகளைச் செவிமடுத்துக் கேளுங்கள். கோயில் முற்றத்தில் அமர்ந்து சமய நூல்களைப் படியுங்கள். ஆசிரமத்தை அடுத்துள்ள காட்டினுள் சென்று குறிப்பிட்ட காலம் வரைக்கும் தங்கியிருந்து பிரம்ம விசாரத்தையும் (பரம் பொருளாக உள்ள பிரம்மத்தைப் பற்றிய விசாரணை) ஆழ்ந்த தியானத்தையும் செய்யுங்கள்.

ஆசிரமத்தில் உள்ள சமையலறை உங்கள் உடம்புக்கு வேண்டிய உணவை வழங்குகின்றது; அலுவலகமும், நூலகமும் உங்கள் உள்ளத்திற்கு வேண்டிய உணவை வழங்குகின்றது; வனப் பல்கலைக் கழக வகுப்புக்கள் உங்கள் அறிவுக்கு அறிவை வழங்குகின்றன; தோன்றாத் துணையாக உள்ள குருதேவரின் சன்னிதானம் உங்கள் ஆன்மாவுக்கு வேண்டிய உணவை வழங்குகின்றது.

ரிஷிகேசத்தில் இன்றுள்ள சிவானந்த நகருக்குக் குருதேவர் ஒரு காலத்தில் தாம் அணிந்திருந்த சட்டை தவிர வேறொன்றும் இல்லாதவராகக் கையில் காசு ஒன்றும் இல்லாதவராக வந்து பல ஆண்டுகள் வரைக்கும் பிச்சை

ஏற்று உண்டு, சக்திமிகுந்த பல்வேறு வகைகளிலும் இறைவனுக்குத் தொண்டும் வழிபாடும் செய்து வந்தார்; அந்தச் சிவானந்த நகர் தற்போது உலகம் முழுவதும் புகழும் அற்புதமான நிறுவனமாக வளர்ந்துள்ளது; சிவானந்த நகரில் உள்ள கணக்கற்ற கட்டிடங்களின் ஒவ்வொரு செங்கல்லும், அங்கு நடைபெறும் பல்வேறு நிகழ்ச்சிகளில் ஒவ்வொரு நிகழ்ச்சியும், இறைவன்பால் செலுத்தும் பக்தியின் பெருமையைச் செய்ய முறையாக எடுத்துக் காட்ட வந்த குருதேவராகிய தெய்வத்தின் இருப்புக்குச் சான்ருக விளங்குகின்றன; சிவானந்த நகரின் வசதிகளைப் பகிர்ந்து கொண்டு அங்கு வாழ்ந்து கொண்டு அழகான அப்பகுதிகளைப் பார்த்துப் பரவசமுற்று அனுபவித்து மகிழும் ஒருவர், குருதேவர் எப்படி இங்கு வந்து, எப்படி இதை நிறுவினுர் என்பதை மறந்துவிடக் கூடாது.

## குருதேவரின் அறிவாற்றல்

ஆன்மீகச் சக்திகளுடன், கூடவே வியக்கத்தக்க சில மனேசக்திகளையும் அறிவாற்றல்களையும், யோகி பெறுகின்ருர். முற்றிலும் நிறைவான இந்த மனக் கட்டுப் பாட்டினுல்தான் குருதேவரால் உலகுக்கு, முடிவில்லாத, இடையருத ஆருகிய மிக உன்னதமான ஆன்மீக இலக்கியங் களையும், எழுத்தோவியங்களையும் வழங்க முடிந்தது; அவை அவருடைய ஆழ்ந்த உள்ளுணர்வில் சுரந்தன; அவை படிப்பவருக்கு உயர்ந்த கிளர்ச்சியை ஊட்டி, உள்ளத்தை ஊடுருவிச் சென்று, அறியாமைத் திரையைக் கிழித் தெறிந்தன.

அவர் முன்னூறுக்கும்மேல் பல நூல்களை எழுதி யுள்ளார்; இதில் சிறிதும் ஐயமில்லை; ஆனுல் அவர் சக்தி மிகுந்த ஒரு நிறுவனத்தின் (எல்லாத் துறைகளுக்கும் உரிய ஆட்களை நியமித்தல், நிதிவசதி, நிர்வாகம் ஆகியவை பற்றிய சிக்கல்கள் எப்போதும் இருக்கக் கூடியது) தலைவர் என்பதையும், அதற்கு உலகம் முழுவதையும் பின்னிப் பிணைக்கின்ற கிளைகள் உண்டு என்பதையும், நிரந்தரமாகத்

தங்கும் 200 பேர்களையும், அதே எண்ணிக்கைகொண்ட பார்வையாளர்கள் வருகின்ற ஆசிரமத்தை நிர்வகித்து வந்தார் என்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். அவருடைய பேனாவிலிருந்து நூல்கள் நிலையாக உருவாகிக் கொண்டிருந்தன; திடசித்தம் இல்லாத முறையில் திடீரென்று தோன்றும் ஆவேசத்தினால் அல்லது ஆரம்ப சூரத்தனம் போன்ற துடிப்பினால் அவை தோன்றவில்லை. நாம் எல்லோரும் மன உற்சாகத்தை நம்பி இருப்போம்; அவர் அப்படி மன உற்சாகத்தை நம்பி இருக்கவில்லை. சமய நூல்கள் எழுதிய பலரையும்போல அவர் மனக் கிளர்ச்சிக்காக அமர்ந்து காத்திருக்கவில்லை. அவர் எந்நேரமும் மனக்கிளர்ச்சிபெற்ற நிலையிலேயே இருந்தார்; கிளர்ச்சியின் ஊற்று உலகெங்கும் படிப்படியாக அதைத் திறத்தல் மட்டுமே செய்ய வேண்டி இருந்தது. ஆராயவும் எழுதவும் நவநாகரிக வசதிகள் மிகுந்த படிப்பறை அவருக்குத் தேவையாக இருக்கவில்லை. பெட்டிகளும் அலமாரிகளும் புடைசூழ்ந்திருக்கும் அவருடைய அறையின் மூலை மட்டுமே அவருக்குப் போதியதாக இருந்தது. எழுத்துப் பணியில் தம்மை ஈடுபடுத்திக்கொள்ளும் நேரத்தில் அவர் சூழ்நிலை முழுவதையும் மறந்துவிடுவார். மிகவும் புகழ்பெற்ற நாவலாசிரியர்கள் செய்வதுபோல அவர் தம் கருத்துக்களை எல்லாம் சேகரித்துக்கொண்டு, பிறகு எழுதி நிறைவு செய்வதற்காக மலைப்பாங்கான ஊர்களை நாடிச் சென்றதில்லை.

குருதேவரின் ஆழ்ந்த, நீடித்த தியானப் பயிற்சி அவருடைய மனத்தில் மிகுந்த அற்புதமான விளைவை ஏற்படுத்தியது. ஒரு கணமாவது உள்முகமாகத் திருப்பு வதற்கு அது எப்போதும் ஏங்கிக் கொண்டிருந்தது. பஜனைப் பாடல்களின்போது, பேரின்பத்தின்பால் திரும்பியுள்ள இந்த உள்முகநோக்கு, மிகவும் தெளிவாகக் காணப்பட்டது. குருதேவரின் இடதுகண் பாதி மூடியவாறு வெறும்பார்வை பார்த்துக் கொண்டிருக்கும்; முகமோ மகிழ்ச்சியால் ஒளி பெற்றிருக்கும். பல்வேறு தெய்வங்களின் (பைரவர்,

நரசிம்மர், சூரியன், முதலிய கடவுளர்) மீது செய்யும் தியானம், குருதேவருக்குப் பலவிதமான அற்புதமான சக்திகளை வழங்கியிருந்தது. குருதேவர் அவற்றை அழைக்காமலேகூடத் தகுந்த சமயங்களில் அவை தாமாகவே வெளிப்பட்டன.

அலுவலகத்தில் ஒவ்வொரு நாளும் குருதேவரைச் சுற்றிலும் திரண்டிருந்த பல்வேறு இயல்புகளுள்ள மக்கள் கூட்டத்தைக்கண்டு பலரும் மிகுந்த ஆச்சரியம் அடைந்தனர். முற்றிலும் வேறுபட்ட சுபாவம் உள்ளவர்கள், வேறுபட்ட நாடுகளைச் சேர்ந்தவர்கள், வேறுபட்ட ஆசைகளும் நோக்கங்களும் உள்ளவர்கள். ஆகிய அனைவரும் தங்கள் சிக்கல்களுக்கான தீர்வையும், ஆறுதலையும், இரக்கத்தையும் தேடி வந்து குருதேவருடைய கமல பாதங்களை அடைந்தனர். தம்மைச் சுற்றியும் குழுமியுள்ள மக்களின்பால் குருதேவருடைய ஆளுமையில், நடத்தையில், மனப்பான்மையில் கணத்துக்குக் கணம் ஏற்படும் மாறுதல்களைக் கண்டு மக்கள் குழப்பமடைவது வழக்கம். எல்லாம் ஒரே மூச்சில் அவர் வருந்தியவர் மகிழ்ச்சி கொள்ளச் செய்தார்; உறவினரை இழந்தவர்கள் ஆறுதல் பெறச் செய்தார்; துன்புற்றவர்கள் துணிவு கொள்ளச் செய்தார்; சீடர்களுக்குக் கட்டளைகள் பிறப்பித்தார்; புதிய சாதகருக்கு தீட்சை அளித்தார்; சாதகர் ஒருவருக்குப் பிராணாயாமத்தைச் செய்து காட்டினார்; ஆங்கிலேயரைப்போல், தலையை அசைத்து நன்றி தெரிவித்தார்; இந்தியரைப்போல் இரு கரம் கூப்பி வணக்கம் செலுத்தினர்; உயர்ந்த ராஜரிஷியைப்போல் கண்களை மூடித் தியானம் செய்தார்; பாடம் கற்பிக்கும் தம் நகைச்சுவையுடன் தாமும் சிரித்து மற்றவர்களையும் சிரிக்க வைத்தார்.

இவை எல்லாவற்றையும் அவர் எவ்வாறு செய்தார்? அவருடைய உள்ளத்திலிருந்து பாய்கின்ற, எங்கும் வியாபித்துள்ள ஒரே அன்பினுடைய பல்வேறு வகையான வெளிப்பாடுகளாக இவை யாவும் இருப்பினும், யார் யாரிடத்து

அவை செலுத்தப்பட்டனவோ அவருடைய தேவைகளுக்கு ஏற்ப அவை வேறுபட்டிருந்தன. ஒவ்வொருவரும் தத்தமக்குத் தேவையானதைப் பெற்றனர். அசாத்திய மான காரியங்களைச் செய்யுமாறு அவர் கேட்டுக் கொள்ளப் பட்டார்; ஆனால் அனைவரிடத்தும் இரக்கமும், அன்பும் தவிர அவர் வேறு எதுவும் பாராட்டவில்லை; ஒவ்வொரு வருடைய குறையையும் எவ்வாறு நீக்குவது என்பதை அவர் அறிந்திருந்தார்; அதன் காரணம் மிகவும் எளியது; தம்மை அணுகும் அன்பருடன் அவர் உடனே மனங்கலந்து ஐக்கிய மாகிவிடுவார். அவர் உங்களுடன் உரையாடும்போது, நேசமும், அன்பும், இரக்கமும் நிறைந்த உங்கள் அன்னை யாகவே அவர் இருப்பதை உணர்வீர்கள். ஒரு சிறிய கூட்டத்திற்கு உரை நிகழ்த்திய அரை மணி நேரத்தில் அவர், ''உலகத்தை ஒரு புல்லைப் போலக் கருதித் துறவு பூணுங்கள். விழித்தெழுங்கள்'' என்று கூறுவார். பின்னர் அவர் கங்கையில் வழிபாடு செய்துக் கொண்டிருப்பதைக் காண் போம்; இப்போது அவர், வேறொருவராகக் காட்சியளிப் பார். புனித சந்நியாச தரும நெறியில் தம் சீடர்களுக்கு அவர் தீட்சை செய்து வைக்கும் நாளில் அவர் பிறிதொருவ ராகச் — சுடர்விடும் நெருப்பாக — இருப்பார்; நீங்கள் அவரைத் தொட முடியாது; அணுகவும் முடியாது. அந்த நிலையில் அவர் மிகுந்த ஒளியுடன் இருப்பார்; சாதகர்கள் குருதேவருடைய தெய்வீக உருவத்தை, அச்சத்தால் தாக்கப் படாமல், பார்க்க இயலாது. தம்முடைய ஆன்மீக ஆளுமையின் பல்வேறு வகையான தோற்றங்களைப் பற்றிக் குருதேவருக்கே தெரியாது முழுமையான, முற்றிலும் நிறைவான நிறைவுக்கு, நிறைவுக்குள் நிறைவான நிறைவுக்கு இவர் ஒரு சான்றாவார். அது அவருடைய இயற்கை. அவர் அமைதியைத் தம்மிடமிருந்து ஒளியுடன் பரவச் செய்தார்; இதுவே மிக மிக முக்கியமானது. புனிதமான கங்கையின் கரையில் தனியே அமர்ந்திருந்து உலகம் முழுவதும் அமைதியையும், பேரின்பத்தையும் தம்மிடமிருந்து குருதேவர் ஒளியுடன் பரவச் செய்தார்.

# அத்தியாயம் ஐந்து

## தன் உணர்வு

குருதேவரின் ஞானயோகம் அற்புதமானது; தனிச் சிறப்புள்ளது. உயர்ந்த ஆசாரியர்கள் (குருமார்கள்) அனைவரிடமிருந்தும், கடந்த காலத்தில் வாழ்ந்த ஒவ்வொரு ஞானியரிடமிருந்தும், துறவியரிடமிருந்தும் அவர் இவ்வகையில் தம்மைத் தெளிவாக வேறு படுத்திக் காண்பித்துக் கொண்டார். கர்மயோகிகள் சிலர் செய்ததுபோல அவர் வேதாந்தத்தைப் புறக்கணிக்கவில்லை; அத்வைதக் கொள்கையினர் அடிக்கடி விருப்பத்துடன் செய்ததுபோல் அவர் கர்மயோகத்தைப் புறக்கணிக்கவும் இல்லை. யோகாசனங்களைப் பொறுத்த வரையில் கூட 'நான் இந்த உடம்பு அல்ல' என்று வேதாந்திகள் கொள்ளும் தவறான வாய்பாட்டுக்கு எதிராக அவர் சாதகர்களை அடிக்கடி எச்சரிக்கை செய்தார். ஏனெனில் இதை அவர்கள் தம் சோர்வுக்கு ஒரு போர்வையாகப் பயன் படுத்தக் கூடும்; உடல் நலத்தைப் பாதுகாப்பது மிகவும் முக்கியம்; உடல் நலத்தை அவர்கள் புறக்கணித்து விடாமல் இருக்க அவர் எச்சரித்தார்.

வறட்டுக் கொள்கையில் மனம் சிக்கிவிடாமல் தடுப்பதற்காகச் சிறிது எச்சரிக்கை தேவைப்படுகின்றது. எனவே குருதேவர், பின்வரும் தெளிந்த வாய்பாட்டை வழங்கினார்; "பூத உடல்களின் மொத்த எண்ணிக்கையின் சேர்க்கையே இறைவனுடைய வியாபக (விராட் சொரூபம்.) மனங்கள் எல்லாவற்றின் மொத்த எண்ணிக்கையின் சேர்க்கையே இறைவனுடைய வியாபக அறிவு; (ஹிரண்யகர்ப்பன்) ஆன்மாக்கள் அனைத்தின் மொத்த எண்ணிக்கையின் சேர்க்கையே பரம்பொருள் (ஈசுவரன்)'' உடல், உள்ளம், தனி ஆன்மா ஆகியவற்றுக்குள்ள தொடர்பின் உண்மையை இது உடனடியாக அனுமதிக்கின்றது. ஞானத்தையும் கர்மத்தையும் அவர் இணைத்து ஒன்றாக்கினார்; வேதாந்தி

என்பவர் உலகத்தை வெறுத்து கெடுபிடியுடன் தனிமைப் படுத்திக் கொள்ளவேண்டும் என்பதை ஒப்புக்கொள்ள அவர் மறுத்தார். கர்மயோகமே வேதாந்தம் அல்லது பக்தியின் சக்திமிக்க பயிற்சி என்று அவர் முழங்கினார்.

1956-ஆம் ஆண்டு ஜனவரி 15-ந் தேதி, குருதேவர், ஆசிரம அதிகாரிகளுடன், ஒரு சிறிய நூலை அச்சிட்டதற்காக ஓர் அச்சகம் மிக அதிகமான கட்டணத்தை விதித்தது பற்றி விவாதம் செய்து கொண்டிருந்தார். அச்சிடுவோர். தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தை ஏமாற்றி இருப்பதாகப் பொதுவான ஓர் உணர்வு நிலவியது. மின்னல் ஒளியைப் போல் குருதேவரின் கூற்று பளிச்சிட்டது. ''நன்று, உங்களை ஏமாற்றியவர்களிடமிருந்து அந்தப் பணத்தைப் பெற்று நீங்களே அனுபவிப்பதாக நினைத்துப் பாருங்கள்; அவர்கள், நீங்களே, வேறுயாரும் அல்ல என்றும் கருதுங்கள்; அமைதி யும், மகிழ்ச்சியும் பெற இதுவே திறவுகோல்''. நிலையான அமைதிக்கும் உன்னதமான பேரின்பத்துக்கும் உரிய மேலான வேதாந்த வாய்ப்பாடு இது. தம்முடைய மகிழ்ச்சிக்காக உங்களைக் கொள்ளையடித்தவர், உங்களை ஏமாற்றியவர். உங்களுக்குத் தீங்கு இழைத்தவர், நீங்களே; அவருடைய களிப்பு அல்லது இன்பம் உங்களுடையதே! இவ்வாறு உணர்வதற்கு நீண்ட காலம் கடுமையாக உள்முக உழைப்பை மேற்கொள்ள வேண்டியுள்ளது. குருதேவரிடம் இந்த மனப்பான்மை இயற்கையாக இருந்தது; அவர் இந்த வாய்ப்பாட்டை உடனே அனுசரித்தமைக்கு நூற்றுக் கணக்கான உதாரணங்கள் உள்ளன.

ஆன்மீக சாதகர் உழைத்து அடையவேண்டிய குறிக் கோளை இப்போதே, இங்கேயே அடையவேண்டிய குறிக் கோளை வேதாந்தம் வழங்குகின்றதென்று குருதேவர் அழுத்தந்திருத்தமாக வற்புறுத்தினார். அந்தக் குறிக்கோள் யாது? அனைவர்க்கும் பொதுவாக உள்ள ஒரே உள்ளுணர்வை மெய்யாக உணர்வதேயாகும். இக்குறிக்கோளை மறவா திருக்கவும், உள்முக உற்சாகம் அணையா நெருப்பாக இருக்க

வும், குருதேவர் சாதகரிடம். ''ஞானியர் கூட்டுறவை நாடுங்கள்; வேதாந்தப் பேருரைகளைச் கேளுங்கள்; வேதாந்த வாய்பாடுகளைச் சிந்தித்துத் தியானம் செய்யுங்கள். ஆனால் உங்களின் நடைமுறைப் பயிற்சி [சரியான பயிற்சி] தன்னலமற்ற சேவையாகவும் கடவுள் பக்தியாகவும் இருக்கவேண்டும்'' என்று அறிவுரை கூறுவார். வேதாந்தம் பற்றிய வீண் தர்க்க வாதங்களை அவர் ஊக்குவிக்கவில்லை. வறட்டு வேதாந்த கருத்துக்களை அவர் கேட்கவும் இல்லை.

அகில இந்தியப் பயணத்தின்போது குருதேவர், வடமொழிக் கல்வியின் மிக உயர்ந்த பீடமாகிய வாரணாசிக்கு வருகை புரிந்தார். வாரணாசியில் வாழும் சான்றோர்கள் ஒரு வரவேற்பு விழாவை நடத்தினார்கள். எங்கள் குழுவில் இருந்த ஓர் அன்பர், குருதேவரிடம் வடமொழியில் கேள்விகள் கேட்கப்படுமோ என்று கவலைப்பட்டார். ஏனெனில் மிகச்சிறந்த வடமொழி நூல்கள் பலவற்றுக்கு அவர் உரைகளை எழுதியிருந்தார். நான் அவரிடம், ''குருதேவர் இதை எப்படிச் சமாளிக்கின்றார் என்பதை நாம் பொறுத்திருந்து காண்பேம்'' என்று தெரிவித்தேன். நிச்சயம் அவ்வாறே வரவேற்பின்போது குருதேவர் இரு வரிசைச் சான்றோர்களின் நடுவே அழைத்துச் செல்லப் பட்டார்; யாரோ ஒருவர் வடமொழியில் அவரிடம் ஒரு கேள்வியைக் கேட்டார்.

உடனே, சிறிதளவும் தயக்கம் இன்றி — அதுதான் அழகு — சுற்றிலும் திரும்பிய அவர், ''உரை'' சவா?'' உரை ''அப்பலே வா?'' என்று சொல்லியவாறே நடந்து சென்றுவிட்டார். அவை அவருக்கு யாரோ, கற்பித்த பிரெஞ்சு மொழியின் இரு வாக்கியங்கள், பாவம்! கேள்வி கேட்டார், குருதேவர் என்ன சொன்னார் என்பதைப் புரிந்து கொள்ளவில்லை; பொறுமையாகப் பார்த்து முகத்தைத் தொங்கவிட்டார். பகட்டாகக் காட்டிக் கொள்ளும் தந்திரங்களைக் குருதேவர் பயன்படுத்தியதே இல்லை.

அவர் அடிக்கடி கூறுவது, ''வேதாந்தம் என்பது நூல்களைப் படித்துத் தெரிந்து கொள்ளக் கூடியதன்று; ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு வேதாந்தத் தெளிவு பரிமாற்றம் செய்யப்படக்கூடியதும் அன்று. தன்னலமின்றி, அகந்தையின்றி அனைவருக்கும் சேவை செய்யுங்கள், செய்யுங்கள், செய்து கொண்டே இருங்கள். உங்களால் முடிந்த அளவில் இவையெல்லாவற்றையும் செய்யும்போது சக்தியுடன், களைப்பின்றிச் செய்யுங்கள். அதே சமயம் உங்களைக் கண்காணித்துப் பாருங்கள்; தன்னலம் இருக்கிறதா? அகந்தை இருக்கிறதா? பொறாமை இருக்கிறதா? பேராசை இருக்கிறதா என்று பாருங்கள். அதே சமயம் அப்படி இருப்பதை வேருடன் களைந்தெறிய முடிகிறதா என்றும் பாருங்கள். அப்போது அதே சேவை மற்றொரு வடிவம் பெறுகிறது; நிறை வழிபாடாகிய வடிவத்தைப் பெறுகின்றது''.

நாளடைவில் நீங்கள் வேதாந்த மெய்யுணர்வைப் பெறுவீர்கள். சலியாத தன்னலமற்ற சேவை என்னும் பயிற்சியால் உள்ளம் தூய்மைப்படுத்தப்பட்டுக் கடவுளிடம் செலுத்தும் பக்தி என்றும் பயிற்சியால் நிலையாகச் சமநிலைப் படுத்தப்படும்பொழுது, ஆத்ம ஒளி அதில் நிச்சயம் ஒளிவிடத் தொடங்கும். பின்னர் வேதாந்த நறுமணம் உங்களைச் சுற்றிலும் வீசும்; மக்களனைவரும் தாமாக உங்களிடம் கவர்ந்து இழுக்கப்படுவார்கள். நீங்கள் எங்கும் போய் விளம்பரம் செய்ய வேண்டியதில்லை. 1950-ல் குருதேவர் மேற்கொண்ட அகில இந்தியச் சுற்றுப்பயணத்தின்போதும், அதன் பிறகு ஆசிரமத்திலும், உண்மையாக எங்களுக்கு அந்த அனுபவம் ஏற்பட்டது. ஒவ்வோரிடத்திலும் மக்கள் கோடிக் கணக்கில் அவரைச் சுற்றிலும் திரண்டனர்; கோடிக் கணக்கான மக்கள் அவருடைய உரைகளைக் கேட்டனர். அவரைக் கண்ணில் கண்ட மாத்திரத்தில் தாங்கள் எல்லாவற்றையும் பெற்றுக்கொண்டதாக அவர்கள் உணர்ந்தார்கள்.

குருதேவரின் வாழ்க்கையே வேதாந்தத்திற்குரிய தெளிவான காட்சி விளக்கமாகும். அன்றாட வாழ்வில் அவர் வேதாந்தத்தைப் பயிற்சி செய்தார்; போதித்தார்; வேதாந்த உண்மைகளுக்கு அவர் வறண்ட, உதட்டளவுச் சேவையைச் செய்யவில்லை. ஆனால் அவரைப் பொறுத்த வரையில் நாம ரூபங்கள் உள்ள உலகம் நிலவவில்லை; பரம்பொருளாகிய பிரம்மமே நிலவியது. அவருக்கு வியாபகக் காட்சி ஏற்பட்டது; ஆதலால் தெய்வீகத் திட்டம் நிறைவேற வேண்டும் என்பதைத் தவிர அவருக்கு வேறு ஆசைகள் இருக்கவில்லை. குருதேவர் வழக்கமாக, மனதாரப் பாடிய பாடல்:—

''சர்வம் பிரம்மமயம் ஜகத், சர்வம் பிரம்மமயம்
சர்வம் பிரம்மமயம் நேஹ நாநாஸ்தி கிஞ்சன''.

(ஒவ்வொன்றும் பிரம்மமே; அதைத் தவிர வேறு ஒன்று இருப்பதாக எதுவும் இல்லை.)

முன் முயற்சியாகத் தயார் செய்யாமலே அவர் மேலும் பாடத் தொடங்குவன;

''மாதா பிதா பிரம்மம்; லட்கா லட்கி பிரம்மம்''.
(அன்னையும் தந்தையும் பிரம்மம்;
மகனும் மகளும் பிரம்மம்)
பாலும் ஆகுதியும் பிரம்மம்;
சூடான, சூடான தேநீரும் பிரம்மம்....''

வைராக்கியம் (பற்றின்மை) என்னும் அசையாத அடித்தளத்தின் மீது நிற்பது ஞானயோகம்; குருதேவர் இதைப் பிறவியிலேயே பெற்றிருந்தார். அவரிடம் இந்த வைராக்கியம் எப்போதும் அற்புதமான விவேகத்தின் (ஞானம்) அடிப்படையில் அமைந்திருந்தது. இளமைக் காலத்தில்கூட அவர்பால் நிறைஞானம் ஏற்பட்டிருந்தது; முடிவில் இதுவே அவரை ரிஷிகேசத்துக்கு அழைத்து வந்தது.

அறுவகைக் குணங்களாகிய சமம் (மனத்தைக் கட்டுப் படுத்தல்) தமம் (புலன்களைக் கட்டுப்படுத்தல்); திதிட்சை (பொறுமை); உபரதி (பொறிகள் தொடர்பு கொள்ளும் பொருள்களில் திருப்தி பெறுதல்); சிரத்தை (விசுவாசம்); சமாதானம் (ஒழுங்கான மன ஒருமைப்பாடு) ஆகிய வற்றில் அவர் நிறைவு பெற்றிருந்தார் என்று கூறினுல், அதுவே போதும். உலகில் உள்ள பொருள்களின்பால் அவருக்குக் கவர்ச்சி ஏற்படவில்லை; அனைவருக்கும் நன்மை செய்வதில் அவர் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். முன் னேற்றம் பெறுவதில் ஆசையுள்ள ஒருவரைப்போல் அவர் உற்சாகத்துடனும், நம்பிக்கையுடனும், பக்தியுடனும் ஒவ்வொரு பணியையும் ஏற்றுக்கொண்டு பணியாற்றி நிறைவு பெறச் செய்தார்; ஆனுல் குருதேவரின் உள்முக மனப்பான்மை வேறு வகையாக இருந்தது. இந்த உள்முக மனப்பான்மை நான்கு வழிகளில் நான்காவதாகிய முமுட்சுத்துவத்தை (முக்திபெற ஏங்குதல்) மெய்ப்பித்துக் காட்டியது. உலகத்தைத் துறந்த பிறகு அவர் இந்தியாவுக்கு வந்தபோது அவருடைய உள்ளத்தில் இருந்த ஒரே மையக் கருத்து ''நான் இப்போது இறைவனைப் பற்றிய மெய் யுணர்வைப் பெற வேண்டும்'' என்பதே என்று அவரே கூறிய சொற்கள், பிறிதோரிடத்தில் நாம் எடுத்துக்காட்டி இருக்கின்றோம். பிற சாதகர்களின் உள்ளத்தில் மிக உயர்ந்த வகையைச் சேர்ந்த முமுட்சுத்துவம் கிளர்ந்தெழச் செய்யுமாறு தம் ஒவ்வொரு செயலும் அமையுமாறு அவர் எப்போதும் நடந்து கொண்டார். கர்மத்தின் தளைகளையெல்லாம் அறுத்தெறியுமாறு அந்த அளவுக்கு அவருடைய செயல்கள் தன்னலமும், அகந்தையும், பற்றும் அற்றனவாக இருந்தன. இனிமேல் முக்தி பெறவேண்டும் என்ற ஆசைகூட இல்லாதவாறு, ஆனுல் ஏற்கனவே முக்தி பெற்றுவிட்ட நிலையில் அவர் வாழ்ந்து வந்தார்; இயங்கி வந்தார். ஏற்கனவே பெற்றுள்ள ஒரு பொருள்மீது யார் ஆசை கொள்ளுவார்? அவர் அந்த நிலையில் நிலையாக உறுதி பெற்றிருந்தார்; அவரைப் பொறுத்தவரைக்கும் திதிட்சை (பொறுமை)யை முயற்சி எதுவும் இல்லாமலே,

கைவரப் பெற்றிருந்தார். உடம்புக்கு ஏற்படும் வலியைப் பொறுத்துக்கொள்வதில், உலகத்திலேயே அவருக்குச் சமமானவர் யாரும் இல்லை என்று நிச்சயமாகக் கூறலாம். சக்திக்கு மீறிய உழைப்பு — குறிப்பாகவும் சிறப்பாகவும் மூளையைப் பற்றியது — அவருக்கு நீரிழிவு நோயை உண்டாக்கியது. குருதேவருடைய பணிக்குக் குந்தகம் ஏற்படாமல் தடுக்க வேண்டுமானால் இந்த நோயைக் கட்டுப் பாட்டில் வைத்துக்கொள்ள வேண்டும். நீரிழிவுக்கு மிகவும் பொதுவான சிகிச்சை இன்சுலின் என்பதே நிச்சயம். நாள்தோறும் ஓர் ஊசி, (பிற்காலத்தில் இரண்டு). இறுதிவரைக்கும் இது பல்லாண்டுகள் தொடர்ந்தது. ஆசிரமத்தின் இலவச மருத்துவமனைக்குத் தகுதிவாய்ந்த டாக்டர் ஒருவர் நியமிக்கப்படுவதற்கு முன்பு, குருதேவர் தாமே தம் உடம்பில் ஊசி போட்டுக் கொள்வார். 1950-ல் நடைபெற்ற சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த அகில இந்தியப் பயணத்தின்போது, யோகி சிவானந்தரின் மிகப் பெரும் அற்புதங்களில் ஒன்றை நாங்கள் கண்ணாரக் கண்டோம். இதற்குமுன் மேற்கொள்ளாத வருத்தம் மிகுந்த பேருழைப்பை இந்த மூப்படைந்த உடம்பு தாங்கிக் கொள்ள முடியவில்லை என்பதைக் காட்டியது. உண்மையில் அது கொன்று கொண்டிருந்தது. நாங்கள் சென்னை நகரில் இருந்தோம்; அங்கு நிகழ்ச்சிகளோ தாங்க முடியாத அளவுக்கு அதிகமாக இருந்தது. விடியற்காலை 6 மணி யிலிருந்து இரவு 10 மணி வரையில் குருதேவர் தொடர்ந்து இயங்கிக் கொண்டும், உரை நிகழ்த்திக் கொண்டும், பாடிக் கொண்டும் இருந்தார்.

1950-ல் அக்டோபர் 2-ந் தேதியன்று, குறிப்பிடத் தக்க இந்த நிகழ்ச்சி நடைபெற்றது. அருங்காட்சியகக் கொட்டகையில், நகர்வாழ் மக்களால் ஒரு வரவேற்பு நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஒரு கூட்டத்தை முடித்துக் கொண்டு அடுத்த கூட்டத்துக்கு அவர் சென்று கொண்டே இருந்தமையால் அவருடைய தொண்டை வறண்டு விடுவது வழக்கம்; எனவே நாங்கள்

ஆப்பிள் அல்லது ஆரஞ்சுப் பழச்சாறு நிறைந்த இரண்டு பிளாஸ்க்குகளைக் கையில் வைத்திருந்தோம்; அடுத்த கூட்டத்திற்குச் செல்வதற்குமுன் அவர் ஒரு வாய் பருகுவார். குறிப்பிட்ட நாள் மாலையில் பிளாஸ்க்குகள் காலியாக இருந்தன; உயர்நீதி மன்றத்தின் நீதிபதியாகிய வைதிக அந்தணர் ஒருவர் எங்களுடன் காரில் இருந்தார்; மண்டபத்தில் பெருந்திரளாகக் கூடியிருந்த மக்கள், குருதேவரின் உரையைக் கேட்பதற்காகக் காத்திருந்தார்கள். எனினும், ஆரஞ்சுப் பழச்சாறு சிறிதேனும் பருகாமல் செல்லவும், பேசவும் அவர் மறுத்து விட்டார். பிறகு நாங்கள் கொட்டகைக்குத் திரும்பிச் சென்றோம். உரை நிகழ்த்துவதற்கு முன்பு ஆரஞ்சுப் பழச்சாறு வேண்டும் என்று வற்புறுத்திய அதே சுவாமிஜி, மூன்று நாட்கள் கழிந்த பிறகு, அதே நகரில், முற்றிலும் வேறுபட்ட ஒரு நிகழ்ச்சியைச் செய்து காட்டினார்.

மூன்று, நான்கு நாட்களாக அவருக்கு வெப்பம் மிகுந்த காய்ச்சல் அடித்தது; தொண்டை மிகவும் வீங்கியிருந்தது; அபாயகரமான புண்கள் நிரம்பியிருந்தது; சிறிது இருமினாலும், மூக்கைச் சிந்தினாலும் வாயிலிருந்தும், மூக்கிலிருந்தும் இரத்தம் கொட்டியது. டாக்டர்கள் அச்சமுற்றனர். ஆனால் குருதேவர், பயண நிர்வாகிகளிடம் தம் நிலைபற்றிக் குறிப்பிடவே இல்லை; மக்களின் உள்ளத்தை விழிப்புறச் செய்யும் தம் சேவையில் குறுக்கிடுவதற்குத் தம் உடல்நலமின்மையை அவர் ஒருபோதும் அனுமதிக்கவில்லை. வானொலி வாயிலாகவும், நேர்முகமாகவும் சென்னையில் ஆயிரக்கணக்கான மக்கள் அவர் உரையாடுவதைக் கண்டனர்; கேட்டனர். நகர் முழுவதையும் அவர் வெற்றி கொண்டார் என்று ஒவ்வொருவரும் ஒப்புக்கொண்டனர். நாங்கள் சென்னையைவிட்டுப் புறப்படுவதற்கு முன்பு நடைபெற்ற கடைசிக் கூட்டம் மற்றொரு பெரிய மண்டபத்தில் நடந்தது மண்டபத்தின் உள்ளே ஏறத்தாழப் பத்தாயிரம் மக்கள் இருந்தனர்; உள்ளே நுழைய முடியாத மக்கள் 4000 அல்லது 5000 பேர் வெளியில் இருந்தனர். தண்டனையாக

அமைந்த இந்த நிகழ்ச்சியால் சுவாமிஜியின் உடம்பு, நிற்க முடியாதவாறு ஆட்டங்கண்டுவிட்டது. ஒலி பெருக்கியின் கம்பத்தைத் தமக்கு ஆதரவாகக் கையில் பற்றிக் கொண் டிருந்தார்; மேனியில் உள்ள ஒவ்வொரு ரோமத்துளையின் வாயிலாகவும், வியர்வை பொழிந்து உடைகள்யாவும் நனைந்து போயின. எனினும் அவர் நிறுத்தவில்லை. உடம்பின் தேவைகள் ஒரு நேரத்தில் நிறைவேற்றப்பட்டன; அதே உடம்புதான் இப்போது தன் பணியைச் செய்யுமாறு கட்டாயப்படுத்தப்பட்டது.

## குருதேவரின் குரு

சாதகர், நான்கு வழிகளாகிய தகுதிகளில் நிறைவு பெற்றபின், மெய்யுணர்வு பெறுவதற்கான ஆழ்ந்த ஆன்மீகப் பயிற்சியைச் செய்வதற்காகக் குருவின் கமல பாதங்களைப் புகல் அடையுமாறு கேட்டுக்கொள்ளப்படு கின்றார். இறைவனின் அவதாரமாக இருப்பவர், மலமோ (மன அழுக்கு) ஆவரணமோ (அறியாமைத்திரை) இல்லா தவர், யாரிடம் செல்ல வேண்டும்? தம் பாதையில் உள்ள தடைகளை நீக்குவதற்கும், ஆன்மீகப் பயிற்சியில் வழிகாட்டு வதற்கும், மெய்யுணர்வு பெறுவதில் விழிப்பை ஏற்படுத்து வதற்கும் குருதேவருக்கு எந்த ஒரு குருவும் தேவைப்பட வில்லை. தியானத்தில் எப்போதுமே தொல்லையை உணர்ந்த தில்லை என்றும், தம் பாதையில் தடை ஏற்படுத்துவதற்கு எந்த ஒரு தடையும் துணியவில்லை என்றும் குருதேவரே ஒத்துக் கொண்டிருக்கிறார். சந்நியாச மார்க்கத்தை அவர் தழுவிக் கொள்வதற்கு முன்பும் கூட, அவர் உலகத்தைத் துறப்பதற்கு முன்பு கூட, இவ்வாறுதான் இருந்தது.

எனினும், ஒரு குருவை அல்லது ஆசிரியரைப் பின்பற்ற வேண்டிய மிக உன்னதமான தேவையை வற்புறுத்துவதற் காகக் குருதேவர், மேதகு சுவாமி விஸ்வானந்தாஜி மகராஜ் அவர்களின் புனிதமான திருவடிகளை நாடினார். அல்லது அவர் அப்படிச் செய்தாரா? குருதேவர் ரிஷிகேசத்துக்கு

விந்து சிறிது காலஞ் சென்றபின், ''சரண்தாஸ் பொது ஓய்வு விடுதி''யின் முற்றத்தில் ஒரு நாள் இரவைக் கழித்தார். இந்த இளைஞர் அங்கிருந்த துறவியிடம் தாம் ரிஷிகேசத்துக்கு வந்த நோக்கத்தைத் தெரிவித்தார். அத்துறவிக்கு இந்தப் பூமண்டலேசுவரரின் (உலகத்தின் கடவுள்) எதிர்காலத்தைப் புரிந்து கொள்ள நீண்ட நேரம் பிடிக்கவில்லை; எனவே இவருக்கு குருவாக இருக்கும் மிக உயர்ந்த பெருமையைக் கவர்ந்து கொள்ள விரைந்து செயல்பட்டார். அடுத்த நாள் காலையிலேயே விஸ்வானந்தாஜி, டாக்டர் குப்புசாமிக்குப் புனிதமான சந்நியாச மார்க்கத்தில், ''சுவாமி சிவானந்த சரஸ்வதி'' என்ற தீட்சா நாமத்துடன் தீட்சை செய்து வைத்தார். இப்பெயர், சாதகர் உலகத்தில் ஒரு பழகிய பெயராக ஏற்பட்டுவிட்டது. தீட்சையைச் செய்து வைத்த பிறகு விஸ்வானந்தாஜி, தம் தெய்வீகச் சீடரிடம் விடை பெற்றுக் கொண்டு வாரணாசிக்குச் சென்று விட்டார்.

குருதேவருடைய வாழ்வின் தனிச் சிறப்பு, வெவ்வேறு மனோபாவங்களையுடைய எல்லா மக்களுக்கும் ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகின்றது. குருவின் கமலபாதங்களை அடைக்கலம் வேண்டிய சாதகருக்கும், அதுபோலவே ஏனையோருக்கும், அவர்களின் எண்ணிக்கை மிகமிகக் குறைவாக இருக்கலாம். அவர்கள் உயர்ந்த மலர்ச்சி பெற்றவர்கள். மனித இனத்தைச் சார்ந்த ஒரு குருவை நாடிச்செல்ல வேண்டாத அளவுக்கு மனத்தூய்மை வாய்ந்தவர்கள் அத்தகையோருக்கும் அவருடைய வாழ்க்கை ஓர் உதாரணம். அவர்கள் என்ன செய்யவேண்டும்? குருதேவரின் வாழ்வே அவர்களுக்கு வழிகாட்டி.

குருதேவரின் மனப்பான்மை தத்தாத்ரேய பகவானுடைய மனப்பான்மைக்கு இணையாக அமைந்திருந்தது. புனிதமான எண்ணத்தை வெளியிடும் ஒவ்வொருவரும், புண்ணியச்செயல் செய்யும் ஒவ்வொருவரும் அவருக்குக் குருவாக அமைந்தனர். தம் குருவின் அறிவுரையைக்

கேட்கத் தவறிவிடாமல் இருப்பதற்காக அவர் குழந்தை உள்ளம் படைத்தவர்களின் சொற்பொழிவுகளையும் மிகவும் கவனத்துடன் கேட்டார். தம் சீடர்களே தம்முடைய குருமார்கள் என்று அவர் வெளிப்படையாக அடிக்கடி உறுதியாகக் கூறியுள்ளார். ''அவர்களிடத்திலிருந்து நான் பாடங்கள் பலவும் கற்றுக்கொண்டேன்'' என்று அவர் கூறுவது வழக்கம். இந்த அசாதாரண மனப்பான்மை, சாதாரண மக்களுக்குக் கற்பனை செய்து பார்ப்பதுகூட மிகமிகக் கடினமாக இருக்கும். இதனுல் குருதேவர் நிரூபித்துக் காட்டியுள்ளது, ஒரு மிகப் பெரிய உண்மையாகும். குருவைத்தேடிச் செல்வதிலிருந்து தப்பித்துக்கொள்வது வசதியாக இருக்கும் என்ற கருத்துக்கும் இதற்கும் வெகுதூரம் உள்ளது. ஒரு குருவை நாடிச் செல்லவோ, அவருடன் வாழவோ விரும்பாத சாதகர் சுதந்திரமாக இருக்கின்றுர். சுதந்திரமாக இருப்பதனுல் அவர் தம் பணியாட்கள், சீடர்கள் ஆகியோரைக் கூடத் தம் குருமார்களாகப் பாராட்டும் அளவுக்கு அவர் தம்மைத் தாழ்த்திக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றுர். இப்படி ஒவ்வொருவரிடமும் அவர் நடந்து கொள்ளுகின்றுர். இங்கு ஒவ்வோர் ஆன்மீகப் பயிற்சியையும் போலவே, குருதேவர் அகந்தையை அது ஒளிந்து கொண்டிருக்கும் இடங்களிலிருந்து விரட்டி விடுவதற்காக மிகச்சிறந்த வழியைக் கண்டுபிடித்துள்ளார். நீங்கள் குறிப்பிட்ட ஒரு குருவை அடைய விரும்பவில்லையென்றுல் நல்லது. ஒவ்வொருவரையும் உங்களுடைய குருவாகப் போற்றுங்கள்.

குருதேவருடைய மிகப்பெரிய ஆசான் அனுபவமே. தாம் கடந்து சென்ற ஒவ்வொரு அனுபவத்திலிருந்தும் மற்றவர்கள் கடந்து செல்வதாகத் தாம் கண்ட அனுபவங்களிலிருந்தும் அவர் ஒவ்வொரு பாடத்தைக் கற்றுக்கொண்டார். இந்தப் பாடங்களை அவர் ஒருபோதும் மறக்கவில்லை. சான்றுக, அவர் தம் இளமைக் காலத்தில், ஒரு கடைத்தெருவில் இருந்த கடைகள் யாவும் எரிந்து சாம்பலானதைக் கண்டிருந்தார்; ஏனெனில் அவையாவும் ஓலை வேய்ந்த கொட்டில்

களாக இருந்தன. இந்த கூரைகள் பாதுகாப்பற்றவை என்று அவர் ஒரு பாடத்தைக் கற்றார். அதன் பிறகு தம் வாழ் நாளில் குருதேவர் யாரையும் குடிசையில் வாழ அனுமதித்த தில்லை. ஓலை வேய்ந்த குடிசையில் தங்குவதற்குப் பதில், திறந்த வெளியில் வாழவேண்டுமானாலும் அவர் உங்களை அனுமதிப்பார்.

இந்த வழி (அதாவது, மரபாக ஒரு குரு இல்லாமை) மிக உயர்ந்த அளவில் தெய்வீகக் குணங்கள் வாய்ந்து மிகுந்த மலர்ச்சி பெற்ற சாதகருக்கு மட்டுமே உரியது என்று குருதேவரே அடிக்கடிச் சுட்டிக் காட்டியுள்ளார். மற்றவர்கள் ஒரு குருவை அணுகவேண்டும்; அவரால் தீட்சை பெறவேண்டும்; அவருடைய நேர்முகவழி காட்டு தலின்படி ஆன்மீகப் பயிற்சிகளைச் செய்யவேண்டும்.

## சிரவணம், மனனம், நிதித்தியாசனம்

யோகவேதாந்த வனப்பல்கலைக் கழகத்தில் வகுப்புக்கள் நடைபெறும்போது, உறங்கும் சாதகரைத் தட்டி எழுப்பி நிறுத்துவது அவர் அடிக்கடி மேற்கொள்ளும் வழக்கம்; அவரிடம் ''வகுப்பின்போது நீங்கள் கேட்ட முக்கியமான கருத்துக்களைக் குறிப்பெடுத்து வைத்திருக்கிறீர்களா?'' என்று அவர் கேட்பார். பெரும்பாலும் சாதகர் அதைச் செய்திருக்கமாட்டார். ஆனால் குருதேவர் அப்படி இருக்க வில்லை. ஒருமுறை அவர், ''வகுப்பை முடித்துக்கொண்டு என்னுடைய அறைக்கு நான் வந்தவுடனே, சொற் பொழிவில் நான் தொகுத்த கருத்துக்களைச் சிந்திக்கின்றேன். அவற்றில் ஆழ்ந்து தியானம் செய்யும்போது அவற்றுடன் தொடர்புள்ள உயர்ந்த சிந்தனைகள் உதிக்கின்றன. இவை யெல்லாவற்றையும் ஒரு கட்டுரையாகச் சேர்த்து இணைத்து உலகத்திற்கு வழங்குகின்றேன்'' என்று கூறினார்.

இங்கு, குருதேவர், ஞானயோகத்தின் மூவகைப் பயிற்சி களாகிய சிரவணம், மனனம், நிதித்தியாசனம் ஆகிய வற்றைச் சுருக்கமாக விளக்கியுள்ளார்.

ஆன்மீகச் சொற்பொழிவின்போது கேட்ட சிந்தனைகளை அல்லது சமய நூல்களைப் படித்தபோது மனத்தில் பதிந்த எண்ணங்களை எழுதி வைத்தல் மனம் சோம்பல் அடையாமல் தடுப்பதற்கு நிச்சயமான வழியாகும். இந்தப்பயிற்சி, சிந்திக்கவும், முடிவில் ஆழ்ந்த தியானம் செய்வதற்கும் கூட உதவுகின்றது.

சான்றாக, ஒரு நாள் அதிகாலையில் குருதேவர் ஒரு வேதாந்த நூலைப்படித்தார்; அதில் பரம்பொருளின் இயற்கை சச்சிதானந்தம் (உண்மை, அறிவு, பேரின்பம்) என்று விளக்கப்பட்டிருந்தது. இந்தச் சுருக்கமான வாய் பாட்டைப் பற்றி அவர் தியானம் செய்தார்; அதில் மலர்ந்தது பின்வரும் பாடல்; நிர்க்குணத் தியானம் செய் வதற்கு அதாவது உருவமற்ற பரம்பொருளைத் தியானம் செய்தல் அற்புதமான துணையாக உலகத்தாருக்கு அதனை அவர் வழங்கினார்.

சத் — சித் — ஆனந்தம்
இருப்பு — அறிவு — இன்பம்
உண்மை — உணர்வு — இன்பம்
வாழ்க்கை — ஒளி — அன்பு
அமரத்துவம் — ஞானம் — மகிழ்ச்சி
யாவும் ஒரே பொருள்
அன்பு இன்பத்தில் கரைகின்றது.

அலுவலகத்தில் இந்தப் பாடலைப் படித்துக்காட்டிய பிறகு குருதேவர் எங்களிடம், "இதுவே நிர்க்குணத் தியானம்" என்று கூறினார். "சச்சிதானந்தத்தைப் பற்றிச் சிந்தியுங்கள். ஆன்மா அல்லது பிரம்மத்தை (பரம் பொருள்) நினையுங்கள். பிறகு சத் — சித் — ஆனந்தம் என்ற குணங்களுக்கு நிகரானவற்றை - பிரம்மத்தின் இயற்கையைச் சரியாகக் குறிக்கும் குணங்களைப் பற்றிச் சிந்தியுங்கள். இணையாக உள்ள குணங்கள் உங்கள் மனத்தில் தாமாகவே தோன்றும். பின்னர் அவற்றைப்பற்றித் தியானம் செய் யுங்கள். இதுவே நிர்க்குணத் தியானம். நீங்கள் மீண்டும்

மீண்டும் சிந்தித்துக்கொண்டே இருக்கவேண்டும், ''அது'' உண்மையைக் குறிக்கின்றது'' என்று திடீரென்று உங்கள் உள்ளத்தில் பளிச்சிடும்.

இதுபோலவே உபநிஷதங்கள், பகவத்கீதை போன்ற சமய நூல்களிலிருந்தும், சிந்திப்பதற்கும் தியானம் செய்வதற்கும் சில பகுதிகளைத் தேர்ந்தெடுத்தார்.

அஹம் ஆத்மா குடாகேச சர்வபூதஸ்ய ஸ்திதிஹி.
''எல்லா உயிர்களினுள்ளும் உறைகின்ற
ஆன்மா, நான்''.

ஈசா வாஸ்யம் இதம் சர்வம்.
''இவை எல்லாவற்றுள்ளும் இறைவன்
வியாபித்துள்ளார்''

ஏகம் ஏவ ந அத்விதீயம் பிரம்ம
''பிரம்மம் ஒன்றே; இரண்டற்றது!''

அற்புதமான, தனிச் சிறப்புள்ள இந்த நெறியைக் குருதேவர் சரணுகதி வாய்பாட்டுக்கும் பயன் படுத்தியுள்ளார். ''பாதுகாத்து வைத்துக்கொண்டிருப்பதைக் காட்டிலும் செய்வதற்கு எளிதானது சரணுகதி அடைதல். நெருப்பு அணைந்தாலும் உடனே அதன் மீது, அகந்தையின் இயற்கையாகிய 'நான்' என்று கருதும் செருக்கு, சாம்பலாகப் படர்ந்து மூடிவிடுகின்றது. பின்வரும் வாய்பாடுகளை அடிக்கடி உச்சரிப்பதன் வாயிலாக இதைத் தடுத்துக் கொள்ளலாம்;

ஹரி சரணம் மம,
ஸ்ரீ கிருஷ்ண சரணம் மம,
ஸ்ரீ ராம சரணம் மம,
துர்காம் தேவீம் சரணம் அஹம் ப்ரபத்யே,
ஸ்ரீமன் நாராயண சரணுன் சரணும் அஹம்
ப்ரபத்யே

இத்துடன், கீதையின் சுலோகம் :—

சர்வதர்மான் பரித்யஜ்ய
மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா சர்வ பாபேப்யோ
மோக்ஷயிஷ்யாமி மா சுச்ச.

(கடமைகள் எல்லாவற்றையும் புறக்கணித்து விட்டு, என்னையே சரணடைக; பாவங்கள் எல்லாவற்றிலிருந்தும் நான் உன்னை விடுவிப்பேன்; வருந்தவேண்டாம்.)

வேதாந்த ஒற்றுமை பற்றிய உண்மையின் ஆன்மீக நோக்கின் சக்திவாய்ந்த மெய்யுணர்வைத் தம் வாழ்வாகக் கொண்டிருந்த குருதேவருக்கு இவ்வுண்மை பற்றிய மெய் யுணர்வு ஒரு வெறும் கொள்கையாக இருக்கவில்லை. அவர் தெய்வீக வாழ்க்கையை வாழ்ந்தார். தெய்வீக வாழ்க்கை என்பது வாழ்விலிருந்து உங்களை நீங்களே பிரித்துக் கொண்டு சென்று வேறு ஏதோ தெய்வீகத்துக்குச் செல்வதன்று; இந்த வாழ்க்கை தானே தெய்வீகமாகக்கூடியது; நிறைவின் எல்லையைத் தொடுமாறு நிறை வாழ்க்கையாக வாழுங் காலத்தில், வாழ்வில் தெய்வீகம் கண்டுபிடிக்கப்பட வேண்டும். இதுவே தெய்வீக வாழ்க்கை. நீங்கள் எங்கே இருந்தாலும், எதைச் செய்து கொண்டிருந்தாலும் வாழ்க் கையில் இயற்கையாக அமைந்துள்ள தெய்வீகத்தைக் கண்டு பிடியுங்கள். உண்மையில் இது எங்கும் பரவியுள்ள பரம் பொருளை, எங்கும் நிறைந்துள்ள உள்ளுணர்வைக் கண்டு பிடிப்பதாகும். இவ்வகையான தெய்வீக வாழ்க்கையில் இல்லாமற்போவது அகந்தையுணர்வு ஒன்று மாத்திரமே.

''சிறுமையாகிய 'நான்' என்பதை அழித்துவிடுங்கள்,
வாழ்வதற்காக இறந்து போங்கள்.
தெய்வீக வாழ்க்கையை நடத்துங்கள்''.

'சிறுமையாகிய நான் என்பதை அழித்துவிடுங்கள்,' என்பது பேச்சில் ஓர் அணி, அது உண்மையில் இல்லை. உள்ளுணர்வு

ஆகிய உள்ளொளி விழிப்புற்று எழும்போது, திரை நீங்கும் போது, சிறுமையாகிய அகந்தை உணர்வு இருப்பதில்லை. அழித்தல், கொல்லுதல் என்பவற்றிற்குரிய வழக்கமான பொருளில் அதை அழிக்க வேண்டியதில்லை; கொல்ல வேண்டியதில்லை. இருளை நீங்கள் அழிக்க முடியாது; நிழலை நீங்கள் கொல்ல முடியாது. ஒளி வரும்போது அங்கே நிழல் இருப்பதில்லை. அதுவே தெய்வீக வாழ்க்கை. அதுவே அவருடைய வாழ்க்கை. உங்களையும் என்னையும் போல அவர் மகிழ்ச்சியும் அடைந்தார்; ஒவ்வொரு துன்பத்தையும் அடைந்தார். அவரைப் பொறுத்த வரையில் 'நான்' என்ற உணர்வு சிறிதும் இருக்கவில்லை. நாங்கள் அவருடன் இருந்த போது, அவர் எங்களிலிருந்து ஏதோ வேறுபட்டவர்போல நாங்கள் ஒருபோதும் உணர்ந்ததில்லை; எங்களைப் பார்க்கச் சிறுதும் கவலைப்படாமல் எந்நேரமும் தம் புருவ மத்தியைப் பார்த்துக் கொண்டிருக்கும் புனித மகானாக அவர் இருக்க வில்லை; இல்லவே இல்லை. அவர் எங்களில் ஒருவராக இருந் தார்; அவர் எங்களுடன் கேலி பேசினார்; அவர் எங்க ளோடு உடன் இருந்து நீராடி, உடன் இருந்து உண்டு வந்தார். அவர் எங்களுடன் சேர்ந்து பாடினார். அவர் எங்களுடன் சேர்ந்து விளையாடினார். அவர் எங்களுடன் சேர்ந்து அழுதார் — ஆம்! அவரால் அழ முடியும்.

இதன் மறு பக்கத்தில், அகில இந்தியப் பயணத்தின் போது அவர் வேதாந்த சிங்கமாக விளங்கினார்: பெரும் அதிகாரிகள் புடைசூழ்ந்திருக்கப் பொதுக்கூட்டங்களில் அவர் கர்ஜனை செய்தார். அங்கு அவர் குருதேவராகவும், பரம் பொருளாகவும், இறைவனின் அவதாரமாகவும் காட்சி யளித்தார்; அவருக்கு முன்னால் அமைச்சர்களும், நீதிபதி களும் அவருடைய கண்டிப்பான அறிவுரையைக் கேட்டு வாயடைத்துப்போன குழந்தைகளாகத்தான் காணப்பட் டார்கள். அவர்கள் கூட ஆன்மீக மெய்யுணர்வின் பெரு மையை உணர்ந்திருக்க வேண்டும்; இதனோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அழியும் உலகத்தின் மிகப் பெரிய பெரு மையும் சிறிதும் அடையாளம் இல்லாமல் மங்கி அழி

வதையும் உணர்ந்திருக்க வேண்டும். புவியை ஆளும் வலிமை மிகுந்த அரசராக இருந்தாலும், ஏழைப் பிச்சைக் காரராக இருந்தாலும் அல்லது கற்றறிந்த அறிஞராக இருந்தாலும், கல்வி பெறாத குழந்தையாக இருந்தாலும், குருதேவருக்கு அனைவரும் சமமே; அவரை வணங்கவும், நேசிக்கவும் அனைவரும் சமமான மதிப்புள்ளவர்களே. அவர் எல்லாருடனும் ஒன்றாக இருந்தார். அவருடைய ஆன்மீக மெய்யுணர்வின் பயன்களை மனித சமுதாயத்தில் உள்ள அனைவரும் அனுபவித்தனர். ஒவ்வொரு பொருளும், ஒவ் வொருவருக்கும் உரியது; ஏனெனில் அனைவரும் ஒரே தெய்வீகச் சுடரின் பொறிகள் ஆவர்; குருதேவர் இதை மட்டுமே அனைவருள்ளும் கண்டார்.

## முடிவுரை

இந்த ஐக்கிய யோகம், யோகங்களின் இணைப்பு, குருதேவர் மனித சமுதாயத்திற்கு வழங்கிய மிகப்பெரிய நன்கொடை. உலக அமைதிக்கும், உலக நன்மைக்கும், மனித இனத்தின் சகோதரத்துவத்தைப் பண்படுத்தி வளர்க்கும் பணிக்கும் செய்துள்ள மிகப் பெரிய நல்லுதவி. இந்த யோகம் பரந்த அடிப்படையைக் கொண்டது. எல்லா நாடுகளின், எல்லாச் சமய நூல்களும் போதிக்கின்ற போதனைகளின் சாரத்தைக் கொண்டது. சர்வ சமயங் களுக்கும் பொதுவாக உள்ள ஆதார நிலமாகும் அது.

யோகங்கள் இணைந்த இந்த இணைப்பைப் பயிற்சி செய்தால் ஒருவருடைய நல்ல பண்புகளை வளர்க்கின்றது; அவரிடம் பரந்த மனப்பான்மையை உண்டாக்குகின்றது. அவருடைய உள்ளத்தை மென்மைப்படுத்துகின்றது; அறிவை ஒளிபெறச் செய்கின்றது. உள்ளத்தில் உள்ளுணர்வை விழிப்புறச் செய்கின்றது. இந்த யோகத்தின் ஒளியில் மனிதன் வாழ்கின்றான்; அனைவரையும் நேசிக் கின்றான். அனைவருக்கும் சேவை செய்கின்றான். அவன் தன்னை நிறைவு படுத்திக்கொள்ளவும் தன் உள்ளத்தின்

உள்ளே இருக்கும் பலவீனங்களை அறவே நீக்கி விடவும், உயர்ந்த குணங்களை வளர்த்துக் கொள்ளவும் அயராது பாடுபடுகின்றான். தான் ஏற்றுக்கொண்டுள்ள சமயத்தைப் பற்றியும், தான் பின்பற்றிவரும் சமய நம்பிக்கையைப் பற்றியும், தனக்குரிய நாட்டைப்பற்றியும் வேறுபாடு கருதாமல், குருதேவரின் சீடர் அன்றாட வாழ்வில் மேன் மேலும் நல்லவராக வளர்கின்றார். சர்வஜன சகோதரத்து வத்தையும் சர்வஜன ஆன்ம நிலையையும் உணர்ந்துகொள்ள அயராது உழைக்கின்றார். குருதேவர் தம் சீடர்முன் வைத்த இலட்சியம் இதுவே. இந்த இலட்சியத்தை அடைய இடையறாது முயற்சி செய்வதனால் மனிதன் ஆதிமனிதனாக ஆகின்றான். அதை அடைவதனால் அவன் இறைவனை உணர்ந்து கொள்ளுகின்றான். குருதேவரின் யோகம் வருங்காலத்துக்குரிய யோகம் ஆகும்.

ஸ்ரீ குருபகவான் சிவானந்தப் பெருமான், யோகேஸ் வரேஸ்வரர், நம் அனைவருக்கும் உரிய உயர்ந்த புகலிடம், யாருடைய கமல பாதங்களின் ஒளி மிகுந்த தூசி நம்மைத் தூய்மைப்படுத்துகிறதோ அவர், நம்மைப் பாதுகாப்பா ராக! சம்சாரம் (உலக வாழ்வு) என்னும் வறண்ட பாலை வனத்திலும், இருளிலும் நமக்குரிய ஒரே ஊன்று கோலாக நமக்கு உதவி செய்வாராக! எல்லாம் வல்ல இறைவனின் அவதாரம் தம்முடைய தோன்றாத்துணையாகிய திருக்கரங் களால் மனித சமுதாயத்தை என்றென்றும்,

பொய்மையிலிருந்து சத்தியத்திற்கும்,
இருட்டிலிருந்து வெளிச்சத்திற்கும்,
மரணத்திலிருந்து அமரத்துவத்திற்கும்
வழி நடத்திச் செல்வாராக!

குருதேவரின் பெருமை ஓங்குக !

# சிவானந்தரின் போதனைகள்

நான்கு மணிக்கு எழுந்திருங்கள். ஜபம், தியானம் செய்யுங்கள்.

சாத்வீக ஆகாரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். வயிறு நிறைய உணவு எடுத்துக் கொள்ளாதீர்கள்.

பத்மாசனம் அல்லது சித்தாசனத்தில் அமர்ந்து ஜபம், தியானம் செய்யுங்கள்.

உங்கள் வருவாயில் பத்தில் ஒரு பங்கினை அல்லது ரூபாய்க்கு பத்து பைசாக்களை தர்மம் செய்யுங்கள்.

தினசரி பகவத் கீதையில் ஒரு அத்தியாயம் படியுங்கள்.

வீர்ய சக்தியைக் காப்பாற்றுங்கள். தனியாகப் படுத்துத் தூங்குங்கள்.

புகை பிடித்தல், போதை தரும் பானம், உயர்தர உணவு இவைகளை விட்டு விடுங்கள்.

ஏகாதசி தினம் உபவாசம் இருங்கள் அல்லது பால் பழங்களை மட்டும் எடுத்துக்கொள்ளுங்கள்.

தினசரி 2 மணி நேரம் மௌனத்தையும், சாப்பிடும் பொழுது மௌனத்தையும் கடைபிடியுங்கள்.

எந்நிலையிலும் உண்மையே பேசுங்கள். கொஞ்சமாக, இனிமையாகப் பேசுங்கள்.

தேவைகளை குறைத்துக் கொள்ளுங்கள். திருப்தியாக சந்தோஷமாக வாழ்க்கையை நடத்துங்கள்.

மற்றவர்களுடைய உணர்ச்சிகளை புண்படுத்தாதீர்கள். எல்லோரிடமும் அன்பாக இருங்கள்.

நீங்கள் செய்த தவறுகளை நீங்களே சிந்தித்துப் பாருங்கள்.

வேலைக்காரர்களையே நம்பி இருக்காதீர்கள். சுய தேவையை நீங்களே பூர்த்தி செய்து கொள்ளுங்கள்.

படுக்கையை விட்டு எழுந்தவுடனும் படுக்கைக்குச் செல்லும் முன்னும் கடவுளைத் தியானியுங்கள்.

உங்கள் கழுத்திலோ, அல்லது சட்டைப் பையிலோ ஜபமாலை ஒன்றை வைத்திருங்கள்.

தினசரி ஆன்மீக நாட் குறிப்பினை எழுதி வாருங்கள்.

